# தமிழ் அரிச்சுவடி

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| ச் | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| ட் | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| த் | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ந் | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ம் | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| ல் | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| வ் | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| ற் | ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| ன் | ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |

ஆய்த எழுத்து ஃ

முதற் பதிப்பு - 2006
இரண்டாம் பதிப்பு - 2007
மூன்றாம் பதிப்பு - 2008
நான்காம் பதிப்பு - 2009
ஐந்தாம் பதிப்பு - 2010
ஆறாம் பதிப்பு - 2011

எல்லா உரிமையும் இலங்கை அரசினர்க்கே.

2007 ஆம் ஆண்டு முதல் பாடசாலைகளுக்கு அறிமுகப்படுத்தப்படுகின்ற, புதிய பாடத்திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு வெளியிடப்படுகின்ற இந்தப் பாடநூல் கல்வி வெளியீட்டுத் திணைக்களத்தின் வழிகாட்டலுக்கு ஏற்ப, பாடநிபுணத்துவக் குழுவினாலும் பாடநூல் மதிப்பீட்டுக் குழுவினாலும் அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

**உங்களுக்குக் கிடைத்திருக்கும் இப்பாடநூலுக்காக அரசினாம் ரூபா 105.00 செலவிடப்பட்டுள்ளது.**

இந்நூல், கல்வி வெளியீட்டுத் திணைக்களத்தினால்,
சரஸ்வதி பிரசுராலயத்தில்
அச்சிடப்பட்டு, வெளியிடப்பட்டது.



இலவச விநியோகத்திற்காக

# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல்செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே



இலவச விநியோகத்திற்காக

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

ஆனந்த சமரக்கோன்
கவிதையின் பெயர்ப்பு.



இலவச விநியோகத்திற்காக



## அதிமேதகு சனாதிபதி அவர்களின் செய்தி

**அன்பான பிள்ளைகளே !**

நாம் அன்று சுதந்திரம் பெறும்போது எம்மைவிடவும் பின்னடைந்திருந்த பல நாடுகள் இன்று எம்மைப் பின்தள்ளி நீண்ட தூரம் முன்னேறிச் சென்றுவிட்டன. எனினும், இன்று நாம் அந்த நாடுகளைப் பின்பற்றவோ அந்த அபிவிருத்திகளின் சாயலைக் கொண்டு செயற்படவோ தயாராக வேண்டியதில்லை. அதே போன்று கைவிட்டுப்போன மரபுரிமைகளைப் பற்றிப் பேசிப் பேசித் தவிக்கவும் வேண்டியதில்லை. நாம் செய்ய வேண்டியதெல்லாம் அனைத்தையும் பின்தள்ளிச் சென்று உலகுக்கு அவர்கள் அடையாத அபிவிருத்தியொன்று தொடர்பான புதிய வழிகளைக் காட்டுவதேயாகும்.

அன்பான பிள்ளைகளே! நாம் இப்போது உங்களது எதிர்காலத்தைக் கட்டியெழுப்புவதில் ஈடுபட்டுள்ளோம்.

**மஹிந்த ராஜபக்ஷ**
**இலங்கை சனநாயக சோசலிசக் குடியரசின் சனாதிபதி**

(2010.08.15 ஆம் திகதியன்று அம்பாந்தோட்டை, மாகம்புர சர்வதேச துறைமுகத்திற்கு நீர்நிரப்பும் வரலாற்று முக்கியத்துவம் மிக்க நிகழ்வின்போது சனாதிபதி ராஜபக்ஷ அவர்கள் ஆற்றிய உரையின் ஒரு பகுதி).



இலவச விநியோகத்திற்காக

# கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

அன்பான பிள்ளைகளே,

எங்கள் தாய்நாட்டின் பெறுமதிமிக்க வளம் நீங்களே. கல்வியினூடாகவே உங்கள் பெறுமதி மெருகூட்டப்படுகிறது. இப்பணியை நிறைவேற்றுவதில் தொடர்ந்து அர்ப்பணிப்புடனுள்ள எமது நோக்கம், மிகச் சிறந்தவற்றை உங்களுக்கு வழங்குவதே.

அரசுக்கு மக்களால் செலுத்தப்படும் வரியைத் திரட்டிப் பெறப்படும் தேசியச் செல்வத்தைப் பயன்படுத்தி உருவாக்கப்பட்ட இந்நூலை உங்களுக்கு நன்கொடையாக அளிப்பது, அறிவுத் திறன்களும் நற்பண்புகளும் நிறைந்த ஒருவராக உங்களை ஆக்கும் எதிர்பார்ப்பிலேயேயாகும். இதனூடாக ஒளிபெறும் நீங்கள் தேசியச் செல்வத்திற்கு வளமூட்டுவீர்கள் என்பதில் எவ்வித ஐயமுமில்லை. இதயமற்ற, வன்மையான பாறையிலிருந்து கருணையையும் அன்பையும் வெளிப்படுத்துகின்ற சிலைகளை வடித்தவர்களும் கண்ணாடிச் சுவரின் மீது இலக்கிய நயமுள்ள வாசகங்களை எழுதியவர்களுமாகிய பெருமைமிக்க மூதாதையரின் வழிவந்த உங்களில் ஆக்கச் சிந்தனையை ஏற்படுத்த இந்நூல் கைகொடுக்கும்.

இந்நூலை உங்களுக்கு வழங்குவதற்காக அர்ப்பணிப்புடன் செயலாற்றிய சகலருக்கும் மற்றும் கல்வி வெளியீட்டுத் திணைக்களத்திற்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**பந்துல குணவர்தன**
கல்வி அமைச்சர்



இலவச விநியோகத்திற்காக

# முன்னுரை

பண்பும் அறிவும் வலிமையும் நிறைந்த பிள்ளைகளே வியத்தகு தேசத்தின் எதிர்பார்ப்பாகும். இதனை நிறைவேற்றத்தக்கதாக இலங்கை சனநாயகச் சோசலிசக் குடியரசு இந்நூலை உங்களிடம் வழங்குகின்றது.

இந்நூலை நன்றாகப் பயன்படுத்தி நல்லறிவு பெற்று உங்கள் வாழ்வை ஒளிமயமானதாக ஆக்கிக்கொள்வதற்கு வழிவகுப்பதுடன், தாய் நாட்டின் சௌபாக்கியத்தின் உண்மையான உரித்துடையவராக உங்களை ஆக்குவதற்கான வாயிலைத் திறந்து தருவதும் எமது எதிர்பார்ப்பாகும்.

உங்களிடம் வழங்கப்படும் இந்நூலை உங்கள் ஆப்த நண்பராகக் கருதுவதன் மூலம் நாட்டிற்குப் பயன்படும் பிரசையாக அமையும் பாதையில் நீங்கள் பிரவேசிப்பீர்கள். இப்பாதையில் நீங்கள் பிரவேசிக்கின்றமையால், இலங்கை மென்மேலும் அபிவிருத்தியடையும் என்பதில் ஐயமில்லை. அது மாத்திரமன்று. ஏழு கடலுக்கு அப்பால் உள்ள உலகை வெல்வதற்கும் இந்நூலின் மூலம் உங்களுக்கு வழங்கப்படும் அறிவு, மனப்பாங்குகள், திறன்கள் ஆகியன உதவும். ''கீழைத்தேய உலகின் மினுங்கும் முத்தின்'' பிரகாசம் தேர்ச்சிமிக்க உங்களால் மென்மேலும் அதிகரிக்கும்.

இந்நூலை வெளியிடுவதில் தமது தொழினுட்ப அறிவை வழங்கி, நேரத்தையும் உழைப்பையும் அர்ப்பணிப்புச் செய்த எழுத்தாளர்கள், பதிப்பாசிரியர்கள், பாடநூல் மதிப்பீட்டுச் சபை உறுப்பினர்கள் ஆகியோருக்கும் ஒத்துழைப்பை நல்கிய ஏனையோருக்கும் எனது நன்றி உரியது.

**டபிள்யூ.எம்.என்.ஜே. புஷ்பகுமார**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
''இசுருபாய''
பத்தரமுல்ல
2011. 05. 26



இலவச விநியோகத்திற்காக

# அறிமுகம்

இலங்கை அரசு அறிமுகம் செய்துள்ள கலைத்திட்டச் சீர்திருத்தங்களின் அடிப்படையில், தரம் 10 இற்குரிய 'சைவ நெறி'ப் பாடத்திட்டத்திற்கு அமைவாக, இப் பாடநூல் உருவாக்கப்பட்டுள்ளது.

புதிய கல்விச் சீர்திருத்தத்தின்படி கற்றல் - கற்பித்தற் செயற்பாடுகள் மாணவர்களுக்கு மகிழ்ச்சி தருவனவாக இருத்தல் அவசியம் ஆகும். அதற்கேற்ப இந்நூல் வடிவமைக்கப்பட்டுள்ளது. மேலும், மாணவரது வயதுமட்டம், வகுப்புமட்டம், என்பவற்றுக்குப் பொருந்தும் வகையிலும் பாடத்திட்டத்தில் உள்ள தேர்ச்சி, தேர்ச்சிமட்டம் என்பவற்றை அடையும் வகையிலும் உள்ளடக்கம், படங்கள், பயிற்சிகள், செயற்பாடுகள், பாடச்சுருக்கம் என்பன உள்ளடக்கப்பட்டுள்ளன. மாணவர்கள் சைவ நெறிப் பாடத்தை அறிவுக்காக மட்டும் கற்காது, அவர்களது வாழ்வில் நீண்டநாள் நிலைத்திருக்கும் வகையிலான முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இப் பாடநூலில் இடம்பெற்றுள்ள கதைகள், விளக்கங்கள், திருமுறைப் பாடல்கள் யாவும் மாணவரின் சமய அறிவு, விழுமியப்பண்பு, சுயமதிப்பீடு, சிந்தனைத்திறன் என்பவற்றுடன் அவர்களது மொழி ஆற்றலை வளர்க்கும் வகையிலும் அமைக்கப்பட்டுள்ளன.

இந்நூலை உரிய காலத்தில் எழுதி முடிப்பதற்குப் பல்வேறு வழிகளிலும் ஆலோசனை வழங்கியும் தமது நிறுவனத்தின் வளங்களைத் தந்துதவியும் பேருதவி புரிந்த அரசாங்க அச்சகக் கூட்டுத்தாபனத்துக்கு எமது நன்றியை உரித்தாக்குகின்றோம்.

இப்பாடநூலை வழுவின்றிக் கணினி எழுத்தமைப்புச் செய்தவருக்கும் இதில் உள்ள அட்டைப்படம் உட்பட சகல சித்திரங்களையும் வரைந்து உதவியவருக்கும் எமது நன்றி.

இப்பாடநூலை, மேலும் மேம்படுத்துவதற்கு உங்களின் ஆக்கபூர்வமான ஆலோசனைகள் வரவேற்கப்படுகின்றன.

**- நூலாக்கக் குழு**



இலவச விநியோகத்திற்காக

**கண்காணிப்பும் மேற்பார்வையும் - மீள் பதிப்பு 2011**

திரு. டபிள்யூ. எம். என். ஜே. புஷ்பகுமார

கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்

**வழிகாட்டல் - மீள் பதிப்பு 2011**

திருமதி.கே.வீ. நந்தனி ஸ்ரீயாலதா

ஆணையாளர் (அபிவிருத்தி)

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**இணைப்பாக்கம் - மீள் பதிப்பு 2011**

திரு. லெனின் மதிவானம்

உதவி ஆணையாளர்

**எழுத்தாளர் குழு**

திருமதி. கமலாம்பிகை கிருஸ்ணபிள்ளை

இ. ஆ. சேவை தரம் II

திருமதி. ச. இந்திராணி

இ. ஆ. சேவை தரம் II

**இணைப்பாளர்**

திரு. சீ. காண்டீபன்

அபிவிருத்தி அலுவலகர்

**சித்திரம்**

திரு. என். எஸ். ஞானகுமரன்

**கணினி எழுத்தமைப்பு**

திருமதி. ஹம்சகௌரி சிவசோதி

**பக்க வடிவமைப்பு**

அரசாங்க அச்சகக் கூட்டுத்தாபனம்



இலவச விநியோகத்திற்காக

# பொருளடக்கம்






இலவச விநியோகத்திற்காக

# 1 கடவுள்

சைவசமய வழிபாட்டில் கடவுள் நம்பிக்கை மிகப் பழங்காலந் தொட்டே காணப்பட்டு வருகின்றது. கடவுள் மனம், வாக்கு எல்லாவற்றையும் கடந்த, அதே வேளையில் நம் உள்ளும் இருப்பவர் என்பதால்,'கடவுள்' எனப்படுகின்றார். உயிர்கள் அனைத்திற்கும் மேலானவர் என்பதனால் தான் அவர், 'தலைவன்' என அழைக்கப்படுகின்றார். கடவுள் எல்லாம் வல்லவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் அறிபவர்; பிறப்பு இறப்பு அற்றவர்; ஆதியும் அந்தமும் இல்லாதவர்; துன்பங்களுக்கு உள்ளாகாதவர் கடவுள் எங்கும் நிறைந்தவர்; எல்லா உயிர்களிலும் கலந்து உள்ளார் என்பதைத் திருவருட்பயன் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

"அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரிலிறை நிற்கும் நிறைந்து"

அகரவுயிர் ஏனைய எல்லா எழுத்தொலிகளிலும் கலந்து நிற்பதைப் போன்று கடவுள் எல்லா உயிர்களிலும் அத்துவிதமாய்க் கலந்துள்ளான் என்பது அதன் பொருளாகும்.

சைவசித்தாந்தம் கடவுளுக்குச் சொரூபநிலை, தடத்தநிலை என இரு நிலைகளைக் குறிப்பிடுகின்றது. சொரூபநிலை என்பது, கடவுள் எல்லாவற்றையும் கடந்த குணங் குறிகள் அற்ற நிலையாகும். தடத்தநிலை என்பது ஆன்மாக்களுக்கு அருள்புரியும் பொருட்டு, ஒருபடி கீழே இறங்கி, உருவம் நாமம் குணங்குறி தொழில்களோடு ஆன்மாக்களுக்கு அருள்பாலிக்கும் நிலையாகும்.

கடவுள் ஒருவனே என்பதை இருக்கு வேத வாக்கியம் பின்வருமாறு குறிப்பிடுகின்றது. **"ஏகம் சத் விப்ரா வஹுதா வதந்தி"** என்பது அந்த வாக்கியமாகும். அதன் பொருள் உண்மைப் பொருள் (சத்) ஒன்றே. ஞானியர் அதனைப் பல பெயர்களால் அழைக்கின்றனர் என்பதாகும். கடவுள் ஒருவனே என்பதை மணிவாசகர் திருவாசகத்தில், **"ஏகன் அனேகன் இறைவனடி வாழ்க..."** என்றும் திருவியலூர் உய்யவந்த தேவர்,**"ஏகனுமாகி அனேகனுமாகி நாதனுமானவன்"** என்றும் குறிப்பிடுகின்றனர். அவன் ஒருவனாகவும் இருப்பான், பலராகவும் இருப்பான் என்பது இதன் பொருளாகும். கடவுள் இந்த உலகம் தோன்றுவதற்கும் ஒடுங்குவதற்கும் மூல காரணமாக இருப்பவர். **"அவனன்றி ஓர் அணுவும் அசையாது"** என்பது பழமொழி. கடவுளின் இச்சைப்படியே அனைத்தும் நடக்கின்றன.

கடவுள் எமது தலைவனாகவும், உறவாகவும் இருந்து எமக்கெல்லாம் அருள்பாலிக்கின்றார். இதனை அப்பர் தனது தேவாரத்தில், **"அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ அன்புடைய மாமனும் மாமியும் நீ "** என்று குறிப்பிடுகின்றார்.

"சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை
அவனொடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை"

இறைவன் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன் என்பதையும் அவரது தனித்துவத்தையும் இவ்வாறு திருமூலர் விளக்கியுள்ளார்.

"எங்கும் எவையும் எரியுறுநீர் போல் ஏகம்
தங்குமவன் தானே தனி"

கடவுள் எங்கும் கலந்துள்ள போதும், அவரின் தனித்துவத் தன்மையினை, திருவருட்பயன் இவ்வாறு குறிப்பிடுகின்றது. வெந்நீரில் சூடு சீராகப் பரவியிருப்பதைப் போல கடவுள் எங்கும் மறைந்தும் வியாபித்தும் உள்ளான். கடவுள் **அருவம், உருவம், அருவுருவம்** என **மூவகைத் திருமேனி**களை எடுத்து ஆன்மாக்களுக்கு அருள் பாலிக்கின்றான்.

கடவுள் உயிர்கள் மேல் கொண்ட பரிவு காரணமாக படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் **ஐந்தொழில்**களைப் புரிகின்றான். இவற்றை மேற்கொள்ள பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன், சதாசிவன் என்னும் மூர்த்தங்களையும் எடுக்கின்றான். கடவுள் **எண்குணங்களைக்** கொண்டவன்.



இலவச விநியோகத்திற்காக

முற்றுமுணர்தல், தூய உடம்பினராதல், தன்வயத்தனாதல், இயற்கை உணர்வினராதல், இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்குதல், பேரருளுடைமை, வரம்பிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகியவையே அவையாகும்.

ஒரு பானையை ஆக்குவதற்கு ஒருவன் தேவை. அது போலவே உலகத்தைப் படைப்பதற்கு ஒருவன் தேவை. அவனே கடவுள் என, சைவசித்தாந்தம் குறிப்பிடுகின்றது. பகலில் நட்சத்திரங்களைக் காணமுடிவதில்லை. அதனால், அவை இல்லையென்று சொல்லிவிட முடியுமா? கடவுளைத் தற்போது காணமுடியாத காரணத்தால், அவர் இல்லையென்று கூறக்கூடாது. நமது அஞ்ஞானத்தால் நாம் கடவுளைக் காணாது இருக்கின்றோம். அஞ்ஞானமாகிய மாயை நீங்கினால், நாம் கடவுளைக் காண இயலும்.

கடவுள் மீது எவரொருவர் பக்தி கொள்கின்றாரோ, அவருக்கு வேடம் தாங்கி வந்து அருள் பாலிப்பார். எடுத்துக்காட்டாக, சுந்தரமூர்த்தி நாயனாரின் திருமணத்தின்போது கிழப் பிராமணராக வந்து தடுத்தாட்கொண்டார். திருஞானசம்பந்தரின் தந்தையார் நீராடுவதற்கு நீரில் மூழ்கியதும் தந்தையைக் காணாது மகன் அழுதபோது, உமையம்மையுடன் இடபாரூடராகக் காட்சி கொடுத்து ஞானப்பால் ஊட்டினார். சுந்தரருக்கு சித்தவடம் என்னும் மடத்தில் வந்து, தீட்சை கொடுத்தார். செம்மனச்செல்வியின் பங்குக்குரிய வைகைநதியின் அணையைக் கட்டுவதற்காகக் கூலியாளாக வந்து, மன்னனிடம் அடிபட்டார். பன்றிக்குட்டிகளுக்கு, தாய்ப்பன்றியாக வந்து பால் கொடுத்தார். இவ்வாறாக, கடவுள் தமது பக்தர்களுக்கு இன்னல்வரும்போது அருள்பாலிப்பார். எனவே, நாமும் கடவுள் உண்டு என்பதை நம்பி, அவர் மீது பக்தி கொண்டு வழிபடுவோம்; அவர் வழி உண்மையுடையவராக வாழ்வோம்.

"ஒரு நாமம் ஓருருவ மொன்றுமில்லார்க்கு ஆயிரம்
திரு நாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டோமோ"

**01.பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. கடவுளுக்குரிய இருவகை நிலைகளையும் குறிப்பிடுக.
2. கடவுள் ஒருவரே உண்மை என்பதை விளக்குவதற்கு, நீங்கள் முன்வைக்கும் எடுத்துக்காட்டுக்களைக் குறிப்பிடுக.

## செயற்பாடு

1. கடவுள் ஒருவன் உண்மை என்பதை விளக்கும் நூலாதாரங்களைத் தேடித் தொகுத்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
2. சிவனின் மூவகைத் திருமேனிகள், ஐந்தொழில்கள், எண்குணங்கள் என்பவற்றை அட்டவணைப்படுத்தி, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- கடவுள் எல்லாம் வல்லவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் அறிபவர்; பிறப்பு இறப்பு அற்றவர்; ஆதியும் அந்தமும் இல்லாதவர்; துன்பங்களுக்கு உள்ளாகாதவர் ஆவார்.
- கடவுளுக்குச் சொரூபநிலை, தடத்தநிலை என இரு நிலைகளுண்டு.
- கடவுளின் இயல்புகள் பலவற்றையும் வேதம், ஆகமம், திருமுறைகள், சைவசித்தாந்த நூல்கள் முதலானவை எடுத்தியம்புகின்றன.
- எமக்கு இன்னல் வரும்போது, கடவுள் வேண்டிய வடிவில் வந்து அருள் புரிவார்.



இலவச விநியோகத்திற்காக

# 2 இறை சிந்தனையுடன் செயலாற்றுவோம்

நாம் எக்காரியத்தையும் தொடங்கும் போதும் இறை சிந்தனையுடன் ஆரம்பிக்க வேண்டும். அவ்வாறு ஆரம்பிக்கும் வேலை எந்தவித இடையூறுமின்றி நிறைவேறும். இதனையே, **"கடவுளை நம்பினோர் கை விடப்படார்"** என்ற கூற்று வலியுறுத்துகின்றது.

நாம் தினமும் அதிகாலை எழுந்து நீராடி, கடவுளுக்கு விளக்கேற்றி, பூ வைத்து, தோத்திரம் பாடிய பின்னர், எமது அன்றாடக் கடமைகளில் ஈடுபட வேண்டும். வீடுகளிலே அவ்வாறான வசதிகள் இல்லாதவர்கள் அவர்களுக்கு விருப்பமான ஆலயத்திற்குச் சென்று விளக்கேற்றிப், பூ வைத்து, தோத்திரங்கள் பாடி தங்களது நாளாந்த வேலைகளில் ஈடுபடுவது சிறந்தது. அவ்வாறு தினமும் ஈடுபடுவதனால் மனம் ஆறுதலடைவதுடன், மேற்கொள்ளும் செயல்கள் திருப்திகரமாகவும், சிறப்பாகவும் நிறைவேறும். இறை வழிபாட்டில் ஈடுபட்ட பின்னர் நாம் விபூதி, சந்தனம், குங்குமம், பூ போன்றவற்றை அணிதல் வேண்டும். அவை எம்மிடம் இறை சிந்தனையையும் நல்லெண்ணங்களையும் தோற்றுவிக்கின்றன. எம்மைப் பக்குவப்பட்ட ஆன்மாக்கள் ஆக்குகின்றன.

நாங்கள் எக்காரியத்திற்குச் செல்லும் முன்பும் வீட்டிலுள்ள எமது பெற்றோர்கள், பெரியோர்களை விழுந்து வணங்க வேண்டும். மாதா, பிதா ஆகிய இருவரும் எமது கண்கண்ட தெய்வங்கள் ஆவர். ஆதலால், அவர்களை வணங்கி, இறை சிந்தனையுடன் எமது கருமங்களில் ஈடுபடுதல் வேண்டும். நாம் வீடுகளில் தைப்பொங்கல், சித்திரை வருடப்பிறப்பு, தீபாவளி, கார்த்திகை விளக்கீடு போன்ற பண்டிகைகளைக் கொண்டாடுகின்றோம். ஒவ்வொரு பண்டிகையையும் கொண்டாடும் போது, அனைவரது உள்ளத்திலும் இறை சிந்தனை ஏற்படுகின்றது. அவ்வாறே, நவராத்திரி விழாவை வீடுகளில் கொண்டாடுவதனால், எமக்கு இறை அருளுடன் வீரம், செல்வம், கல்வி ஆகியனவும் கிடைக்கின்றது.

வீடுகளில் மட்டுமன்றி, பாடசாலைகளில் இடம்பெறும் காலைப் பிரார்த்தனைகளிலும் இறை சிந்தனையுடன் பங்கு கொள்ள வேண்டும். எமது கற்றல், கற்பித்தல் நடவடிக்கைகள் எந்தவித இடையூறுமின்றி திருப்திகரமாக அமைய வேண்டுமென இறைவனைப் பிரார்த்தித்தல் வேண்டும். ஆசிரியர்கள் வகுப்பறைக்கு வரும்போது எழுந்து நின்று வணக்கம் செலுத்துதல், அவர்கள் சொற் கேட்டு நடத்தல் நன்று. மேலும், பாடசாலைகளில் நாயன்மார்களதும் சமயப் பெரியார்களதும் குருபூசைத் தினங்கள், நவராத்திரி விழா என்பன தவறாது கொண்டாடப்படவேண்டும். அதனால், மாணவர்களிடையே இறை சிந்தனை, சமய நம்பிக்கை விருத்தியடைவதுடன், அவர்களிடம் பல்வேறு திறன்கள், ஆற்றல்கள் வளர்க்கப்படுவதுடன். ஆளுமை விருத்தியும் ஏற்படும். செயற்பாட்டு ரீதியிலான கற்றலுக்கும் வழியேற்படும். எடுத்துக்காட்டாக, கும்பம் வைத்தல், மாலைகட்டல், கோலம் போடுதல், சொற்பொழிவு போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

நாம் ஆலயத்திற்குத் தினமும் செல்ல வேண்டும். அங்கே செல்லும்போது, இறை சிந்தனையுடன் செல்ல வேண்டும். தினமும் ஆலயத்திற்குச் செல்ல முடியாதவர்கள், வெள்ளிக்கிழமை, தைப்பொங்கல், சித்திரை வருடப்பிறப்பு, தீபாவளி, சிவராத்திரி, நவராத்திரி, கந்தசஷ்டி, கார்த்திகை விளக்கீடு, பிரதோசம் போன்ற விசேட நாட்களிலாவது சென்று வழிபடுதல் வேண்டும். இவை தவிர, ஆலயங்களில் நடைபெறும் நித்திய, நைமித்திய, மகோற்சவக் கிரியைகளில் நாம் ஈடுபடுவதன் மூலம் எமது இறை சிந்தனையை மேலும் வளர்த்துக் கொள்வோம்.

**"சிவ சிவ என்றிடத் தீவினை மாளும்"**

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. எமது வீடுகளில் கொண்டாடும் பண்டிகைகள் சில தருக?
2. பாடசாலைகளில் நாம் கொண்டாடும் விழாக்கள் இரண்டு தருக?
3. இறை சிந்தனையுடன் கருமங்களில் ஈடுபட வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பிடுக?

**செயற்பாடு**

1. நீங்கள் வீடு, பாடசாலை, ஆலயம் ஆகிய இடங்களில் இறைசிந்தனையுடன் எவ்வாறு செயற்படுவீர்கள் என்பது குறித்து, வகுப்பறையில் சிற்றுரை ஒன்று நிகழ்த்துக.
2. இறை சிந்தனையை விருத்தி செய்யக்கூடிய திருமுறைப் பாடலடிகளைத் தேடித் தொகுத்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

**பாடச்சுருக்கம்**

- நாம் எக்காரியத்தை தொடங்கும்போதும் இறை சிந்தனையுடன் ஆரம்பித்தால் அது எவ்வித இடையூறுமின்றி இனிதே நிறைவேறும்.
- இறை சிந்தனை, சமயநம்பிக்கை என்பவற்றை விருத்தி செய்யக்கூடிய செயற்பாடுகள் பல எமது சமயத்தில் உள்ளன. அவற்றை நாம் கடைப்பிடிக்க வேண்டும்.
- ஆலயங்கள், வீடு, பாடசாலை முதலானவை இறை சிந்தனையை வளர்க்கும் இடங்களாகும்.
- எம்மிடம் இறை சிந்தனை மேலோங்கும்போது நாம் நல்லவர்களாவோம்.



இலவச விநியோகத்திற்காக

# 3 சமய வாழ்வில் ஒழுக்கம்

சமயம் என்றால் வாழும் முறை அல்லது வாழ்க்கை நெறி எனப்படும். மனித வாழ்வானது உயர்வானதும் அரிதானதும் ஆகும். நாம் அத்தகைய வாழ்வின் அருமையை உணர்ந்து, வாழ்வின் பல்வேறு கட்டங்களிலும் சமய ஒழுகலாறுகளையும் வழக்காறுகளையும் கடைப்பிடிக்க வேணடும். எமது சமய நெறிமுறைகள் மனிதனை வாழ்வாங்கு வாழச்செய்கின்றன; அவனைப் பண்படுத்துகின்றன; இறைவனை அறியும் உயர்நிலைக்கு இட்டுச் செல்கின்றன.

**'மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்**
**எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவில்லை'**

என சம்பந்தர் ஒழுக்க வாழ்வைக் குறிப்பிடுகின்றார். சைவநெறிமுறைக்கு உட்பட்ட வாழ்வானது ஓர் ஒழுங்குக்கு உட்பட்டதாக அமையும்போது அது ஒழுக்க நிலைக்கு உரியதாகவும் அமைகின்றது. சைவநெறியில் வாழ்வாங்கு வாழ்கின்ற, முறையான வாழ்க்கை நெறியாக ஒழுக்கம் அமைந்துள்ளது. இங்கு உயர்வான வாழ்க்கை என்பது ஒழுங்குக்கு உட்பட்டதான அறவாழ்க்கையையே குறிக்கின்றது. அறம் அல்லது ஒழுக்கம்தான் வாழ்க்கையை பூரணத்துவமாக்கும் என அறிஞர் கூறுவர். சைவ சமயம் இறைவன் மீது பக்தி கொள்ளுதலையும் வலியுறுத்துகின்றது. சமய வாழ்வில் பக்தி என்பது ஒரு நெறி. அது தன்னை அறிவதுடன் இறைவனையும் உணர வழிகாட்டுகிறது.

**"ஒழுக்கம் இல்லான் கண் உயர்வு இல்லை"** என்றும் **"ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை"** என்றும் **"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும்"** என்றும் **"பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார் நீடுவாழ்வார்"** என்றும் சுட்டி நிற்கும் பொய்யா மொழிப் புலவன் கூற்றுக்கள் ஒழுக்கத்தின் சிறப்பினை எடுத்தியம்புகின்றன. சமய வாழ்விலும் இதுவே அச்சாணியாக அமைகின்றது. உயிரை இழந்தவன் சடமாகின்றான். இவ்வாறு ஒழுக்கத்தின் சிறப்பை உணர்த்த முயன்ற வள்ளுவர், உயிரிலும் மேலானதாக ஒழுக்கத்தைக் குறிப்பிடுவது இதன் முக்கியத்துவத்தை உணர்த்துகின்றது.

சைவசமயி ஒருவனிடத்தில் தியாக மனப்பாங்கு, ஏழைகளுக்கு இரங்குதல், பிறரில் நிறை காணுதல், பிறரை நேசித்தல், பிறரின் கஷ்டங்களுக்காகப் பிரார்த்தித்தல் முதலான நற்பண்புகள் காணப்படும். இத்தகைய பண்புள்ளவர்கள் அன்பு, இனிமை, சாந்தம், அமைதி ஆகிய மனிதநேயப் பண்புகளையும் கொண்டிருப்பர்; இறையருளுடன் பிறருடைய துன்பங்களைத் துடைப்பதிலும் முன்னிப்பர். ஆதலால், நாமும் எமது வாழ்வில் மனிதநேயப் பண்பினைக் கடைப்பிடித்தல் அவசியமானது. முக்கியமாக சுயநலத்தைக் குறைத்து, பொதுநலத்தை வளர்த்தல் சமயத்தின் உண்மை நிலைப்பாடாகும். இதனையே,

**"எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே**
**அல்லாமல் வேறொன்றும் அறியேன் பராபரமே"** என்றும்

**"அன்பர் பணி செய்ய எனை ஆளாக்கிவிட்டால்**
**இன்ப நிலை தானே வந்தெய்தும் பராபரமே"** என்றும்

தாயுமானவர் பாடுகின்றார். திருவள்ளுவர் திருக்குறளில், பிறரின் துயரைத் தன் துயராகக் காண்கின்ற நற்பண்பினைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

**"அறிவினான் ஆகுவதுண்டோ பிறிதின்நோய்**
**தம் நோய்போல் போற்றாக் கடை"**

பிறர்க்கு இரங்குவதும் உதவுவதுமான மனிதநேயப் பண்பினைக் கந்தபுராணம் சிறப்பித்துக் கூறுகின்றது.

**"ஏவர் எனினும் இடருற்றனராகி**
**ஓவில் குறையொன்று உளரேல் அது முடித்தற்கு**
**ஆவி விடினும் அறனே"**



இலவச விநியோகத்திற்காக

பட்டினத்தார் நாம் செய்யக்கூடிய நற்செயல்களைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> **"ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு உயர்செல்வமெல்லாம்**
> **அன்பென்றிரு பசித்தோர் முகம்பார் நல்லறமும் நட்பும்**
> **நன்றென்றிரு நடு நீங்காமலே நமக்கிட்டபடி**
> **என்றென்றிரு மனமே உனக்குபதேசமிதே"**

நாவுக்கரசரும், **"என்கடன் பணி செய்து கிடப்பதே"** என்று பாடுவதனூடாக, சமய, சமூகப் பணியின் முக்கியத்தைக் குறிப்பிடுகின்றார். நாம், **"மக்கள் சேவையே மகேசன் சேவை"** என்ற உயர் தத்துவத்தை என்றென்றும் மனத்தில் கொள்ள வேண்டும். நாம் மக்கள் ஒவ்வொருவர் ஊடாகவே இறைவனைக் காண்கிறோம். நாம் நல்லன செய்திட வேண்டும்; அதனை நன்றே இன்றே செய்திடுவோம். தனிமனித மேம்பாடும், அதனை அடைவதற்கு மார்க்கமாக அமைகின்ற மானிட சேவையும் எம்மை நல்லவர்களாக மாற்றி விடட்டும்

நாம் அனைவரும் கடவுளுடைய குழந்தைகள். எமக்குள்ளே பேதமில்லை. ஒருவருக்கொருவர் அன்புடனும், கருணையுடனும், நட்புடனும் பழகும்போது குடும்ப, சமூக ஒருங்கிணைப்பு ஏற்படும். மேற்கூறிய நல்லொழுக்கப் பண்புகள் தனி மனிதனை மனிதநேயம் உள்ளவனாக மாற்றுகின்றன. ஏழை எளியவர்க்கு இரங்கும் தியாக மனப்பாங்கையும், பிறரில் நிறை காணுதல், பிறரை நேசித்தல் முதலான பண்புகளையும் வளர்க்கின்றன. இவற்றுடன் பிறரின் கஷ்டங்களுக்காகப் பிரார்த்திக்கும் பண்பும் வளர்ச்சியடையும். இவ்வாறு வளர்க்கப்பட்ட பண்பானது உலகம் தழுவிய அன்பாக மாற்றம் அடையும். அதுவே, **"யாதும் ஊரே; யாவரும் கேளிர்"** என்ற சர்வதேச சகோதரத்துவத்தை ஏற்படுத்தும்.

**"இன்பமே சூழ்க; எல்லோரும் வாழ்க"**

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சைவசமயி ஒருவனிடத்தில் இருக்க வேண்டிய நற்பண்புகள் நான்கினைக் குறிப்பிடுக.
2. பக்தி என்பதற்கு விளக்கம் தருக.
3. **"என்கடன் பணி செய்து கிடப்பதே"** எனப் பாடியவர் யார்? அத் தேவாரத்தை எழுதுக.
4. நீங்கள் பிறருக்காகச் செய்ய நினைக்கும் சேவைகளைக் குறிப்பிடுக.

## செயற்பாடு

1. ஒழுக்கத்தின் சிறப்பினை எடுத்துக்காட்டும் நூலாதாரங்களைத் தேடித் தொகுத்து, அவற்றை வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
2. சமய ஒழுக்கத்தின் முக்கியத்துவம் பற்றி வகுப்பறையில் பேசிக்காட்டுக.
3. வாழ்வில் மனிதநேயப் பண்பினைக் கடைப்பிடித்தல் அவசியமானது - இவ்விடயம் தொடர்பாக கட்டுரை ஒன்றினை எழுதி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- சைவசமய நெறிமுறைகள் மனிதனை வாழ்வாங்கு வாழச் செய்கின்றன; அவனைப் பண்படுத்தி, இறைவனை அறியும் உயர்நிலைக்கு இட்டுச் செல்கின்றன.
- சைவசமயி ஒருவனிடத்தில் தியாக மனப்பாங்கு, ஏழைகளுக்கு இரங்குதல், பிறரில் நிறை காணுதல், பிறரை நேசித்தல், பிறரின் கஷ்டங்களுக்காகப் பிரார்த்தித்தல் முதலான நற்பண்புகள் காணப்படும்.
- எமது வாழ்வில் மனிதநேயப் பண்புகளைக் கடைப்பிடித்தல் அவசியமானது.
- நாம் உலகம் தழுவிய அன்பினை வளர்த்துக் கொள்வோம்.



இலவச விநியோகத்திற்காக

# 4 வாழ்வியற் சடங்கு

சடங்குகள் மனித வரலாற்றுடன் இணைந்தவையாகும். ஆதி காலத்தில் வாழ்ந்த மனிதன் இறைசிந்தனையோடு வாழ்வதற்காகவும் தங்களுடைய அச்ச உணர்வைப் போக்குவதற்காகவும், மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதற்காகவும், தொழில்களைச் செய்யும்போது சடங்குகளை மேற்கொண்டான். நாகரிகம் வளர வளர சடங்கு முறைகள் பல்வேறு நிலைகளிலும் வளர்ச்சியடைந்தன. இச் சடங்குகள் இன்றும்கூட கிராமிய மக்களிடையே பின்பற்றப்பட்டு வருகின்றன.

சைவ பாரம்பரியத்தில் வாழ்க்கை வட்டச் சடங்குகள், தொழிற் சடங்குகள், கோயிற் சடங்குகள் எனப் பல்வேறு நிலைப்பட்ட சடங்குகள் பயிலப்பட்டு வருகின்றன. அவற்றுள் ஏர்மங்கலம், முளைச் சடங்கு, பொலிச் சடங்கு முதலானவை வேளாண்மை நடவடிக்கை சார்ந்த தொழிற் சடங்காகவும், ஆயுத பூசை சமய வழிபாட்டுடன் கூடிய தொழிற் சடங்காகவும் கடைப்பிடிக்கப்படுகின்றன. அவை பற்றி இங்கு படிப்போம்.

## (அ) ஏர்மங்கலம்

உழவன் தனது தொழிலை ஆரம்பிக்கும்போது முதல் முதலாக மேற்கொள்வது **ஏர்மங்கலச் சடங்கு** ஆகும். இதற்குப் பஞ்சாங்கத்தில் நாள் குறித்துக் காட்டப்பட்டுள்ளது. குறிப்பிட்ட நாளில் குறித்த நேரத்தில் வயலுக்குச் சென்று தமது குலதெய்வத்திற்குப் பூசையும் பொங்கலுமிட்டு, மாடு, கலப்பை (ஏர்) போன்றவற்றை வணங்கி, உழவை ஆரம்பிப்பது **ஏர்மங்கலம்** எனப்படும். ஏர்மங்கலம் செய்ய முன்னர், உழவர் தம்மைத் தூய்மைப்படுத்தி, வயலிலே தம் குலதெய்வத்திற்குச் சடங்குப்பந்தல் போட்டு, அதனைத் தென்னங்குருத்து, பூமாலைகள், வாழைக்குலை போன்றவற்றால் நன்கு அலங்கரிப்பர். ஏரைத் தெய்வமாகப் பாவனைசெய்து அதற்கு விபூதி, சந்தனம், குங்குமம், மாலை என்பன இட்டு வணங்குவர்.

அதன் பின்னர், உழவன் தனது குலதெய்வத்திடம் "தொழில் நன்றாகச் சிறப்புற, நல்ல விளைவு தர வேண்டும்; மாடு, ஏர் என்பவற்றுக்கு எந்த வித ஆபத்துக்களும் வரக் கூடாது" என்று வேண்டுதல் செய்து, உழவை ஆரம்பிப்பான். தற்காலத்தில் நவீன இயந்திரக் கலப்பைகள் அறிமுகம் செய்யப்பட்டுள்ளன. இயந்திரக் கலப்பைகளால் உழுபவர்களும் மாட்டுக் கலப்பைக்குச் செய்யும் அதே வழிபாட்டினைச் செய்து, அதனை வணங்கியே உழவை ஆரம்பிக்கின்றனர்.

## (ஆ) முளைப்புச் சடங்கு

உழவன் தனது வாழ்வியல் சடங்கிலே முளைப்புச் சடங்கினையும் முக்கியமானதாகக் கருதுகின்றான். இதற்குரிய நாள் பஞ்சாங்கத்திலே **வித்து நாள்** எனக் குறிக்கப்பட்டுள்ளது. இந்தக் குறித்த நாளில் விவசாயி தங்களது குலதெய்வத்துக்குப் பொங்கி, மடைபரவி, பூசை செய்து, வழிபட்டுக் குறித்த வயலின் ஒரு மூலையில் அல்லது குறித்த சிறிய இடத்தில் நெல்லை விதைத்து, நீர் தெளித்து சடங்கினைச் செய்வான். இது உழவுத் தொழிலில் இரண்டாவது கட்டமாகும். இச்சடங்கின்போது விதைக்கப்பட்ட முளை எவ்வாறு செழித்து வளர்கின்றதோ, அதேபோல அந்தப் போகத்துக்குரிய வேளாண்மையும் செழித்து வளரும் என்பது அவனது நம்பிக்கையாகும்.

## (இ) பொலிச் சடங்கு

வயல் விளைந்ததும் உரிய காலத்தில் அவற்றை அறுவடை செய்து, ஓர் இடத்தில் குவித்துச் **சூடு** வைக்கப்படும். இவ்வாறு குவிக்கப்பட்ட நெற்கதிர்களைச் சூடு மிதித்து நெல்லையும், வைக்கோலையும் வேறாக்குவர். சூடு மிதிப்பதற்கு முன்பாக மேற்கொள்ளப்படும் சடங்கு **பொலிச் சடங்கு** எனப்படும். பொலிச்சடங்கின் போது பல்வேறு நிகழ்வுகள் இடம்பெறும். சூடுமிதிக்கப்படும் இடம் **களம்** எனப்படும். சூடுமிதிப்பதற்கு முன் களம் காவல் செய்யப்படும். வேப்பிலை, இரும்புத்துண்டு, விபூதி, சந்தனம், குங்குமம் போன்ற பல்வேறு பொருட்களை மந்திரித்து, களத்தின் நடுவிலே புதைத்து விடுவர். அதன்பின், அந்த இடத்திலே உழவர் தனது குலதெய்வத்திற்குப் பந்தல் போட்டு, பொங்கி, மடைபரவி, பூசைகள் செய்வர். குலதெய்வத்தை அவ்விடத்தில் வரவழைத்து, தனது தொழிலைக் காப்பாற்றித் தருமாறு வேண்டுதல் செய்வர். அதன் பின் மாடு அல்லது இயந்திரத்தின் மூலமாக சூடு மிதிக்கப்படும். அவ்வேளையில்,



இலவச விநியோகத்திற்காக

"பொலி பொலி தாயே
பொலி தம்பிரானே
பூமா தேவித் தாயே பொலி பொலி"

என்னும் பாட்டைப் பாடிக் கொண்டு, மாட்டை அதன் மேல் மிதிக்கவிடுவர். மிதித்து வைக்கோலை வேறாக்கிய பின், அவற்றைக் காற்றிலே தூற்றி மூடையாகக் கட்டி வீட்டிற்குக் கொண்டு செல்வர். தூற்றிய நெல்லில் கடவுளுக்கு என்று ஒரு பங்கினை எடுத்து வைப்பது எமது சைவ மரபாகும்.

### (ஈ) ஆயுத பூசை

தொழில் புரிவோர் தொழில் சிறப்படைவதற்கு உதவிய ஆயுதங்களை வணங்குதலே **ஆயுத பூசை** எனப்படும். இவ்வாறான நிகழ்வு நவராத்திரி பூசையின் இறுதி நாளான விஜயதசமியில் இடம்பெறும். அன்றைய தினம் தமது குலதெய்வத்திற்குப் பொங்கல் படைத்து, பூசைகள் செய்வர். உழவர்கள் மட்டுமன்றி சகல தொழில் புரிபவர்களும் மாணவர்களும் தங்களது தொழிலுக்குப் பயன்படுத்தப்படும் உபகரணங்களை வீட்டிலே பூசையின்போது வைத்து வழிபடுவது மரபாகும்.

இவ்வாழ்வியல் சடங்கு முறையானது பிரதேசத்திற்குப் பிரதேசம் வேறுபட்டுக் காணப்படும். குறிப்பிட்ட பிரதேசத்தில் நடைமுறையில் உள்ள வாழ்வியல் சடங்குகளை ஏனைய பிரதேசங்களில் அவதானிக்க முடியாது என்பதும் குறிப்பிடத்தக்கது.

01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. விவசாயிகள் மேற்கொள்ளும் சடங்குகள் மூன்று தருக.
2. ஏர்மங்கலம் என்றால் என்ன?
3. ஆயுத பூசை யாரால், மேற்கொள்ளப்படும்?
4. முளைப்புச் சடங்கு எப்போது மேற்கொள்ளப்படும்?
5. பொலிச் சடங்கு என்றால் என்ன?

### செயற்பாடு

1. பொலிச் சடங்குடன் தொடர்புடைய வேறு பாடல்கள் மூன்றினைச் சேகரித்து எழுதி காட்சிப்படுத்துக.
2. வாழ்வியல் சடங்குகளுடன் தொடர்புடைய கலைச்சொற்களையும் அவற்றுக்கான விளக்கங்களையும் எழுதி, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- சைவப் பாரம்பரியத்தில் வாழ்க்கை வட்டச் சடங்குகள், தொழிற் சடங்குகள், கோயிற் சடங்குகள் எனப் பல வகைச் சடங்குகள் உள்ளன.
- ஏர்மங்கலம், முளைச்சடங்கு, பொலிச் சடங்கு முதலானவை வேளாண்மை நடவடிக்கை சார்ந்த தொழிற் சடங்குகளாகும். ஆயுதபூசை சமய வழிபாட்டுடன் கூடிய சடங்காகும்.
- வாழ்வியல் சடங்குகள் பிரதேசத்திற்குப் பிரதேசம் வேறுபட்டமையும்.
- வாழ்வியல் சடங்குகளுடன் சமய நிகழ்ச்சிகளும் ஒன்றிணைந்து காணப்படுகின்றன.


இலவச விநியோகத்திற்காக

# 5 விரதங்களும் பண்டிகைகளும்

விரதங்கள், பண்டிகைகள் என்பன சைவமக்களின் வாழ்வில் இடம்பெறும் முக்கியமான திருநாட்கள் அல்லது நிகழ்வுகளாகும். அவற்றை நாம் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுக வேண்டும்.

## (அ) விரதங்கள்

'விரதமாவது மனம் பொறிவழிப் போகாது நிற்றற் பொருட்டு உணவை விடுத்தேனும், சுருக்கியேனும் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினாலும் கடவுளை மெய்யன்போடு விசேடமாக வழிபடல்' என நாவலர்பெருமான் குறிப்பிடுகின்றார். சைவ மக்களால் அனுட்டிக்கப்படும் விரதங்களில் மாத விரதங்களான தைப்பூசம், மாசி மகம், பங்குனி உத்தரம், பங்குனித் திங்கள் பற்றியும் கடவுளுக்குரிய விரதங்களான பெருங்கதை விரதம், கேதார கௌரி விரதம், மார்கழித் திருவாதிரை விரதம், கந்தசஷ்டி விரதம், திருப்பாவை பற்றியும் கற்போம்.

### ( i ) மாத விரதங்கள்

#### 1. தைப்பூசம்

பூசம் என்பது பஞ்சாங்கம் குறிப்பிடும் 27 நட்சத்திரங்களுள் எட்டாவதாகும். தை மாதத்தில் வரும் பூசம் என்பதால் தைப்பூசம் என வழங்கப்படுகின்றது. இந்நாளினைப் புண்ணிய நாளாக இந்துக்கள் போற்றுகின்றனர். தைப்பூசநாள் பெரும்பாலும் பௌர்ணமியுடன் கூடிய நாளாக இருக்கும். தேவர்களின் குருவான பிரகஸ்பதி பூச நட்சத்திரத்தின் தேவதை. அவர் அறிவின் தேவதையாகவும் இருப்பதனால், தைப்பூச தினத்தில் விரதமிருந்து அவரை வணங்கினால் அருள் கிடைக்கும் என்பர். மேலும், இத்தினம் சிவசக்தி ஐக்கியத்தைக் காட்டும் திருநாளாகவும் முருகனுக்குரிய விசேட விழா நாளாகவும் கொண்டாடப்படுகின்றது. தைப்பூசத் திருநாள், உலக சிருஷ்டியின் ஆரம்ப நாள் எனவும் பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகிய இருவரும் காணும்படி நடராஜப் பெருமான் சிவதாண்டவம் ஆடிய நாளாகவும், வாயு, வருணன், அக்கினி ஆகிய தேவர்களும் சிவபெருமானின் அதீத சக்தியை உணர்ந்த நாளாகவும் குறிப்பிடுவர். தைப்பூச தினத்தில் புண்ணிய நதிகளில் நீராடினால் பாவம் நீங்கி, மிகுந்த நற்பலன் கிடைக்கும் என்பர்.

தைப் பூச நாளினை விசேட நாளாகக் கொண்டு ஏடுதொடக்கல், புதிதெடுத்தல், புதிதுண்ணல், பெண் குழந்தைகளுக்குக் காது குத்துதல், மூக்குக் குத்துதல் முதலான நற்செயல்களை மேற்கொள்வர்.

#### 2. மாசி மகம்

மாசி மாதத்தில் வரும் மக நட்சத்திரம் பௌர்ணமியோடு சேர்ந்து வருவதனால் அத்தினம் மிக விசேடமானது. வருணனைப் பிடித்த தோசம் நீங்கிய நாளும், தக்கன் மகளாக தட்சாயினி அவதரித்த திருநாளும் இதே நாள் எனக் கூறப்படுகின்றது. மேலும், வியாழபகவான் மக நட்சத்திரத்துடன் கூடிய கும்ப ராசிக்குச் செல்லும் புண்ணிய காலம் **மகாமகம்** எனப்படும். இது பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நிகழும். தமிழ்நாட்டில் கும்பகோணம் என்னும் தலத்தில் மகாமகம் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. தமிழ் நாட்டில் அன்றைய தினம் கடலாடும் தினமாகும், இலங்கையிலுள்ள சக்தி ஆலயங்களில் ஒன்றான மாத்தளை முத்து மாரியம்மன் ஆலயத்தில் இத்தினத்தில் தேர்த்திருவிழா நடைபெறுகின்றமை குறிப்பிடத்தக்கதாகும்.

#### 3. பங்குனி உத்தரம்

பங்குனி மாதத்தில் வரும் உத்தர நட்சத்திரத்துடன் கூடிய பௌர்ணமி தினத்தில் இறைவன், இறைவியைத் திருமணம் செய்த நாளாகப் போற்றப்படுகின்றது. அன்றைய தினத்தில் சிவ விரதமான கலியாணசுந்தர விரதத்தை அனுட்டித்து, கலியாணசுந்தர மூர்த்தியை வழிபடுவர்.

#### 4. பங்குனித் திங்கள்

பங்குனித் திங்கள் அம்மனுக்கு உரிய விரத நாளாகும். அந்த மாதத்தில் வரும் திங்கட்கிழமைதோறும் அம்மனை நோக்கி விரதம் இருந்து, பொங்கலிட்டு வழிபட்டு அவள் அருள் பெறுவர். யாழ்ப்பாணத்திலுள்ள பன்றித்தலைச்சி அம்மன் ஆலயத்தில் இவ்விரதம் சிறப்பாக அனுட்டிக்கப்படுகின்றது.



இலவச விநியோகத்திற்காக

## ( ii ) கடவுளுக்குரிய விரதங்கள்

### 1. பெருங்கதை விரதம் (விநாயக சஷ்டி விரதம்)

விநாயகப் பெருமானுக்குரிய விரதங்களில், வெள்ளிக்கிழமை விரதம், விநாயக சதுர்த்தி விரதம், விநாயகர் சஷ்டி விரதம் என்பன குறிப்பிடத்தக்கவை. அவற்றுள் விநாயக சஷ்டி விரதம் பற்றி நோக்குவோம். கார்த்திகை மாதத் தேய்பிறைப் பிரதமை தொடக்கம் மார்கழி மாத வளர்பிறைச் சஷ்டி வரையுள்ள இருபத்தொரு தினங்கள் விநாயகசஷ்டி விரதம் அனுட்டிக்கப்படும். இவ்விரதம் பெருங்கதை விரதம், பிள்ளையார் கதை விரதம், பிள்ளையார் நோன்பு எனப் பல பெயர்களால் வழங்கப்படும்.

இவ்விரதத்தை அனுட்டிப்பவர்கள் பின்வரும் நியதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும்.

- விரத ஆரம்ப நாளில் இருபத்தொரு இழைகள் கொண்ட காப்பை ஆண்கள் வலக்கையிலும் பெண்கள் இடக்கையிலும் கட்டிக் கொள்ளல்.
- முதலிருபது தினங்களும் ஒரு பொழுது நண்பகலில் உணவு உண்ணல், இரவில் பால், பழம் உண்ணல்.
- இறுதித் தினத்தில் உபவாசம் இருத்தல்.
- நாள்தோறும் பூசையில் இளநீர், கரும்பு, மோதகம், அவல், எள்ளுருண்டை முதலானவற்றை நிவேதனம் செய்தல்.
- பாரணைத் தினத்தின் காலைப் பொழுதில் பவித்திரமாகக் காப்பை அவிழ்த்தல்.

இவ்விரதநாட்களில் இலங்கையிலுள்ள விநாயகர் ஆலயங்களிலும் சைவ ஆலயங்களிலும் வரதபண்டிதரின் பிள்ளையார் கதை, விநாயக புராணம், விநாயக கவசம் என்பவற்றைப் பாராயணம் செய்யும் வழக்கம் நெடுங்காலமாகப் பேணப்பட்டு வருகின்றது.

### 2. கேதாரகௌரி விரதம்

சிவபெருமானுக்குரிய விரதங்களில், சிவராத்திரி விரதம், கேதாரகௌரி விரதம், மார்கழித் திருவாதிரை விரதம், பிரதோஷ விரதம் என்பன குறிப்பிடத்தக்கவை. அவற்றுள் கேதாரகௌரி விரதம், மார்கழித் திருவாதிரை விரதம் என்பன பற்றி நோக்குவோம்.

கேதாரகௌரி விரதம் புரட்டாதி மாதத்தில் சுக்கிலபட்ச (வளர்பிறை) அட்டமி முதல் (எட்டாம் நாள் முதல்) கிருஷ்ணபட்ச (தேய்பிறை) சதுர்த்தசி (பதினான்காம் நாள்) ஈறாகிய இருபத்தொரு நாள்கள் கேதாரநாதரைக் குறித்து அனுட்டிக்கப்படும் விரதமாகும். அவ்வாறு அனுட்டிக்க இயலாதவர்கள், கிருஷ்ணபட்ச (தேய்பிறை) பிரதமை (முதலாம் நாள்) முதல் சதுர்த்தசி (பதினான்கு) ஈறாகிய **பதினான்கு நாள்** ஆயினும், கிருஷ்ணபட்ச (தேய்பிறை) அட்டமி (எட்டாம் நாள்) முதற் சதுர்த்தசி (பதினான்கு) ஈறாகிய **ஏழு நாள்** ஆயினும், கிருஷ்ணபட்ச சதுர்த்தசியாகிய **ஒரு நாள்** ஆயினும் விரதம் அனுட்டிக்கலாம்.

இவ்விரதத்தை அனுட்டிப்பவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய நியதிகள் பின்வருமாறு அமையும்.

- விரதத் தொடக்க நாளில் இருபத்தொரு இழைகள் கொண்ட காப்பை ஆண்கள் வலக்கையிலும் பெண்கள் இடக்கையிலும் கட்டிக் கொள்ளல்.
- முதலிருபது தினங்களும் ஒரு பொழுது நண்பகலில் உணவு உண்ணல்.
- நாள்தோறும் (இருபத்தொரு நாட்கள்) பூசையில் எள்ளுருண்டை, மஞ்சளுருண்டை, அதிரசம், வாழைப்பழம், தேங்காய், வெற்றிலை, பாக்கு என்பவற்றை வகைக்கொன்றாக வைத்து, நிவேதனம் செய்தல்.
- இறுதி நாளாகிய சதுர்த்தசியிலே பூசை செய்து, உபவாசம் இருத்தல்.
- அடுத்த நாளில் பாரணை செய்தல்.

உமாதேவியார் இவ்விரதத்தை அனுட்டித்து, சிவபெருமானின் இடப்பாகம் பெற்றார். திருக்கேதாரம் என்னும் தலத்திலுள்ள கேதாரேஸ்வரரை, கௌரியம்மை வழிபட்டு, இடப் பாகமிருக்கும் பேறு பெற்றதனால் இவ்விரதம், **கேதார கௌரி விரதம்** என வழங்கப்படுகின்றது.

### 3. மார்கழித் திருவாதிரை

மார்கழி மாதம் தேவர்களுக்கு விடியற் காலமாக (வைகறைப் பொழுதாக)க் கருதப்படும். இம்மார்கழியில் வரும் திருவாதிரை நட்சத்திரம் தில்லை நடராஜப் பெருமானைக் குறித்து அனுட்டிக்கும் விரதமாகும். மேலும், திருவெம்பாவை வழிபாட்டுக்குரிய பத்துத் தினங்களில் இறுதிநாளாக அமைவது மார்கழித் திருவாதிரையாகும்.



இலவச விநியோகத்திற்காக

இத்தினத்தில் உபவாசம் இருத்தல் வேண்டும். இவ்விரதத்தை சிதம்பரத்தில் அனுட்டிப்பது உத்தமம். அங்கு நடைபெறும் **'ஆருத்திரா தரிசனம்'** என்னும் ஆதிரை விழாவைத் தரிசனம் செய்ய இயலாதவர்கள் நம்நாட்டிலுள்ள காரைநகர் ஈழத்துச் சிதம்பரம், திருக்கேதீச்சரம், திருக்கோணேச்சரம், பொன்னம்பலவாணேச்சரம், முன்னேச்சரம், கொக்கட்டிச்சோலைத் தான்தோன்றீச்சரம் முதலிய சிவத்தலங்களிலும் ஏனைய பிற சிவ ஆலயங்களிலும் திருவாதிரை விழா, வழிபாடுசெய்து, இவ்விரதத்தை நோற்பதும் நாம் காணக்கூடியதொன்றாகும்.

பதஞ்சலி, வியாக்கிரபாதர் போன்ற முனிவர்கள் தரிசித்து மெய்மறந்து நின்ற தில்லை நடராஜப்பெருமானின் ஆடற்கோலம் என்றும் காணத்தக்கது. அதனைக் கண்ணாரக் கருத்தாரக் காண மனிதப்பிறவி எடுக்க விரும்புவதாக அப்பர் பெருமான் குறிப்பிடுகின்றார். அவர் பாடிய் **"குனித்த புருவமும்"** என்ற தேவாரம், திருமூலர் பாடிய **"அரன்துடி தோற்றம்"** என்ற திருமந்திரம் என்பன திருவாதிரைத் தரிசன தினத்தில் ஓதத்தக்கதாகும்.

### 5. **கந்தசஷ்டி விரதம்**

முருகப்பெருமானுக்குரிய விரதங்களில், வெள்ளிக்கிழமை விரதம், திருக்கார்த்திகை விரதம், கந்தசஷ்டி விரதம் என்பன குறிப்பிடத்தக்கவை. அவற்றுள் தலையாய விரதமாக அமைவது கந்தசஷ்டி விரதமாகும். ஐப்பசி மாதத்துத் தீபாவளி அமாவாசையை அடுத்து வரும் வளர்பிறையில் பிரதமை தொடக்கம் சஷ்டி வரையுள்ள ஆறு நாட்களும் முருகப் பெருமானை விசேடமாக வழிபட்டு நோற்கும் விரதம் கந்தசஷ்டி விரதமாகும். செல்வங்கள், சுகபோகங்கள், நற்புத்திரப்பேறு என்பவற்றை முன்னிட்டு முருகனைக் குலதெய்வமாகவோ இஷ்ட தெய்வமாகவோ வழிபடுவோரும் பிறரும் இவ்விரதத்தை அனுட்டிப்பர். முருக பக்தர்கள் இவ்விரதத்தை ஒரு கடுந் தவமாகக் கருதி ஆறு தினங்களும் உபவாசம் இருத்தல் வழக்கம். இயலாதவர்கள் முதல் ஐந்து நாட்கள் ஒரு வேளை உண்ணுதலும் ஆறாம் நாள் உபவாசம் இருத்தலும் நடைமுறையாக உள்ளது.

இவ்விரதத்தை அனுட்டிப்பவர்கள் பின்வரும் நியதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும்.

- விரதத்துக்கு முதல் நாளான அமாவாசைத் தினத்தில் ஒரு வேளை உணவுண்ணல்
- தொடக்கநாளில் ஆலயத்தில் தர்ப்பையணிந்து, 'காப்புக்கட்டல்' (சங்கற்பம் செய்தல்)
- ஆறுநாட்களும் முருகன் ஆலயத்தில் இறைவழிபாடு செய்தல், கந்தபுராணம், திருச்செந்தூர்ப் புராணம் என்பவற்றைப் புராணபடனம் செய்தல் போன்ற புனிதச் செயல்களில் ஈடுபடல்
- இறுதி நாளில் காப்பை அவிழ்த்து தட்சணையுடன் அர்ச்சகரிடம் சமர்ப்பித்தல்
- ஏழாம் நாள் அதிகாலை நீராடி அநுஷ்டானங்களை நிறைவேற்றி, பாரணைப் பூசை முடிந்ததும் மாகேசுர பூசை செய்து விரதத்தைப் பூர்த்தி செய்தல்

கந்த சஷ்டி விரத நாட்களில் விரதம் அனுட்டிப்போர், முருகப் பெருமானின் ஆலயங்களில் தங்கியிருந்து, அன்ன, ஆகாரங்களின்றி ஆலயத்தில் தரும் தீர்த்தத்தை மட்டும் பருகி விரதமிருப்பர். இதனை மண்டூர் முருகன் ஆலயத்தில் அவதானிக்கலாம்.

கந்த சஷ்டி என்பது முருகப் பெருமான் சூரசங்காரம் செய்து, தேவர்களைக் காத்த அருட்செயலைக் குறிக்கும். இவ்விரதத்தின் ஆறாம் நாள் முருகன் ஆலயங்களில் 'சூரன்போர்' என்னும் சமய நிகழ்வு நாடகபாணியில் நடைபெறுதல் வழக்கம். மனிதரின் உட்பகையாக உள்ள காமம், வெகுளி, ஈயாமை, மயக்கம், செருக்கு, பொறாமை ஆகிய அசுரப் பண்புகளை அழித்து, அவர்கள் தெய்வீக நிலையில் பெருவாழ்வு வாழ, அருள் பாலிக்கும் இறைவனது ஆற்றலின் பெருமையே கந்தசஷ்டி உணர்த்தும் மெய்ப்பொருளாகும். கந்தசஷ்டி விரதத்தின் மகிமையையும் பயனையும் குறிப்பிடும் பின்வரும் பாடல் கந்தசஷ்டி விரத காலத்தில் படிப்பதற்கு ஏற்றது.

**ஆரண முனிவர் வானோர் அங்கதன் மற்றை வைகல்**
**சீரணி முருகவேட்குச் சிறப்பொடு பூசை ஆற்றிப்**
**பாரணம் விதியிற் செய்தார் பயிற்றும் இவ்விரதம் தன்னால்**
**தாரணி அவுணர் கொண்ட தம்பதத் தலைமை பெற்றார்.**

(கந்தபுராணம் - கந்த விரதப் படலம் - 23)

### 6. **திருப்பாவை**

இவ்விரதம் மார்கழி மாதம் முழுவதும் மகாவிஷ்ணுவை நோக்கி அனுட்டிக்கும் விரதமாகும். வைணவப் பெண்கள் ஒருவரை ஒருவர் துயிலெழுப்பி, நீர்த் துறையில் நீராடி, மண்ணிலான பாவை செய்து, தமக்கு நல்ல கணவர் அமையவேண்டும் என்றும் நாட்டுக்கு நல்ல மழை பொழியவேண்டும் என்றும் வேண்டி வழிபட்டு, நெய் பால் உண்ணாது, மையிட்டெழுதாது, மலரிட்டு முடியாது, தீயசொற்களைக் கூறாது, ஐயம் இட்டு இவ்விரதத்தை மார்கழி முப்பது நாட்களும் அனுட்டித்தனர் என்று ஆண்டாள் **"திருப்பாவை"** குறிப்பிடுகின்றது. தற்காலத்தில் வைணவர்களால் இந்த விரதம் மார்கழி மாதம் முழுவதும் அனுட்டிக்கப்படுகின்றது.



இலவச விநியோகத்திற்காக

## (ஆ) பண்டிகைகள்

பண்டிகைகள் என்பவை மனித வாழ்வின் முக்கிய நிகழ்வுகள் ஆகும். வருடம் முழுவதும் பல்வேறு செயற்பாடுகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட மனிதர், வருடத்தின் முதல், இடை, கடைப் பருவங்களில் கொண்டாடி மகிழ்ந்து, தம்முடைய மனங்களிலும் வாழ்விலும் குதூகலத்தை ஏற்படுத்தி, வாழ்க்கையை மகிழ்ச்சியாக்கும் நிகழ்ச்சிகளே **பண்டிகைகள்** ஆகும். இவை பருவம் சார்ந்தும், சமயம் சார்ந்தும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. பொதுவாக, சைவர்களின் வாழ்வில் பண்டிகைகள் சமயம் சார்ந்தனவாகவே உள்ளன. தைப்பொங்கல், சித்திரை வருடப்பிறப்பு, தீபாவளி என்பன சமயம் சார்ந்த முக்கிய பண்டிகைகளாகும்.

தம்மையும் தம்முடைய சூழலையும் புனிதப்படுத்தி, இறைவனை வழிபட்டும், பெற்றோர் பெரியோர் ஆசி பெற்றும், பல வகை உணவுகள் பட்சணங்கள் பரிமாறியும் விருந்து வழங்கியும் பண்டிகைகள் கொண்டாடப்படும். அத்துடன் வழக்கமான உணவிலும் சிறப்பான சுவையான உணவு வகைகளை உண்ணல், புத்தாடை அணிதல், உளவியல் நோக்கில் மகிழ்ச்சியை பெருக்குதல், உற்றார் உறவினர் அயலவர் வீடுகளுக்குச் சென்று கலந்து உறவாடி விருந்துண்டு மகிழ்தல் போன்ற நிகழ்வுகளும் பண்டிகைகளின் போது இடம்பெறும்.

### 1. தைப்பொங்கல்



சூரியன் தனு இராசியிலிருந்து, மகர இராசியில் பிரவேசிக்கும் காலம் உத்தராயண நாளாகும். இது **மகர சங்கிராந்தி** எனப்படும். இத்தினத்தையே நாம் **தைப்பொங்கல் பண்டிகை** எனக் கொண்டாடுகின்றோம். தை மாதம் முதலாம் நாளில், பொங்கல் செய்து, படையலிட்டு சூரியனை வழிபடும் பண்டிகை இதுவாகும். இப் பண்டிகையை சூரியப் பொங்கல், உழவர் திருநாள் எனவும் அழைப்பர். உணவு உற்பத்திக்கும் உயிரினங்களின் வளர்ச்சிக்கும் தேவையான வெப்பம், வெளிச்சம், மழை என்பவற்றைச் சூரியன் வழங்குகின்றான். அதனால், பயிர்கள் செழித்து வளர்கின்றன. எனவே, நெல் அறுவடை செய்ததும் சூரியனுக்கு நன்றிக்கடன் செலுத்தகின்றனர்.

தைப்பொங்கல் தினத்தில் எல்லோரும் அதிகாலையில் எழுந்து, தங்களையும் தங்கள் வீடுகளையும் சுத்தம் செய்து, அலங்கரிப்பர். வீட்டு முற்றத்தில் மஞ்சள் மா, அரிசி மா என்பவற்றால் கோலம் போட்டு, அதன் மத்தியில் நிறைகுடமும் குத்து விளக்கும் வைப்பர். புத்தரிசியில் பொங்கல் பொங்கி, சூரியன் உதயமாகும்போது, பொங்கலைப் படைத்து அவனை வரவேற்று, வணங்கித் தமது நன்றிக் கடனை நிறைவேற்றுவர். பொங்கலுடன், செழுமையையும் இனிமையையும் குறிக்கும் பால், பழம், கரும்பு, இளநீர், மஞ்சள், பயறு முதலான விவசாயப் பொருட்களையும் படைத்து வழிபடுவர். பொங்கலையும் பிற உணவுப் பொருட்களையும் உறவினர், அயலவர், விருந்தினர் முதலானோர்களுக்குப் பகிர்ந்தளிப்பர்.

தைப்பொங்கலுக்கு அடுத்த நாளில் **பட்டிப் பொங்கல் (மாட்டுப் பொங்கல்)** இடம்பெறும். உழவுத் தொழிலுக்கு உறுதுணையாக விளங்கும் பசுக்களையும் எருதுகளையும் போற்றும் விழாவாக இது அமைகின்றது. கால்நடைகளைக் குளிப்பாட்டி, அலங்கரிப்பதுடன் பொங்கல் பொங்கி, அவற்றிற்கும் கொடுத்துத் தாமும் உண்பர்.

தைப்பொங்கல் பண்டிகையானது கடவுள் வழிபாட்டினையும் சைவ மக்களின் மரபு வழி விழுமியங்களான நன்றி மறவாமை, பகிர்ந்துண்ணல், அன்பு, அறம், அகிம்சை, புனிதம் பேணுதல் முதலான பண்புகளையும் கலைகளையும் வளர்க்க இடமளிக்கின்றது.

### 2. சித்திரை வருடப் பிறப்பு

சித்திரை மாதம் வருடத்தின் முதலாவது மாதமாகும். அவ்வேளையில் சூரியன் இராசிகளில் முதலாவதான மேட இராசியிலே பிரவேசிக்கின்றான். எனவே, இத்தினம் வருடப் பிறப்புத் தினமாகக் கொண்டாடப்படுகின்றது. இதுவே **தமிழ்ப் புத்தாண்டுப்பிறப்பு** ஆகும்.


இலவச விநியோகத்திற்காக

சித்திரை வருடப் பிறப்புத் தினத்தில் பலவகையான பூக்கள், இலைகள், தழைகள், அறுகு, மஞ்சள், கோசலம்,கோமயம் முதலானவற்றைச் சேர்த்துக் காய்ச்சுகின்ற விசேட நீரான மருத்துநீரைத் தலையில் தேய்த்து நீராடுவர். புதிய ஆடை அணிதல், ஆலய தரிசனம் செய்தல், புதுப்பானையில் பொங்கிய பொங்கலைச் சூரியனுக்குப் படைத்து, கடவுளை வணங்குதல் ஆகியவற்றை மேற்கொள்வர்.



அத்துடன், பெற்றோர் பெரியோரை வணங்கி ஆசி பெறுதல், உற்றார் உறவினர் நண்பர்கள் ஆகியோருடன் விசேடமாகச் சமைக்கப்பட்ட உணவு வகைகளை உண்டு மகிழ்தல், உறவினர் வீடுகளுக்கு சுபதின சுப நேரத்தில் விஜயம் செய்தல் என்பன புத்தாண்டுத் தினத்தில் பின்பற்றப்படும் சம்பிரதாயங்களாகும். புத்தாண்டுத் தினத்தில் அந்த ஆண்டுக்குரிய பலனை வாசிப்பதும் கேட்பதும் வழக்கமாகும். பஞ்சாங்கம் குறிப்பிடும் சுபநேரத்தில் கைவிசேடம் பரிமாறுதல், புதுக்கணக்குகளைத் தொடங்குதல், ஏர்மங்கலம், ஏடுதொடக்குதல் முதலான செயல்களைத் தொடங்கும் வழக்கமும் சைவ மக்களிடையே உள்ளது. சித்திரை வருடப்பிறப்பின் போது பெரிய மரங்களில் ஊஞ்சல் கட்டி, பாடி ஆடுதல், போர்த்தேங்காய் அடித்தல் முதலான பாரம்பரிய விளையாட்டு நிகழ்ச்சிகள் தமிழ்க் கிராமங்களில் நடத்தப்படுகின்றன.



இவ்வகையில் சித்திரை வருடப் பிறப்பினைப் பற்றி தொகுத்துநோக்கும்போது மக்களிடையே கடவுள் வழிபாடு, பெற்றோர் பெரியோரை வணங்குதல், உறவினை விருத்தி செய்தல், மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளல், பாரம்பரிய கலைகளைப் பேணுதல் முதலானவற்றை வளர்ப்பதில் பெரும்பங்கு வகிக்கின்றன எனலாம்.

### 01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. விரதம், பண்டிகை என்பவற்றின் பொருளை எழுதுக.
2. மாத விரதங்கள் மூன்றினதும் பண்டிகைகள் மூன்றினதும் பெயர்களைத் தருக.

## செயற்பாடு

1. விரதங்கள், பண்டிகைகள் தொடர்பாகப் பத்திரிகைகளில் வெளிவரும் தகவல்களைச் சேகரித்து, காட்சிப்படுத்துக.
2. விரதங்களின் வகை, அவை ஒவ்வொன்றையும் அனுட்டிப்பதற்குரிய நோக்கங்கள், அனுட்டிக்கும் முறைகள் முதலான தகவல்களைச் சேகரித்து, அட்டவணைப்படுத்தி காட்சிப்படுத்துக.
3. சித்திரை வருடப்பிறப்பில் மேற்கொள்ளும் கருமங்களைப் பட்டியற்படுத்தி, அதனை வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
4. பஞ்சாங்கத்தில் புதுவருடப் பலனை ஆசிரியரின் உதவியுடன் வாசித்துக் காட்டுக.
5. உங்கள் பிரதேசத்தில், சித்திரை வருடப்பிறப்பின் போது மேற்கொள்ளப்படும் பாரம்பரிய விளையாட்டுக்கள், விளையாடும் முறை என்பவற்றை அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- விரதம் என்பதன் பொருள், மனம் பொறிவழிப் போகாது நிற்றல் பொருட்டு உணவை விடுத்தேனும், சுருக்கியேனும் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினாலும் கடவுளை மெய்யன்போடு விசேடமாக வழிபடுதல் என்பதாகும்.
- தைப்பூசம், மாசிமகம், பங்குனி உத்தரம், பங்குனித் திங்கள் என்பன மாத விரதங்களாகும். பெருங்கதை விரதம், கேதாரகௌரி விரதம், மார்கழித் திருவாதிரை விரதம், கந்தசஷ்டி விரதம், திருப்பாவை என்பன கடவுளுக்குரிய விரதங்களாகும்.
- தைப்பொங்கல், சித்திரை வருடப்பிறப்பு என்பன முக்கியமான பண்டிகைகளாகும்.



இலவச விநியோகத்திற்காக

# 6 சண்டேசுர நாயனார்

சோழ நாட்டிலே, மண்ணியாற்றின் கரையில் திருச்சேய்ஞலூரில் வாழ்ந்த எச்சதத்தன், பவித்திரை என்போருக்கு மகனாக விசாரசருமர் பிறந்தார். அவர் இளமையிலேயே சிவபக்தி உள்ளராக இருந்தார். ஒருநாள், இடையன் ஒருவன் பசுக்களை மேய்ப்பதற்காக, அவற்றை மண்ணியாற்றங்கரைக்கு ஓட்டிச் சென்றான். வழியில் அவனது பசு ஒன்று அவனை முட்டியதால் சினங் கொண்டு, அப்பசுவைப் பெரிய தடியினால் அடித்துத் துன்புறுத்தினான். பசுக்கள் தெய்வ வடிவானவை. அவை போற்றிப் பாதுகாக்க வேண்டியவை என்பதை அறிந்திருந்த விசாரசருமர் அச்செயலைக் கண்டு மனம் வருந்தி, அவனிடமிருந்து பசுக்களை மேய்க்கும் பொறுப்பைத் தாமே ஏற்றுக் கொண்டார்.

விசாரசருமர் அன்புடனும், ஆதரவுடனும், மிகுந்த கவனத்துடனும் பசுக்களைப் பராமரித்து வந்தார். பசுக்கள் முன்னரை விட அதிகளவு பாலைக் கொடுத்தன. விசாரசருமர் நாடோறும் பசுக்களை ஊருக்குப் பக்கத்திலே உள்ள மண்ணியாற்றங் கரையில் மேயவிட்ட பின்னர், அங்கு மணலால், சிவலிங்கம் அமைப்பார். ஆத்தி மலரையும், வேறு நல்ல மலர்களையும் எடுப்பார். பின்னர் குடங்களில் பசுக்கள் தாமே சொரிந்த பாலை எடுத்து, சிவலிங்கத்துக்கு அபிடேகம் செய்து, மலர்களினாலே அருச்சனை செய்து பக்தியுடன் சிவபூசை செய்வார்.

அவர் அவ்வாறு தினமும் செய்வதைக் கண்ட ஊரவர், அதனை எச்சதத்தனுக்குத் தெரிவித்தனர். எச்சதத்தன் அதன் உண்மையை அறிவதற்காக, அடுத்த நாள் விசாரசருமருக்குத் தெரியாமல், மண்ணியாற்றங் கரைக்குச் சென்று, ஒரு மரத்தின் பின்னால் மறைந்திருந்து பார்த்தார்.

விசாரசருமர் வழக்கம் போலப் பசுக்களை மேயவிட்ட பின்னர், சிவபூசை செய்யத் தொடங்கினார். மணலினாலே சிவலிங்கத்தை அமைத்தார். மலர்களைக் கொண்டு வந்தார். அதன் பின் வழமைபோல, சிவலிங்கத்துக்குப் பால் சொரிந்து சிவபூசையில் ஈடுபட்டார். எச்சதத்தன், அதனைக் கண்டு மிகுந்த கோபங்கொண்டு, அவர் முன் சென்று கடுஞ்சொற்களைக் கூறி, பாற்குடங்களைக் காலால் இடறி, அவரது சிவபூசைக்கு இடையூறு செய்தார். தனது பூசைக்குத் தடைவந்தபோது விசாரசருமர் உலகநினைவு வரப்பெற்றார். சிவபூசைக்கான பாற் குடங்களை உருட்டி, இடறிய தன் தந்தையின் காலைச் சிறுதடியால் அடித்தார். அது மழுவாக மாறி தந்தையின் காலை வெட்டியது.

தனது தந்தையே ஆயினும், சிவ வழிபாட்டிற்கு இடையூறு செய்ததால் அவரும் தண்டிக்கத்தக்கவரே என்னும் தீவிரபக்தி உணர்வுடனும், உறுதியுடனும் விசாரசருமர் இருந்தார். அவரது பக்தியால் மகிழ்ந்த சிவபெருமான், உமையம்மையாருடன் காட்சி அளித்தார். அவரது சிவபக்தியின் மேன்மையை வியந்து, சிவதொண்டருக்கெல்லாம் மேலான தலைவராகி, திருக்கோயில்களில் சிவவழிபாட்டின் பயனைக் கொடுக்கும் உயர்ந்த சண்டேசுர பதவியை, அவர் பெறும்படி அருள் செய்தார். இறைவன் தாமே தமது முடிமேலிருந்த கொன்றை மாலையை எடுத்து விசாரசருமருக்குச் சூட்டினார். எச்சதத்தன் தண்டனை பெற்றதனால், சிவத்தீவினை செய்த குற்றம் நீங்கப்பெற்று சிவலோகத்தை அடைந்தார்.

சிவபூசை செய்தலாகிய கிரியைநெறி வழிபாட்டோடு, பசுக்களைப் பாதுகாத்தலாகிய சரியை வழிபாட்டையும் மேற்கொண்ட சண்டேசுர நாயனார், 63 நாயன்மார்களுள் ஒருவர். அவருக்குத் திருக்கோயில்களில் சந்நிதியும், வழிபாடும் வகுக்கப்பட்டுள்ளன. சிவாலய பூசை சண்டேசுரர் வழிபாட்டுடன் முடிவடைகிறது. சிவதரிசன பலனைத் தருபவர் சண்டேசுர நாயனார். அதனால், நாம் சிவதரிசனம் முடித்து, சண்டேசுரருக்கு முன்னால் நின்று வணங்கி, மூன்று முறை கைதட்டி, சிவபூசையின் பயனைத் தந்தருளும்படி வேண்டிக் கொள்ள வேண்டும்.

தீவிர பக்தியாளர்களை இறைவன் தம்முடைய ஆணைக்குட்படுத்தி, அவர்களை முதன்மைப்படுத்துவார் என்பதனை, சண்டேசுர நாயனார் வரலாற்றினூடாக அறிந்தீர்கள். நீங்களும் இறைவன் மீது பக்தி கொண்டு நன்மையடைய வேண்டும்.



இலவச விநியோகத்திற்காக

01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. விசாரசருமர், பசுக்களை மேய்க்கும் பொறுப்பை ஏன் ஏற்றுக் கொண்டார்?
2. ‘நால்வகை மார்க்கங்களில் ஒன்றான கிரியை நெறி மூலம் இறைவனை அடைந்தவர் சண்டேசுரர்’ - என்பதற்கு இப்பாடத்தில் காணப்படும் சான்றுகளைத் தருக.
3. எச்சதத்தன் செய்த சிவத்தீவினை யாது? அது எவ்வாறு நீங்கியது?
4. விசாரசருமரின் தீவிர சிவபக்தியைக் காட்டும் சம்பவத்தைக் குறிப்பிடுக.
5. இறைவன், விசாரசருமருக்கு அருள்புரிந்த விதத்தினை சுருக்கமாக எழுதுக.

## செயற்பாடு

1. விசாரசருமர் பசுக்களிடம் அன்பு கொண்டவர். என்பதனை விளக்கும் காரணங்களை இனங்கண்டு, வகுப்பறையில் முன்வைக்குக.
2. சண்டேசுரரை வழிபடும் முறையினைச் செய்து காட்டுக.

## பாடச்சுருக்கம்

- விசாரசருமர் சிவபக்தி மிக்கவர்; சிவபூசை செய்து இறைவனை வழிபட்டவர்.
- சிவத்தீவினை செய்தல் தவிர்க்கப்பட வேண்டியதொன்றாகும்.
- விசாரசருமர் தீவிர பக்தியுடன் இறைவனை வழிபட்டு, சண்டேசுரர் பதவியையும் வேறு பல சிறப்புகளையும் பெற்றார்.

# 7 திருமுறைகள், திவ்வியபிரபந்தம், தோத்திரப்பாடல்கள்

## (அ) திருமுறைகளின் வைப்புமுறை

**திரு** என்பது அழகு, தெய்வீகம், மேன்மை, மங்கலம், செல்வம் எனும் கருத்துக்களைத் தரும். **முறை** என்பது ஒழுங்கு, வரிசை, ஒழுக்கம், உறவு, தரம், நூல் என்னும் பொருள்களை உணர்த்தும் சொல்லாகும். தெய்வீக உணர்வு பெருக; சமய ஒழுக்கத்தைப் பேணும் நோக்கத்துடன் தொகுக்கப்பட்ட நூல்களின் தொகுதி திருமுறை எனலாம். சைவ அடியார்களால் பாடப்பட்ட பாடல்களின் ஒழுங்கமைவான வைப்பு முறையே இதுவாகும். இது பன்னிரெண்டாக வகுக்கப்பட்டுள்ளது.

### திருமுறைத் தொகுப்பு

திருநாரையூரிலுள்ள பொல்லாப்பிள்ளையார் கோயிலில் அர்ச்சகர் ஒருவர் பூசை செய்து வந்தார். அவருக்கு நம்பி என்றொரு மகன் இருந்தார். நம்பி, ஒரு முறை தந்தையாருக்காகப் பிள்ளையாருக்குப் பூசை செய்யச் சென்றார். சிறுவனான நம்பி பூசை முடிவில் நைவேத்தியத் திருவமுதைப் பிள்ளையார் உண்ணாமையால், தமது பூசைக் கடமையில் ஏதோ பிழை நேர்ந்து விட்டதாக எண்ணினார். நம்பி மனம் வருந்தி கல்லோடு தமது தலையை முட்டி மோதி, தம்மைத் தாமே வருத்த முனைந்தார். அப்போது விநாயகர், நம்பி படைத்த அமுதை உண்டு அவருக்கு அருள் பாலித்தார். அந்த நிகழ்வின் பின் **நம்பியாண்டார் நம்பி** என்னும் சிறப்புப் பெயர் அவருக்கு நிலைத்துவிட்டது.

நம்பியின் புகழ், சிறப்பு என்பன சோழநாட்டில் பரவியது. அதனை அறிந்த இராஜராஜசோழ மன்னன் அவரின் உதவியைப் பெற்று, தில்லையில் பூட்டி வைக்கப்பட்டிருந்த தேவார ஏடுகளை ஒழுங்குபடுத்தித் தொகுக்க விரும்பினான். அதன்படி நம்பியார் தில்லைக்குச் சென்ற போது, தில்லைவாழ் அந்தணர்கள் ஏட்டுச் சுவடிகளை அவருக்குக் கொடுக்க மறுத்தனர். பின்னர், தேவாரம் பாடிய மூவரின் திருவுருவங்களைப் பவனியாகக் கொண்டு, ஆலயத்தை வலம்வந்தபோது அந்தணர்கள் மனம் மாறி, ஏட்டுச் சுவடிகளை நம்பியிடம் கொடுத்தனர். அந்த ஏட்டுச் சுவடிகளில் பலவற்றைக் கறையான் அரித்திருந்ததைக் கண்ட நம்பி மனம் வருந்தினார். அப்போது, ''இக்காலத்துக்கு அவசியம் அற்றவையே அழிந்தன'' என ஆறுதலளிக்கும் வகையில் ஓர் அசரீரி வாக்கு ஒலித்தது. அதனால், செயலூக்கம் அடைந்த நம்பி கிடைத்த ஏடுகளை இராஜராஜ சோழ மன்னனின் வேண்டுதலுக்கு இணங்க, திருமுறைகளாகத் தொகுத்தார்

### பன்னிரு திருமுறைகளும் அவற்றின் ஆசிரியர்களும்

| திருமுறை | அருளிய நூல் | ஆசிரியர்கள் |
|---|---|---|
| 1 - 3 ஆந் திருமுறை | தேவாரம் | திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் |
| 4 - 6 ஆந் திருமுறை | தேவாரம் | திருநாவுக்கரசு நாயனார் |
| 7 ஆந் திருமுறை | தேவாரம் | சுந்தரமூர்த்தி நாயனார் |
| 8 ஆந் திருமுறை | திருவாசகம்<br>திருக்கோவையார் | மாணிக்கவாசக சுவாமிகள் |
| 9 ஆந் திருமுறை | திருவிசைப்பா<br><br>திருப்பல்லாண்டு | திருமாளிகைத்தேவர், சேந்தனார், கண்டராதித்தர், கருவூர்த்தேவர், சேதிராயர், புருடோத்த நம்பி, திருவாலி அமுதனார், வேணாட்டடிகள், பூந்துருத்தி நம்பிகாடநம்பி.<br>சேந்தனார் |
| 10 ஆந் திருமுறை | திருமந்திரம் | திருமூலர் |
| 11 ஆந் திருமுறை | பன்னிருவர் பாடிய பிரபந்தங்கள் | மதுரை சோமசுந்தரப் பெருமான், காரைக்காலம்மையார் நக்கீரர், பட்டினத்தடிகள், நம்பியாண்டார்நம்பி, ஐயடிகள் காடவர் கோன், சேரமான் பெருமாள் நாயனார், கல்லாடதேவர், கபிலதேவர், பரணதேவர், இளம்பெருமான் அடிகள், அதிராவடிகள் |
| 12 ஆந் திருமுறை | பெரியபுராணம் | சேக்கிழார் |



இலவச விநியோகத்திற்காக

## (ஆ) நாலாயிரத்திவ்விய பிரபந்தத் தொகுப்பு

நாலாயிரத்திவ்விய பிரபந்தத்தை ஸ்ரீமத் நாதமுனிவர் தொகுத்தார். விஷ்ணுவின் மீது ஆழ்வார்கள் பாடிய பாசுரங்கள் நாலாயிரம் அடங்கியுள்ளதால் அந்நூல், **நாலாயிரத் திவ்விய பிரபந்தம்** எனப் பெயர் பெற்றது. அவற்றைப் பன்னிரு ஆழ்வார்கள் பாடியுள்ளனர். அவை பின்வருமாறு.

| ஆழ்வார்கள் | பாடிய பிரபந்தங்கள் |
|---|---|
| 1. பொய்கையாழ்வார் | முதல் திருவந்தாதி |
| 2. பூதத்தாழ்வார் | இரண்டாந் திருவந்தாதி |
| 3. பேயாழ்வார் | மூன்றாந் திருவந்தாதி |
| 4. திருப்பாணாழ்வார் | அமலனாதிபிரான் |
| 5. திருமழிசையாழ்வார் | திருச்சந்த விருத்தம், நான்முகன் திருவந்தாதி |
| 6. நம்மாழ்வார் | திருவாசிரியம், திருவாய்மொழி, திருவிருத்தம், பெரிய திருவந்தாதி |
| 7. மதுரகவியாழ்வார் | கண்ணி நுண் சிறுதாம்பு |
| 8. பெரியாழ்வார் | பெரியாழ்வார் திருமொழி, திருப்பல்லாண்டு |
| 9. ஆண்டாள் | நாச்சியார் திருமொழி, திருப்பாவை |
| 10. திருமங்கை ஆழ்வார் | பெரிய திருமடல், சிறிய திருமடல், திருக்குறுந்தாண்டகம், திருநெடுந் தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, பெரிய திருமொழி |
| 11. தொண்டரடிப் பொடியாழ்வார் | திருப்பள்ளியெழுச்சி, திருமடல் |
| 12. குலசேகராழ்வார் | பெருமாள் திருமொழி |

## (இ) தோத்திரப் பாடல்களின் தனித்துவம்

தோத்திரம் என்பது. எவரும் பொருளுணர்ந்தோ, உணராமலோ, இசைக்கு அமைவாகவோ, அமையாதோ, தத்தமது ஆற்றலுக்கேற்ப இறைவனைப் பாடிப் பரவி, பயன் பெற உதவுகின்ற எளிதிலே சாதிக்கும் சாதனை வழியுமாகும். தோத்திரப் பாடல்கள் திருமுறைத் தொகுப்பின் பின்னரே தோன்றின. இவ்வகைத் தோத்திரங்களிலே அடியார்கள் தங்கள் குறைகளை முறையிடும் வகையும், அவர்கள் இறைவனிடமிருந்து வேண்டுவன எவையெனவும், கூறப்படுதலையும் காணலாம். இது மிக எளிமையான வழிபாடாகவும் காணப்படுகின்றது. தோத்திரப் பாடல்களில் கந்தரலங்காரம், கந்தரனுபூதி, திருப்புகழ், சகலகலாவல்லிமாலை, அபிராமி அந்தாதி முதலியவை அடங்கும். அவற்றுள் நமது இஷ்ட தெய்வத்துக்குரிய தோத்திரங்களிலே சிலவற்றை மனனஞ்செய்து படிப்பதை நாம் பழக்கமாகக் கொள்ளவேண்டும். அது நமக்கு நற்பலன்களைத் தரும்.

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருமுறை என்பதன் பொருள் யாது? சைவத் திருமுறைகள் எத்தனை?
2. தேவாரங்கள் எத்தனை திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன?
3. திருமுறைகளைத் தொகுத்தவர் யார்? தொகுப்பித்தவர் யார்?
4. நாலாயிரத் திவ்விய பிரபந்தம் யாரால் தொகுக்கப்பட்டது?
5. தோத்திரப்பாடல்கள் என்றழைக்கப்படுபவை எவை?

### செயற்பாடு

1. பன்னிரு திருமுறைகள், நாலாயிரத் திவ்விய பிரபந்தம் தொடர்பாக தரப்பட்ட அட்டவணைகளை அட்டைகளில் எழுதி, வகுப்பறையில் காட்சிப் படுத்துக.

### பாடச்சுருக்கம்

- பன்னிரு திருமுறைகள், நாலாயிரத்திவ்விய பிரபந்தம் என்பன பல சிறப்புகளை உடையன.
- திருமுறைகளுக்குப் பின்னர் தோன்றிய நூல்கள் தோத்திரப் பாடல்கள் எனப்படும்.

# 8 திருமுறைப்பாடல்கள்

(மனனம் செய்யப்பட வேண்டியவை)

## (அ) திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் - தேவாரம்

பாடல் - 1

திருஞானசம்பந்தர், திருத்தோணிபுரத்திலே எழுந்தருளியிருக்கும் பெருமானைப் போற்றிப் பாடிய திருப்பதிகத்தில் **'சிறையாரும் மடக்கிளியே'** என்ற தேவாரம் உள்ளது. சம்பந்தர் இப்பதிகத்தில் சிவபெருமானைத் தலைவனாகவும், தம்மைத் தலைவியாகவும் பாவனை செய்து பாடுகின்றார். தமது ஆருயிர்த் தலைவனாகிய சிவபெருமானது திருப்பெயரைக் கூறும்படி கிளியிடம் வேண்டுகின்றார்.

தலம் - **திருத்தோணிபுரம்** பண் - **பழந்தக்க ராகம்**

**திருச்சிற்றம்பலம்**

**சிறையாரு மடக்கிளியே இங்கேவா தேனொடுபால்**
**முறையாலே உணத்தருவன் மொய்பவளத் தொடுதரளம்**
**துறையாரும் கடல்தோணி புரத்தீசன் துலங்குமிளம்**
**பிறையாளன் திருநாமம் எனக்கொருகால் பேசாயே.**

**திருச்சிற்றம்பலம்**

**பொழிப்புரை:** அழகிய சிறகினை உடைய இளங்கிளியே இங்கு வா! தேன், பால் என்பவற்றைக் கலந்து, இனிமை பயக்கும் முறையில் (விதத்தில்), உண்ணுவதற்குத் தருவேன். நிறைந்த (நெருக்கமாகப்) பவளமும், முத்தும் மிகுந்த கடற்றுறையினை உடைய, திருத்தோணிபுரத்திலே சிவபெருமான் வீற்றிருக்கின்றார். இளம் பிறைச் சந்திரனை முடியில் சூடிய சிவபெருமானது அழகிய திருப்பெயரை ஒருமுறை பேசுவாயாக.

**பத விளக்கம்:** **சிறை** - சிறகு; **மடக்கிளி** - இளங்கிளி; **முறை** - இனிமை பயக்கும் முறை; **மொய்** - நெருங்கிய, நிறைந்த; **தரளம்** - முத்து; **ஈசன்** - சிவபெருமான், கடவுள்; **துளங்கும்** - விளங்கும்; **நாமம்** - பெயர், புகழ்; **ஒருகால்** - ஒருமுறை.

பாடல் - 2

அப்பரும் சம்பந்தரும் திருமறைக்காட்டிலே சுவாமி தரிசனம் செய்தபின், அங்கு தங்கி இருந்தார்கள். அதனை, பாண்டிய அரசி மங்கையர்க்கரசியாரும், மந்திரி குலச்சிறையாரும் அறிந்தனர். பாண்டிய நாட்டில் சைவசமயத்தின் மறுமலர்ச்சியையும், சமண சமயத்தைச் சேர்ந்த பாண்டியனின் வாழ்வில் புதுத்திருப்பத்தையும் ஏற்படுத்த, அவர்கள் விரும்பினர். அதனால், அரசியார் சம்பந்தரை மதுரை மாநகருக்கு எழுந்தருளும்படி, தூதர்கள் மூலம் ஓர் அழைப்பை அனுப்பினார். சம்பந்தர் அழைப்பை ஏற்றுக்கொண்டு புறப்பட ஆயத்தமானார். அப்பொழுது, அவரோடு இருந்த அப்பர் பெருமான், "சமணரின் வஞ்சனைக்கு எல்லை இல்லை; நீரோ சிறுபிள்ளை; அங்கு செல்ல வேண்டாம்" என்று தடுத்தார். அப்பொழுது சம்பந்தர், 'சிவனடியார்களுக்கு, நாளுங்கோளும் என்றும் நல்லவை' என்று கூறி, சிவபெருமானைப் போற்றி, "வேயுறு தோளி...." என்று தொடங்கி, கோளறு பதிகத்தைப் பாடினார்.

தலம் - **பொது** பண் - **பியந்தைக் காந்தாரம்**

**திருச்சிற்றம்பலம்**

**வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்**
**மிகநல்ல வீணை தடவி**
**மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தென்**
**உளமே புகுந்த வதனால்**
**ஞாயிறுதிங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி**
**சனிபாம் பிரண்டு முடனே**
**ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியா ரவர்க்கு மிகவே.**

**திருச்சிற்றம்பலம்**

**பொழிப்புரை:** சிவபெருமான், மூங்கில் போன்ற தோள்களையுடைய உமாதேவியாரை இடப்பாகமாக உடையவர். நஞ்சுண்ட கண்டத்தை உடைய அருளாளர். (அவர்) நல்ல வீணை என்னும் வாத்தியத்தை மீட்டுபவர். இத்தகைய தன்மைகளைக் கொண்ட இறைவன், குற்றமற்ற சந்திரன், கங்கை என்பவற்றைத் தரித்த திருமுடித் தோற்றத்தோடு



இலவச விநியோகத்திற்காக

என்னுடைய உள்ளத்தில் உறைகின்றார். ஆகையால், சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது ஆகிய ஒன்பது கோள் (கிரகங்)களும் நன்மையே செய்யும். அவை இறை அடியார்களுக்கு மிக நல்லனவே செய்யும்.

பத விளக்கம்: **வேய்** - மூங்கில்; **தோளி** - தோள்களை உடையவள்; **கண்டன்** - கண்டத்தை உடையவன்; **மாசு** - குற்றம்; **மாசறு** - குற்றமற்ற ; **உளம்** - உள்ளம்; **ஞாயிறு** - சூரியன்; **திங்கள்** - சந்திரன்; **பாம்பு இரண்டு** - இராகுவும் கேதுவும்; **ஆசு** - குற்றம்; **ஆசறு** - குற்றமற்ற; **அடியார்** - சிவனடியார்; **வியாழம்** - வியாழன் என்ற சொல்லின் செய்யுள் வடிவமாகும்.

**பாடல் - 3**

திருஞானசம்பந்தர் திருவாவடுதுறையில் எழுந்தருளி இருந்தபொழுது, அவரைக் காண தந்தையார் வந்தார். தந்தையார் செய்யவிருந்த யாகக் கிரியைக்குப் பொன் கொடுக்க, சம்பந்தர் விரும்பினார். அதனால், ஆலயத்துக்குச் சென்று, **'இடரினுந் தளரினும்'** என்று தொடங்கும் இத்தேவாரத் திருப்பதிகத்தைப் பாடினார். அப்பொழுது, இறைவன் அருளால் பொன் கிடைத்தது. அதனைத் தந்தைக்குக் கொடுத்து, யாகக் கிரியைக்குப் பயன்படுத்துமாறு கூறினார்.

தலம் - **திருவாவடுதுறை** பண் - **காந்தார பஞ்சமம்**

**திருச்சிற்றம்பலம்**

இடரினுந் தளரினும் எனதுறு நோய்
தொடரினும் உனகழல் தொழுதெழு வேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோ எமை ஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோ வுனதின் னருள் ஆவடுதுறை அரனே.

**திருச்சிற்றம்பலம்**

பொழிப்புரை: திருப்பாற் கடலிலே, அமுதத்தோடு நஞ்சு கலந்தபொழுது, அதனை உண்டு, கண்டத்திலே அடக்கிக் கொண்ட வேத முதல்வனே, (எனக்கு) துன்பம், தளர்ச்சி, முற்பிறப்பு வினையின் தொடர்ச்சி என்றிவ்வாறு எத்தனை இடுக்கண் தொடர்ந்தாலும், அடியேன் உம்முடைய திருவடிகளையே தஞ்சம் என்று வணங்குவேன். திருவாவடுதுறையில் எழுந்தருளி இருக்கின்ற இறைவனே! நான் இவ்வாறு வணங்க, நீர் எமக்கு ஈவதற்கு ஒன்றுமேயில்லை என்றால், இதுவோ நீர் அடியேனை ஆட்கொள்ளும் விதம்? இதுவோ நீர் திருவருள் சுரக்கின்ற விதம்? (என்று சம்பந்தர் திருவாவடுதுறையில் வீற்றிருக்கின்ற செம்பொற்றியாகேசப் பெருமானிடம் பொன் வேண்டி இறைஞ்சுகின்றார்).

பதவிளக்கம்: **இடர்** - துன்பம்; **நோய்** - பழம்பிணி, முற்பிறப்பு வினை; **கழல்** - திருவடி; **கடல்** - திருப்பாற் கடல்; **மிடறு** - கண்டம்; **வேதியன்** - வேத முதல்வன்; **இன்னருள்** - திருவருள்.

## (ஆ) திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்

**பாடல் - 1**

திருநாவுக்கரசு நாயனார் திருக்கோலக்காவிலிருந்து திருவாவடுதுறை என்னும் திருத்தலத்தை அடைந்து, அங்கே எழுந்தருளி இருக்கும் செம்பொற்றியாகேசரைத் தொழுது பல திருப்பதிகங்கள் பாடியருளினார். அவற்றுள் ஒன்றின் முதலாவது பாடலை இங்கே படிப்போம்.

தலம் - **திருவாவடுதுறை** **திருத்தாண்டகம்**

**திருச்சிற்றம்பலம்**

திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க
உருவேயென் னுறவேயென் ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே.

**திருச்சிற்றம்பலம்**

பொழிப்புரை: சிறப்புடையவனே, எனது செல்வமாக உள்ளவனே, தேனே, தேவர்களது செல்வமான ஒளிச்சுடரே, ஒளிச்சுடர் மிகுந்த நல்ல பெரும் சோதி வடிவானவனே, உருவே, எனது உறவானவனே, என் உடலே, என் உடலின் கண் உள்ள உள்ளமே, உள்ளத்தின் உள்ளே நிற்கின்ற இயக்குபொருளே. எனது கற்பகச் சோலையே, என் கண் போன்றவனே, கண்ணினுள்ள கருமையான கண்மணி போன்றவனே, கண்மணியுள் நின்றாடும் கண்பாவையே, திருவாவடுதுறையில் உறைகின்ற தேவர்கள் தலைவனே, (உடலில்) மறைந்து நின்று வருத்தும் கொடிய வினைகள் என்னை வந்தடையாதபடி காத்தருள்க. ( நாவுக்கரசர் இறைவன்பால் கொண்ட பக்தியும், ஆராமையும் காரணமாக அவனைப் பலபடப் போற்றி, அடைக்கலமாக அடைந்து, அபயம் வேண்டியருளியது இத்திருப்பாடல். நாமும் இறைவனைப் பாடிப் பயன்பெற உதவும்.)

பத விளக்கம்: **திரு** - நல்லூழ்; **செல்வம்** - உலக இன்பங்கள் எல்லாவற்றையும் தருவது; **சுடர்** - விளக்கு; **உறவு** - சொந்தம்; **ஊன்** - உடல்; **ஊனின் உள்ளம்** - உடலினுள்ளேயுள்ள சித்தம்; **உள்ளத்தில் உள்ளே நின்ற கரு** - சித்தத்துள் நின்று உணர்வைத் தோற்றுவித்து நின்ற வித்து; **கற்பகம்** - தேவ உலக விருட்சம்; **பாவை** - கண்ணின் மணியினுள்ளே இருக்கும் ஓர் உறுப்பு; **அருவாய வல்வினை நோய்** - உருவாய உடலிலே மறைந்து நின்று வருத்தும் கொடிய வினையின் பயனாகிய வருத்தம்; **அமரர் ஏறு** - தேவர் தம் கடவுளாகிய இறைவன்.

**பாடல் - 2**

திருநாவுக்கரசு நாயனார் பாடிய தேவாரப் பதிகங்களில், தலயாத்திரையின்போது அற்புதங்கள் என்னும் அருட்செயல்களை இறைவன் திருவருளால் புரிந்து பாடிய பதிகங்களும் உள்ளன. பிற வகைப் பதிகங்களில் தனித்தனிப் பொருள்கள் பற்றி அவர் பாடிய திருப்பதிகங்கள் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தவை. இவற்றில் 'தாண்டகம்' என்னும் பாடல் வகை காரணமாக, அவருக்குச் சைவசமய வரலாற்றில் **'தாண்டக வேந்தர்'** என்ற சிறப்புப் பெயர் கிடைத்தது. அவர் பாடிய தனித் திருத்தாண்டகங்களில் **"திருக்கோயில் இல்லாத..........."** எனத் தொடங்கும் பாடலும் **"சங்கநிதி பதும நிதி........"** எனத் தொடங்கும் பாடலும் புகழ் பெற்ற பாடல்களாகும்.

**திருச்சிற்றம்பலம்**

திருக்கோயி லில்லாத திருவி லூரும்
திருவெண்ணீ றணியாத திருவி லூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும்
பாங்கினொடு பலதளிக ளில்லா வூரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா வூரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா வூரும்
அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா வூரும்
அவை யெல்லாம் ஊரல்ல அடவி காடே.

**திருச்சிற்றம்பலம்**

பொழிப்பு: ஆலயங்கள் இல்லாத ஊர்கள், நெற்றியிலே விபூதி தரிக்காத மக்கள் வாழ்கின்ற ஊர்கள், பக்திமையுடன் தோத்திரப் பாடல்களைப் பாடாத ஊர்கள், சிறப்பான ஆலயங்கள் பல இல்லாத ஊர்கள், விருப்பத்துடன் வெண்சங்குகளை ஊதாதவர்கள் வாழுகின்ற ஊர்கள், கோபுரம், கொடி முதலானவை இல்லாத ஊர்கள், விருப்பத்துடன் மலர் பறித்து அர்ச்சித்து, அதன்பின் உணவு உண்ணாதவர்கள் வாழுகின்ற ஊர்கள் உண்மையில் ஊரல்ல. அவை அடர்ந்த காடுகளாகும். (மேற்குறிப்பிட்ட பண்புகள் காணப்படும் ஊர்கள் சிறப்பு மிக்க ஊர்களாக அமையும்.)

பத விளக்கம்: **திருக்கோயில்** - ஆலயம்; **திருவெண்ணீறு** - விபூதி, **தளிகள்** - ஆலயங்கள்; **அடவி காடு** - அடர்ந்த காடு.

**பாடல் - 3**

**திருச்சிற்றம்பலம்**

சங்கநிதி பதுமநிதி யிரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்ல ராகில்
அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே.

**திருச்சிற்றம்பலம்**



இலவச விநியோகத்திற்காக

**பொழிப்புரை:** மகாதேவரான சிவபெருமான் மீது இடையறாது அன்பு செலுத்தாதவர்கள் சங்கம், தாமரை என்னும் இரு பெரிய அளவிலான செல்வங்களையும் தந்து, மண்ணுலகையும் விண்ணுலகையும் ஆளும் உரிமையைத் தந்தாலும், பெருமை குறையும் அவர்களின் செல்வத்தை நாம் மதிக்கமாட்டோம். ஆனால், உறுப்புக்கள் எல்லாம் குறைந்து அழுகும் குட்ட நோயாளிகளாய், பசுவின் தோலையுரித்து அதன் மாமிசத்தை உண்டு அலையும் இழிகுல மக்களேயானாலும், கங்கையைத் தமது சடையில் மறைத்து வைத்துள்ள சிவபிரானின் அன்பர்களானால், அவர்களே நாம் வணங்கும் கடவுளாவர்.

**பத விளக்கம்:** **சங்க நிதி** - சங்கம் என்னும் பேரளவினையுடைய செல்வம்; **பதும நிதி** - தாமரை என்னும் பேரளவினையுடைய செல்வம். இவ்விருவகை நிதிகளையும் குபேரன் பெற்றிருந்தான் என்பது புராணச் செய்தி. **தரணி** - பூமி; **மாதேவர்** - சிவன்; **ஏகாந்தர்** - பிறவழியில் மனத்தைச் செல்லவிடாது பக்தி செலுத்துவோர். **கண்டீர்** என்பது முன்னிலையசை.

## (இ) சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம்

**பாடல் - 1**

சுந்தரமூர்த்தி நாயனார், திருப்பெருமங்கலத்திலே இருந்த ஏயர்கோன் கலிக்காம நாயனாருக்குச் சூலைநோயைத் தீர்க்கச் சென்று, இறையருளால் இருவரும் நட்புக் கொண்டனர். பின்னர், அவர்கள் திருப்புன்கூர் என்னுந் திருத்தலத்தை அடைந்தனர். அங்கு, சுந்தரர் சுவாமியைத் தரிசித்து வணங்கி, **'அந்தணாளனுன் அடைக்கலம் புகுத'** என்று தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடியருளினார். கீழேயுள்ள திருப்பாடல் அப்பதிகத்தில் ஐந்தாவது திருப்பாடலாகும்.

தலம் - **திருப்புன்கூர்** பண் - **தக்கேசி**

**திருச்சிற்றம்பலம்**

**கோல மால்வரை மத்தென நாட்டிக்**
**கோள ரவுசுற் றிக்கடைந் தெழுந்த**
**ஆல நஞ்சுகண் டவர்மிக இரிய**
**அமரர் கட்கருள் புரிவது கருதி**
**நீல மார்கடல் விடந்தனை யுண்டு**
**கண்டத் தேவைத்த பித்தநீ செய்த**
**சீலங் கண்டுநின் திருவடி யடைந்தேன்**
**செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே.**

**திருச்சிற்றம்பலம்**

**பொழிப்புரை:** செழிப்பான சோலைகளை உடைய திருப்புன்கூரில் எழுந்தருளியுள்ள இறைவனே, அழகிய பெரிய மந்தரம் என்னும் மலையை மத்தாக நாட்டி, கொல்லும் விடமுடைய வாசுகி என்னும் பாம்பினைக் கடைகயிறாகச் சுற்றி, திருப்பாற் கடலைக் கடைந்தபோது, அதில் எழுந்த ஆலகால விடத்தைக் கண்டு, தேவர்களும் அசுரர்களும் பயந்து ஓடினர். உன்பால் தஞ்சம் அடைந்த திருமால், பிரமா முதலிய தேவர்களைக் காத்தற் பொருட்டு, அந்த ஆரவாரிக்கும் கடலில் எழுந்த நீலநிறமுடைய நஞ்சினை எடுப்பித்து உட்கொண்டு, அதனைக் கண்டத்திலே வைத்த பேரருளாளனே! பித்தா, அன்று நீ செய்த அருட்செயலைக் கண்டு, அடியேனும் உன்னுடைய திருவடியே தஞ்சமென்று அடைந்தேன்; என்னையும் காத்தருளுவாய்.

**பத விளக்கம்:** **கோலம்** - அழகு; **வரை** - மலை (மந்தர மலை), **அரவு** - பாம்பு (வாசுகி என்னும் பாம்பு); **நஞ்சு** - ஆலகால விடம்; **அமரர்** - தேவர்; **ஆர் கடல்** - ஆரவாரிக்கும் (பாற்) கடல்; **சீலம்** - உபகார குணம்.

**பாடல் - 2**

சுந்தரமூர்த்தி நாயனார் சங்கிலியாரைத் திருமணம் செய்தபோது, பரவையாரிற்கு மகிழமரத்தடியில் சத்தியம் செய்து கொடுத்தார். அச் சத்தியம் தவறி, திருவாரூரைத் தரிசிக்க விரும்பி, திருவொற்றியூரை விட்டு நீங்கிய பொழுது, அவரது இரு கண்களும் குருடாகின. அவர் பல தலங்களையும் பிறர் வழிகாட்டச் சென்று, தரிசித்து திருவெண்பாக்கத்தில் திருப்பதிகம் பாடி ஊன்றுகோல் பெற்றார். பின்னர், காஞ்சிபுரம் சென்று, அங்குள்ள திருவேகம்பத்தை அடைந்து,

‘கச்சி ஏகம்பனே, என் பிழை பொறுத்துக் கண்ணளித்து அருள்வாய்’ என்று பிரார்த்தித்த பொழுது, இறைவன் இடது கண்பார்வை மாத்திரங் கொடுத்து, தமது திருக்கோலத்தைக் காட்டியருள, சுந்தரர் மகிழ்ந்து வணங்கி, **“ஆலந் தானுகந் தமுதுசெய் தானை”** என்று தொடங்கும் இப் பதிகத்தைப் பாடியருளினார்.

தலம் - **திருக்கச்சி ஏகம்பம்** பண் - **தக்கேசி**

**திருச்சிற்றம்பலம்**

ஆலந் தானுகந் தமுதுசெய் தானை
ஆதி யைஅம ரர்தொழு தேத்தும்
சீலந் தான்பெரி தும்முடை யானைச்
சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாள்உமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பன்எம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே.

**திருச்சிற்றம்பலம்**

பொழிப்புரை: நஞ்சைத் தானே விரும்பி உண்டு, அமுதத்தைத் தேவர்களுக்கு உரிதாக்கியவனும், எல்லாவற்றிற்கும் முதல்வனும், தேவர்கள் வணங்கித் துதிக்கின்ற பெருமையை மிக உடையவனும், நினைப்பவர் மனத்திலே நிலைபெற்றிருப்பவனும், மணம் கமழும் நீண்ட கூந்தலையுடைய உமாதேவி என்னும் நங்கையால் எப்பொழுதும் துதித்து வழிபடப் பெற்றவனும், காலனுக்கு காலனும் ஆகிய திருக்கச்சி ஏகம்பத்தில் எழுந்தருளியிருக்கும் திருஏகாம்பரநாதனை, அடியேன் காண்பதற்குக் கண் பெற்றது என்ன ஆச்சரியம்! (இத்திருப்பதிகம், தமக்குக் கண்ணளித்த இறைவனது திருவருளை வியந்து அருளிப் பாடியது.)

பத விளக்கம்: **ஆலம்** - நஞ்சு; **உகந்து** - விரும்பி; **ஆதி** - முதல், முதல்வன்; **அமரர்** - தேவர்; **சீலம்** - மேன்மைக் குணம், பெருமை; **சிந்திப்பார்** - நினைப்பவர்; **சிந்தை** - மனம், உள்ளம்; **ஏலவார்** - மணங் கமழ்வதும் நீண்டதுமான (வார் - நீண்ட); **குழல்** - கூந்தல்; **ஏத்தி** - துதித்து; **கம்பன் எம்மான்** - திருஏகாம்பரநாதன்; **பெற்றவாறு** - பெற்ற விதம்.

**பாடல் - 3**

சுந்தரமூர்த்திநாயனார் பல தலங்களுக்கும் யாத்திரை செய்தபோது, இராமேச்சரத்துக்கும் சென்றார். அத்தலத்தைத் தரிசித்துத் தேவாரப் பதிகம் பாடிய பின்னர், அங்கிருந்தவாறே, இலங்கையில் மாதோட்ட நன்னகரிலுள்ள, திருக்கேதீச்சர ஆலயத்தில் எழுந்தருளி இருக்கும் கேதீச்சரநாதர் மீது தேவாரப் பதிகம் ஒன்றைப் பாடினார். **“மூவரென இருவரென”** என்னும் தேவாரம், திருக்கேதீச்சரப் பதிகத்தில் உள்ள ஒன்பதாவது தேவாரமாகும்.

தலம் - **திருகேதீச்சரம்** பண் - **நட்டபாடை**

**திருச்சிற்றம்பலம்**

மூவரென இருவரென முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழில் மாதோட்டநன் னகரில்
பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின் கரைமேல்
தேவன்எனை ஆள்வான்திருக் கேதீச்சரத் தானே.

**திருச்சிற்றம்பலம்**

பொழிப்புரை: மாங்கனிகள் தொங்கும் மாமரச் சோலைகள் சூழ்ந்தது மாதோட்டம் என்னும் நகரம். அங்கே உள்ள பாலாவித் தீர்த்தமானது பாவங்கள், தீவினைகள் என்பவற்றை அறுக்க வல்லது. அப்புனிதமான தீர்த்தக்கரையிலே அமைந்துள்ள திருக்கேதீச்சர ஆலயத்தில் திருக்கேதீச்சரநாதர் பிரமா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மும்மூர்த்தியாகவும், சிவம், சக்தி என்னும் இருவராகவும் முக்கட் கடவுளாகவும், தேவனாகவும் இருந்து அடியேனை ஆட்கொண்டருளுகின்றார்.



இலவச விநியோகத்திற்காக

பத விளக்கம்: **மூவர்** - பிரமா, விஷ்ணு, உருத்திரன்; **இருவர்** - சிவம், சக்தி; **முக்கண்ணுடை மூர்த்தி** - நெற்றிக் கண்ணுடன் சேர்த்து மூன்று கண்களை உடைய சிவபெருமான்; **கனி** - பழம்; பொழில் - சோலை; **எனை** - அடியேனை.

## (ஈ) மாணிக்கவாசக சுவாமிகள் - திருவாசகம்

**பாடல் - 1**

திருவாசகம், திருக்கோவையார் என்பவற்றை மாணிக்கவாசகர் பாடியருளினார். எட்டாந் திருமுறையில் அடங்கும் திருவாசகப் பாடலின் ஒரு பகுதியாக அமைந்தது திருவண்ணாமலையில் அருளப் பெற்ற திருவெம்பாவை ஆகும். இப்பாட்டின் இறுதியில் **'எம்பாவாய்'** என்ற சொற்றொடர் வருவதால், எம்பாவை என்பதே இவ்வகைப் பாட்டுக்குப் பெயராகி, திரு என்னும் அடைமொழியைச் சேர்த்து **திருவெம்பாவை** ஆயிற்று.

கன்னிப் பெண்கள் தம் நாடு செழிக்கவும், நல்ல கணவர் கிடைக்கவும், பராசக்தியை வழிபடுவது மரபு. குளிர் மிகுந்த மார்கழி மாதத்தில் அவர்கள் துயிலெழுந்து, தோழியர்களுடன் நீர்நிலைக்குச் சென்று நீராடிய பின்னர், ஈர மண்ணில் பாவை உருவஞ் செய்து பராசக்தியை வழிபடுவர். அவ்வழிபாடு **பாவை நோன்பு** எனப்படும். மார்கழி மாதத்தில் திருவாதிரைக்குப் பத்து நாட்கள் முன் தொடங்கி, திருவாதிரையில் முடிவு பெறுமாறு நோன்பு நோற்பது சைவமரபு. நீராடப் போகும் பெண்கள் ஒருவரையொருவர் எள்ளி நகையாடிப் பாடிச் செல்வர். மாணிக்கவாசகர் திருவண்ணாமலையில் இருந்தபோது, அவ்வாறு பாடிச் செல்பவர்களைக் கண்டார். தம்மையும் அவர்களுள் ஒருவராகப் பாவித்து, அவர்கள் பாடுவது போலத் திருவெம்பாவையைப் பாடினார்.

தலம் - **திருவண்ணாமலை**

**திருச்சிற்றம்பலம்**

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னேயென்னே
ஈதே எந்தோழி பரிசேலோர் எம்பாவாய்.

**திருச்சிற்றம்பலம்**

பொழிப்புரை: ஒளியுடைய விசாலமான கண்களையுடைய தோழியே! தொடக்கமும் முடிவுமற்ற அருட்பெரும்ஜோதியான சிவபெருமானின் மகிமையை நாம் பாடிக் கொண்டு வருகிறோம். ஆனால், நீ அதனைக் கேட்காது இன்னமும் தூங்கிக் கொண்டிருக்கின்றாயோ? உன் காது கூர்மையானவை அல்லவோ? மகாதேவனாகிய நம் சிவபெருமானின் சிலம்பணிந்த திருவடிகளை வாழ்த்திக் கொண்டு வந்த அந்த வாழ்த்தொலி வீதியிலே கேட்டுப் பிறிதொரு பெண் பக்திப் பரவசமானாள்; விம்மி விம்மி அழுதாள்; மெய்ம்மறந்தாள்; மலர் நிறைந்த மென்மையான படுக்கையிலிருந்து புரண்டு விழுந்து இவ்வாறு ஒன்றும் செய்ய இயலாதவளாய்க் கிடந்தாள். அவளுடைய சிவபக்தி வியக்கத்தக்கது. அவ்வாறிருக்க நம் தோழியாகிய உன்னுடைய இயல்பு இதுதானா? இது என்ன வியப்பு? எம் பாவையாகிய பராசக்தியே!

பத விளக்கம்: **ஆதி** - தொடக்கம்; **அந்தம்** - முடிவு; **வாள் தடம் கண்** - ஒளியுடைய விசாலமான கண்; **வளருதல்** - நித்திரை செய்தல்; **மாதேவன்** - மகாதேவன்; **வார் கழல்கள்** - நெடிய வீரக்கழல்களை அணிந்த பாதம்; **விம்முதல்** - ஏங்குதல்; **போது ஆர்** - மலர் நிறைந்த; **அமளி** - படுக்கை; **பரிசு** - இயல்பு; **எம்பாவாய்** - எமது பாவை போன்ற தோழியே.

**பாடல் - 2**

மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகத்தில் கோயிற்றிருப்பதிகமும் அடங்கும். அது சிதம்பரத்தில் அருளிச் செய்யப்பட்டது. கோயிற் திருப்பதிகம் திருப்பெருந்துறைப் பெருமானை அடையுங் குறிப்பாக அருளிச் செய்யப்பட்டது. அதன் கருத்து அநுபோக இலக்கணம்; அதாவது சிவானுபூதிக்கு அடையாளமுமாகும். இறைவனுடன் இரண்டறக் கலந்து ஒன்றித்து நின்று தம்முள் உணரும் பேரின்ப நுகர்வு. கோயிற்றிருப்பதிகத்தில் உள்ள **"மாறி நின் ..."** என்ற பாடலையும், **"தந்ததுன் ..."** என்ற பாடலையும் இங்கு கற்போம்.

தலம் - **தில்லை**

**திருச்சிற்றம்பலம்**

மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
இன்பமே என்னுடை அன்பே.

**திருச்சிற்றம்பலம்**

பொழிப்புரை: தெளிந்த தேனின் சுவை போன்று உயிர்களுக்கு இனிமையானவனே! திருப்பெருந்துறையில் கோயில் கொண்டுள்ள சிவனே! எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்டு நிற்கும் இறவாப் பேரின்பப் பொருளே! என்னுடைய அன்பாய் இருப்பவனே! உனது நிலையான பேரருளை நோக்கி நிற்பதற்குப் பதிலாக, ஐம்பொறிகள், பொய்யான உலக இன்பங்களை நோக்கி நிற்கும்படி மயக்குகின்றன. அந்த ஐம்பொறிகளின் வழியே நான் செல்லாமல் என்னைத் தடுத்தனை; எனது மனத்தினுள்ளே அமுதம் போன்ற பேரின்ப உணர்வு விளங்கி, ஊற்றிலிருந்து நீர் எழும்புதல் போலத் தோன்றுகின்ற மேலான தன்மையை ஏற்படுத்தும் சோதியே! உனது உண்மையான திருவருட் கோலத்தை நான் கண்களால் காணும்படி எனக்கு அருள் செய்வாயாக.

பத விளக்கம்: **புலனைந்து** - ஐம்பொறிகள் ( மெய், வாய், கண், மூக்கு, செவி ); **அடைத்து** - தடுத்து; **என்னுள்** - எனது மனத்தினுள்ளே; **தேறல்** - தேன்; **ஈறிலா** - முடிவில்லாத, இறவாத.

**பாடல் - 3**

தலம் - **தில்லை**

**திருச்சிற்றம்பலம்**

தந்ததுன் றன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யானிதற் கிலன் ஓர்கைம் மாறே.

**திருச்சிற்றம்பலம்**

பொழிப்புரை: என்னுடைய தந்தையே! என்னையாளுகின்ற இறைவனே! அடியேனுடைய உடலை உனது திருமேனியாகக் கொண்டவனே! எனது உள்ளத்துள்ளேயும் நீ எழுந்தருளியிருக்கும் கோயில் கொண்டு எப்பொழுதும் வீற்றிருக்கின்ற இறைவனே! திருப்பெருந்துறையில் கோயில் கொண்டுள்ள எம்பெருமானே! தேவரீர் அடியேனுக்கு மெய்யறிவினைக் கொடுத்து, அதற்குப் பதிலாக எனது சீவபோதத்தைப் பெற்றுக் கொண்டாய். இப் பண்டமாற்றில் நான் அளவில்லாத பேரின்பத்தைப் பெற்றுக் கொண்டேன். ஆனால், என்னிடமிருந்து தேவரீர் பெற்றுக் கொண்டது ஒன்றுமேயில்லை. எனவே, நம்மிருவரில் யார் திறமையாளர்? இங்ஙனம் எனக்குப் பேரின்பப் பெருவாழ்வைத் தந்ததற்குக் கைம்மாறாக, உதவுவதற்கு என்னிடம் ஒன்றும் இல்லை.

பத விளக்கம்: **சதுரர்** - திறமையாளர்; **அந்தம்** - முடிவு; **ஆனந்தம்** - பேரின்பம், இன்பம்; **என்பால்** - என்னிடம்; **சிந்தை** - உள்ளம்; **எந்தை** - என்னுடைய தந்தை.



இலவச விநியோகத்திற்காக

### (உ) திருவிசைப்பா

சைவத் திருமுறைகளுள் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பன ஒன்பதாம் திருமுறையில் அடங்குகின்றன. அதில் திருவிசைப்பா என்பது **இறைவனின் பெருமையைப் பாடுகின்ற தெய்வத்தன்மை பொருந்திய இசைப்பாடல்** எனப் பொருள்படும். திருமாளிகைத் தேவர் தொடக்கம் சேதிராயர் வரையிலுள்ள ஒன்பது அடியவர்கள் பாடிய பாடல்கள் திருவிசைப்பாவில் இடம் பெறுகின்றன. கோயில் என்றழைக்கப்படும் தில்லைத் தலத்தின் மீது திருமாளிகைத்தேவர் பாடிய திருவிசைப்பாவினை இங்கு கற்போம்.

தலம் - **கோயில்** பண் - **பஞ்சமம்**

**திருச்சிற்றம்பலம்**

நீறணிபவளக் குன்றமே நின்ற
நெற்றிக்கண் ணுடையதோர் நெருப்பே
வேறணி புவன போகமே யோக
வெள்ளமே மேருவில் வீரா
ஆறணி சடையெம் அற்புதக் கூத்தா
அம்பொன்செ யம்பலத் தரசே
ஏறணி கொடியெம் மீசனே யுன்னைத்
தொண்டனேன் இசையுமா றிசையே.

**திருச்சிற்றம்பலம்**

பொழிப்புரை: திருநீற்றினை அணிந்த பவளமலை போன்ற இறைவனே! நெற்றிக் கண்ணினை உடையவனே! ஒப்பற்ற சோதி வடிவமாக நின்றவனே! வெவ்வேறாகிய அழகிய பெரிய உலகங்களும், அனுபவிக்கப்படுகின்ற பொருள்களுமாய் உள்ளவனே! யோக முதிர்ச்சியில் விளையும் இன்பப் பெருக்கே! மேரு மலையினை வில்லாக உடையவரே! கங்கையைச் சடையில் வைத்து, அற்புதமான திருநடனத்தைச் செய்கின்றவரே! பொன்னம்பலம் என்னும் கனகசபையில் திருநடனம் செய்கின்ற எமது தலைவனே! இடபக் கொடியினை உடைய எமது இறைவனே! அடியேன் தேவரீரைப் பொருந்தும் வண்ணம் மனமிரங்கி அருள் செய்வீராக.

பத விளக்கம்: **நீறு** - திருநீறு; **குன்றம்** - மலை; **நெருப்பு** - சோதி; **புவனம்** - உலகம்; **போகம்** - அனுபவிக்கப்படும் பொருள்; **ஆறு** - கங்கை; **அம்பலம்** - சிதம்பரம்; **ஏறு** - இடபம்; **தொண்டன்** - அடியவன்.

### (ஊ) திருப்பல்லாண்டு

சைவத் திருமுறைகளில் ஒன்பதாம் திருமுறையில் அடங்கும் திருப்பல்லாண்டு சேந்தனார் என்பவரால் பாடப்பட்டதாகும். **பல்லாண்டு என்பது இறைவனை, 'பல ஆண்டுகள் வாழ்க' என வாழ்த்திப் பாடும் அருட்பாக்களா**கும். சேந்தனார் மிகுந்த சிவபக்தி உடையவர். ஒருமுறை சிதம்பரத்தில் தேர்த் திருவிழாவின் போது, தேர் ஓடாமற் தடைப்பட்டு நின்றபோது அதனை அறிந்த சேந்தனார், திருப்பல்லாண்டைப் பாடியதும் தேர் தடை நீங்கி ஓடத் தொடங்கியது. அதனூடாக, சேந்தனாரின் பெருமையைச் சிவன் உலகறியச் செய்தார். இத்தகைய சிறப்புமிக்க திருப்பல்லாண்டுப் பதிகத்திலுள்ள **"தாதையைத் தாளற"** என்னும் பாடலைக் கற்போம்.

தலம் - **கோயில்** பண் - **பஞ்சமம்**

**திருச்சிற்றம்பலம்**

தாதையைத் தாளற வீசிய சண்டிக்கும்
அண்டத் தொடுமுடனே
பூதலத் தோரும் வணங்கப் பொற்கோயிலும்
போனகமும் அருளிச்
சோதி மணிமுடித் தாமமும் நாமமுந்
தொண்டர்க்கு நாயகமும்
பாத கத்துக்குப் பரிசு வைத்தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

**திருச்சிற்றம்பலம்**

**பொழிப்புரை:** தனது தந்தையினுடைய காலை வெட்டிய மகாபாதகத்தைச் செய்த சண்டேசுரருக்குத் தேவர்களும், மனிதர்களும் வணங்கும் படியாகக் கோயிலையும், வழிபாட்டையும், ஒளிவீசுகின்ற மணிமுடியில் அணிவதற்கான மாலையையும், புகழையும், சிவதொண்டர்க்கெல்லாம் தலைமையான தகைமையையும் அருளிச் செய்த சிவபிரான் பல்லாண்டு வாழ்வானாக என வேண்டுவோமாக. (இத் திருப்பல்லாண்டுடன் தொடர்பு உடைய கதையினைச் **சண்டேசுர நாயனார்** என்ற பாடத்தில் படிக்கலாம்.)

**பத விளக்கம்:** **தாதை** - தந்தை; **தாள்** - பாதம்; **சண்டி** - சண்டேசுரர்; **அண்டம்** - தேவலோகம்; **பூதலம்** - பூமி; **போனகம்** - திருவமுது; **தாமம்** - மாலை; **நாமம்** - புகழ்; **நாயகம்** - தலைமை; **வைத்தான்** - கொடுத்தான். பொதுவாக, எவருக்கும் தண்டனை கொடுத்தல் பாதகம். அதிலும் தந்தையின் காலை வெட்டுதல் மகாபாதகம். 'பாதகத்திற்குப் பரிசளித்தான்' எனப் பழிப்பது போல் புகழ்தல் வஞ்சப் புகழ்ச்சி அணியாகும்.

### (எ) திருமந்திரம்

திருமூலர் இயற்றிய திருமந்திரம் சைவத் திருமுறைகளுள் பத்தாவதாகும். திருமந்திரம் ஒன்பது தந்திரங்களையும் மூவாயிரம் பாடல்களையும் கொண்டது. இந்நூல் தோத்திர நூலாக மட்டுமன்றி, சாத்திர நூலாகவும் போற்றப்படுகிறது. எளிய சொற்களால், ஆழமான ஞான சிந்தனைகளைப் படிப்பவர் மனதில் எளிதில் பதியும்படி திருமூலர் அதனைப் பாடியுள்ளார். அத்தகைய சிறப்புமிக்க திருமந்திரத்தில் சிவ நாம மந்திரத்தின் பயனை விரித்துக் கூறும், **"சிவசிவ என்கிலர்"** எனத் தொடங்கும் திருமந்திரப் பாடல் தனிச் சிறப்புடையது; எல்லோருமே வாழ்வில் படித்துப் பயன் பெற வேண்டியது.

**திருச்சிற்றம்பலம்**

**சிவசிவ என்கிலர் தீவினை யாளர்**
**சிவசிவ என்றிடத் தீவினை மாளும்**
**சிவசிவ என்றிடத் தேவரு மாவர்**
**சிவசிவ என்னச் சிவகதி தானே.**

**திருச்சிற்றம்பலம்**

**பொழிப்புரை:** சிவாயநம என்னும் பஞ்சாட்சர மந்திரத்தின் சுருக்கமான சூக்கும வடிவமான 'சிவசிவ' என்ற ஈரெழுத்து மந்திரத்தைத் தீவினையாளர் உச்சரிக்கமாட்டார்கள். உச்சரிப்பார்களாயின், அவர்களது தீவினை ஒழியும்; புண்ணியம் வளரும்; தேவருமாவர்; இறுதியில் சிவகதியாகிய முத்தியுமடைவர். இம்மந்திரத்துக்கு அத்தகைய சக்தியுள்ளது.

**பத விளக்கம்:** **என்கிலர்** - உச்சரிக்கமாட்டார்; **என்றிட** - உச்சரிப்பாராயின்; **மாளும்** - ஒழியும்; **சிவகதி** - முத்தி.

### (ஏ) மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை

திருவாலவாயுடையார் தொடக்கம் நம்பியாண்டார் நம்பி வரையிலான பன்னிருவர் பாடிய பிரபந்தங்கள் பதினோராம் திருமுறையில் உள்ளன. அவற்றில் கபிலதேவ நாயனாரால் பாடப்பட்ட பிரபந்தம் **'மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை'** ஆகும். இப்பிரபந்தம் விநாயகப் பெருமானைப் பற்றிப் பாடப்பட்ட பக்தி இலக்கியமாகும். சிவபெருமானின் மூத்தபிள்ளை ஆகிய விநாயகரையே, மூத்தநாயனார், மூத்தபிள்ளையார் என்ற தொடர்கள் குறிப்பிடுகின்றன. மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலையில் இருபது பாடல்கள் உள்ளன. அவற்றில், விநாயகப் பெருமானை வணங்குவதன் அவசியத்தை **"விநாயகனே வெவ்வினையை....."** எனத் தொடங்கும் பாடலின் ஊடாக அறிவோம்.

**திருச்சிற்றம்பலம்**

**விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்**
**விநாயகனே வேட்கைதணி விப்பான் - விநாயகனே**
**விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாந் தன்மையினால்**
**கண்ணிற் பணிமின் கனிந்து.**

**திருச்சிற்றம்பலம்**



இலவச விநியோகத்திற்காக

**பொழிப்புரை:** விநாயகப் பெருமான் கொடிய வினையினை அடியோடு அறுக்கவல்லவர்; எம்மிடமுள்ள ஆசை, அவா என்பவை எம்மை ஆட்டுவிக்காமல் அவற்றைத் தணிப்பவர்; அவரே மண்ணுலகம், விண்ணுலகம் என்பவற்றுக்கும் தலைவராக உள்ளார். ஆகையால், நாம் அவரை அன்புடன் பணிந்து போற்றுவோம்.

**பத விளக்கம்:** **வெவ்வினை** - கொடிய வினை; **வேர்** - அடி; **வேட்கை** - ஆசை; **நாதன்** - தலைவன்; **பணிமின்** - பணிந்து போற்றுங்கள்.

### (ஐ) பெரிய புராணம்

சேக்கிழார் பெருமானால் இயற்றப்பட்ட பெரிய புராணம், திருத்தொண்டர் புராணம் என்னும் பெயராலும் வழங்கப்படுகிறது. அது சைவத் திருமுறைகளில் பன்னிரெண்டாவதாகும். பெரிய புராணத்திலே தனியடியார்கள் அறுபத்து மூவரின் வரலாறும், தொகையடியார்கள் ஒன்பது தொகுதியினரின் வரலாறும் பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடப்பட்டுள்ளது. பெரிய புராணத்தில், சிவனின் சிதம்பர நடனத்தைப் போற்றிப் பக்தியுணர்வு பெருக, சேக்கிழார் பாடியது, **"ஆதியாய் நடுவும் ஆகி...."** எனத் தொடங்கும் பாடலாகும்.

**தலம்** - தில்லை

**திருச்சிற்றம்பலம்**

**ஆதியாய் நடுவும் ஆகி அளவிலா அளவும் ஆகிச்**
**சோதியாய் உணர்வும் ஆகித் தோன்றிய பொருளும் ஆகிப்**
**பேதியா ஏகம் ஆகிப் பெண்ணுமாய் ஆணும் ஆகிப்**
**போதியா நிற்கும் தில்லைப் பொதுநடம் போற்றி! போற்றி!**

**திருச்சிற்றம்பலம்**

**பொழிப்புரை:** நடராஜப் பெருமான் முதன்மையான தெய்வமாவார். (அவர்) நடுநிலைமையாளர்; அடி, முடி என்னும் எல்லைகள் இல்லாத விசுவரூபம் (பேருருவம்) கொள்பவர்; சோதி வடிவானவர்; ஞான வடிவினர்; தானாகவே தோன்றிய சுயம்பு ஆவார். பேதங்களில்லாத ஒரு தெய்வம். அவர் அர்த்தநாரீச்சுரர் ஆவர். அத்தகைய சிறப்புக்கள் உள்ள நடராஜர் ஐந்தொழிற் தத்துவங்களைப் போதிக்கும் வகையில், சிதம்பரத்திலுள்ள பொன்னம்பலத்தில் திருநடனம் புரிகின்ற தோற்றத்தை மனமே போற்றுவாயாக! போற்றுவாயாக!

**பத விளக்கம்:** **ஆதி** - முதன்மை; **நடுவு** - நடுவு நிலைமை; **அளவிலா அளவு** - அடி, முடி என்னும் எல்லைகளற்ற பேரளவு, விசுவரூபம்; **உணர்வு** - மெய்யுணர்வு (ஞானம்); **தோன்றிய பொருள்** - தானே தோன்றும் பரம்பொருள் (சுயம்பு); **பேதியா ஏகம்** - பிரிவில்லாத ஒரு முழுப்பொருள்; **போதியா நிற்கும்** - போதிக்கும்.

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருமந்திரத்தின் சிறப்புத் தன்மைகள் நான்கினைக் குறிப்பிடுக.
2. திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பவற்றுக்கு விளக்கம் தருக.
3. "நீறணி பவள..." என்று தொடங்கும் திருவிசைப்பா யாரால், எத்தலத்தின் மீது பாடப்பட்டது?
4. திருப்பல்லாண்டு எச்சந்தர்ப்பத்தில் பாடப்பட்டது?
5. 'பாதகத்துக்குப் பரிசு வைத்தான்' என்ற பாடல் அடியை விளக்குக.
6. விநாயகப் பெருமானை வணங்குவதனால் கிடைக்கும் நன்மைகளைக் குறிப்பிடுக.

**செயற்பாடு**

1. தரப்பட்டுள்ள திருமுறைப் பாடல்களை மனனம் செய்து, பண்ணோடு/ இசையோடு பாடிக்காட்டுக. திருமுறைப் பாடல்களைப் பாடும்போது கவனிக்க வேண்டிய அம்சங்களைப் பின்பற்றுக. திருமுறைப் பாடல்களுக்கு பொழிப்புரை, பாடப்பெற்ற தலங்கள், சந்தர்ப்பங்கள் என்பவற்றையும் எழுதுக. அவற்றை வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
2. திருவிசைப்பா பாடிய ஒன்பது அடியார்களின் பெயர்களையும் தேடித் தொகுத்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
3. சேந்தனாரின் வரலாற்றுச் சுருக்கத்தைத் தேடித் தொகுத்து, காட்சிப்படுத்துக.

4. பதினோராந் திருமுறையில் அடங்கும் நூல்களையும், அவற்றின் ஆசிரியர் பெயர்களையும் அட்டவணைப்படுத்துக.
5. பெரிய புராணத்தின் வேறு பெயர், அதன் சிறப்பியல்புகள் முதலான விபரங்களை எழுதி, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
6. பின்வரும் அட்டவணையைப் பூர்த்தி செய்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

| திருமுறைப்பாடலடி | அடங்கும் திருமுறை | நூலின் பெயர் | ஆசிரியர் | பாடப்பட் தலம் |
|---|---|---|---|---|
| 1. சிறையாரு மடக்கிளியே | | | | |
| 2. வேயுறு தோளிபங்கன் | | | | |
| 3. இடரினுந் தளரினும் | | | | |
| 4. திருவேயென் செல்வமே | | | | |
| 5. திருக்கோயி லில்லாத | | | | |
| 6. சங்கநிதி பதுமநிதி | | | | |
| 7. கோல மால்வரை | | | | |
| 8. ஆலந் தானுகந் | | | | |
| 9. மூவரென இருவரென | | | | |
| 10. ஆதியும் அந்தமும் | | | | |
| 11. மாறிநின் றென்னை | | | | |
| 12. தந்ததுன் தன்னை | | | | |
| 13. நீறணிபவளக் குன்றமே | | | | |
| 14. தாதையைத் தாளற | | | | |
| 15. சிவசிவ என்கிலர் | | | | |
| 16. விநாயகனே வெவ்வினையை | | | | |
| 17. ஆதியாய் நடுவும் ஆகி | | | | |

## பாடச்சுருக்கம்

- பஞ்ச புராணத்தில் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் என்பன அடங்கும்.
- முதல் ஏழு திருமுறைகளும் தேவாரங்களாகும்.
- மாணிக்கவாசகரால் பாடப்பட்ட திருவாசகம் எட்டாந் திருமுறையில் அடங்கும்.
- திருவிசைப்பா என்பது இறைவனின் பெருமையைப் பாடுகின்ற தெய்வத்தன்மை பொருந்திய இசைப்பாடல் எனப் பொருள்படும்.
- திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னுமிரண்டு நூல்களும் ஒன்பதாந் திருமுறையில் அடங்கும்.
- திருப்பல்லாண்டு என்பது இறைவனை, 'பல ஆண்டுகள் வாழ்க' என வாழ்த்திப் பாடும் அருட்பாக்கள் ஆகும். இதன் ஆசிரியர் சேந்தனார்.
- திருமந்திரம் பத்தாந் திருமுறையில் அடங்கும்; அதன் ஆசிரியர் திருமூலர். திருமந்திரம் மூவாயிரம் பாடல்களைக் கொண்டது.
- மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை பதினோராம் திருமுறையில் அடங்கும். இந்நூலில் விநாயகப் பெருமானைப் பற்றிப் பாடப்பட்டுள்ளது.
- சைவத் திருமுறைகளில் பன்னிரெண்டாவதாக உள்ள பெரிய புராணம் சேக்கிழார் பெருமானால் இயற்றப்பட்டது. இந்நூல், திருத்தொண்டர் புராணம் என்னும் பெயராலும் வழங்கப்படுகின்றது.


இலவச விநியோகத்திற்காக

# 9 தோத்திரப்பாடல் - திருப்புகழ்

திருப்புகழ் பாடியவர் அருணகிரிநாதர். அவர் திருவண்ணாமலையில் பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்து சமயப் பணியாற்றிய அருளாளர்; முருக பக்தர்; கந்தரலங்காரம், கந்தரனுபூதி, திருவகுப்பு, கந்தரந்தாதி, வேல்விருத்தம் என்பவற்றையும் பாடியருளியவர். இளமையிலே பெற்றோரை இழந்த அருணகிரிநாதருக்கு நல்ல வழியில் வாழ, வழிகாட்டப் பெரியோர் யாரும் வாய்க்கவில்லை. அதனால், தீயவழியில் சென்று வாழ்க்கையைச் சீரழித்துக் கொண்டார்; எல்லாவற்றையும் இழந்து, மற்றவர்களின் நகைப்புக்குரியவரானார். எனவே, வாழ்க்கையில் வெறுப்படைந்து, திருவண்ணாமலைக் கோயிற் கோபுரத்திலேறிக் கீழே குதித்தார். அப்போது, முருகன் முதியவர் வடிவில் தோன்றி, அருணகிரிநாதரைத் தாங்கிக் காப்பாற்றி, அவர் நாவில் தன் கையிலிருந்த வேலால் எழுதி, 'பாடு' என்று கட்டளையிட்டார். எப்படித் தொடங்குவது என அருணகிரிநாதர் வினவ, **'முத்தைத் தரு'** என்று முருகன் அடியெடுத்துக் கொடுக்க, கொட்டும் அருவிபோல அவரிடமிருந்து பாடல்கள் வெளிவந்தன.

முருகனின் அருள் பெற்ற அருணகிரிநாதர் தமிழ்நாடு முழுவதும் சென்று, முருகனின் தலங்கள்மீது திருப்புகழ் பாடினார். **முருகப்பெருமானது திருத்தக்க புகழைக் கூறும் பாடல் திருப்புகழ்** எனப் பெயர் பெறும். திருப்புகழ் இனிய சந்தமும், ஓசை நயமும், கருத்துச் செறிவும் கொண்டது; அறிவுரைகளையும் நீதிமொழிகளையும், தெய்வத் திருவிளையாடல்களையும் கூறுவது. அருணகிரிநாதர், முருகனின் ஆறுபடை வீடுகளில் ஒன்றான திருவேரகம் (சுவாமி மலை) என்னும் தலத்தில் உள்ள முருகன் மீது பாடிய திருப்புகழைக் கற்போம்.

தான தனதன தான தனதன
தான தனதன – தனதான

பாதி மதிநதி போதும் அணிசடை
நாதர் அருளிய - குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய - மணவாளா
காதும் ஒருவிழி காகம் உறஅருள்
மாயன் அரிதிரு - மருகோனே
காலன் எனைஅணு காமல் உனதிரு
காலில் வழிபட - அருள்வாயே
ஆதி அயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு - சிறைமீளா
ஆடு மயிலினில் ஏறி அமரர்கள்
சூழ வலம்வரும் - இளையோனே
சூதம் மிகவளர் சோலை மருவு
சுவாமி மலைதனில் - உறைவோனே
சூரன் உடலற வாரி சுவறிட
வேலை விடவல - பெருமாளே.

**பொழிப்புரை:** மூன்றாம் பிறைச் சந்திரனையும் கங்கையையும் கொன்றை மலர் மாலையையும் சூடியிருக்கின்ற சடா முடியையுடையவராகிய சிவபெருமான் பெற்ற இளமையான திருவருட் செல்வமே, வெல்லப் பாகினையும் முப்பழச் சுவையினையுமொத்த இனிமையான மொழிகளைப் பேசுகின்ற குறமகளாகிய வள்ளி நாயகியாரின் பாதங்களைத் தடவிய மணவாளனே! காக்கைக்கு ஒற்றைக் கண் கெட்டு ஒழியும் வண்ணம் அருள் செய்த திருமாலின் அழகிய மருமகனே! பிரமதேவருடனே மற்றத் தேவர்களும் வானுலகத்தை ஆளுவதற்கு வழிசெய்து, பிரமதேவரைச் சிறைமீட்டு, தேவர்கள் சூழ ஆடும் மயிலினிலே அமர்ந்து உலாவி வருகின்ற முருகப் பெருமானே!

மாமரங்கள் மிக வளர்ந்திருக்கின்ற சோலைகளை உடைய சுவாமிமலை என்னும் திருப்பதியிலே எழுந்தருளி இருப்பவனே! சூரபன்மனது உடம்பு சிதையவும் கடல்நீர் வற்றிப் போகவும் வேற்படையைச் செலுத்தவல்ல


இலவச விநியோகத்திற்காக

பெருமைமிக்கவனே! இயமன் என்னை நெருங்கி வராமல், உனது இரண்டு திருவடிகளையும் போற்றி வணங்குவதற்குத் திருவருள் புரிவாயாக.

**பத விளக்கம்:** **பாதி மதி** - பிறைச் சந்திரன்; **நதி** - கங்கை; **போது** - கொன்றை மலர் மாலை; **அணி** - சூடி; **பாகு** - சர்க்கரைப் பாகு; **கனி** - முக்கனி (மா, பலா, வாழை); **மருகோன்** - மருமகன்; **காலன்** - இயமன்; **அயன்** - பிரமதேவன், பிரமா; **அமரர்** - தேவர்; **சூதம்** - மாமரம்; **வாரி** - கடல்.

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. அருணகிரிநாதர் பாடிய நூல்கள் நான்கினைக் குறிப்பிடுக.
2. திருப்புகழ் என்பதன் பொருள் யாது?
3. திருப்புகழின் சிறப்புக்கள் ஐந்து தருக.
4. அருணகிரிநாதர் பாடிய முதலாவது திருப்புகழின் முதலடியைக் குறிப்பிடுக.

## செயற்பாடு

1. முருகனின் ஆறுபடை வீடுகளின் பெயர்களையும் தேடித் தொகுத்து, வகுப்பில் காட்சிப்படுத்துக.
2. தரப்பட்ட திருப்புகழை மனனம் செய்து, வகுப்பில் பாடிக்காட்டுக.

### பாடச்சுருக்கம்

- திருப்புகழ் பாடியவர் அருணகிரிநாதர். திருப்புகழ் பல்வேறு சிறப்புகளை உடையது.
- அருணகிரிநாதர் சிறந்த முருகபக்தர்; முருகன்மீது பல நூல்களைப் பாடியுள்ளார்.
- முருகப் பெருமான், அருணகிரிநாதர் திருப்புகழ் பாட அடியெடுத்துக் கொடுத்தார்.
- முருகனின் ஆறுபடை வீடுகளுள் (சுவாமிமலையும்) திருவேரகமும் ஒன்றாகும்.


இலவச விநியோகத்திற்காக

# 10 திருமுறைகளில் காணப்படும் புராண இதிகாசக் கருத்துக்கள்

புராணம் என்பது புராதனமானது (பழமையானது) எனப் பொருள்படும். முழுமையானதால், புராணம் என்ற கருத்தும் உண்டு. இறைவன், தேவர் உலகு, பூவுலகு, ஞானிகள், அரசுகள் ஆகியவற்றினைப் பற்றிய கதைகள் புராணங்களில் இடம் பெற்றுள்ளன. இதிகாசம் என்பது, இது இவ்வாறு முன்பு நடந்தது எனும் பொருளை உடையது.

புராண இதிகாசக் கதைகள் அதிக செல்வாக்குப் பெற்று, காலா காலமாக மக்களிடம் நிலவின. தமிழ்நாட்டில் சைவ, வைணவ அடியார்கள் பக்திப்பாடல்களைப் பாடியபோது, அவற்றில் புராண இதிகாசக் கதைகளை இணைத்துப் பாடினர். அதன் மூலம் தத்தமது சமயங்களின் தொன்மையையும், மேன்மையையும் எடுத்துக் காட்டுவதுடன், அவற்றை மக்களிடம் விளக்குவதும் பரப்புவதும் அவர்களது நோக்கமாக இருந்தது. இவ்வகையில் திருமுறைப் பாடல்களில் புராண, இதிகாசக் கதைகள் பல இடம் பெற்றுள்ளன.

புராண இதிகாசக் கதைகள், சிவபக்தியையும் சிவனது வீரதீரச்செயல்கள், அருட்திறன், தனித்துவம், மேன்மை என்பனவற்றையும் புலப்படுத்துவனவாகும். திருமுறைப்பாடல்களினூடாக, சிவன் நஞ்சுண்டமை, கங்கையைச் சடையில் தரித்தமை, யமனை உதைத்தமை முதலான புராணக் கதை மரபுகளும், சிவன் இராவணனுக்கு அருள்புரிந்தமை முதலான இதிகாசக் கதைமரபுகளும் விளக்கப்படுகின்றன. திருமுறைப்பாடல்களில் அடங்கும் சம்பந்தரின்"வேயுறு தோளிபங்கன்", "இடரினும் தளரினும்" எனத் தொடங்கும் தேவாரப்பாடல்களிலும், சுந்தரரின் "கோலமால்வரை" "ஆலந்தானுகந்து" எனத் தொடங்கும் தேவாரப்பாடல்களிலும் **இறைவன் நஞ்சுண்ட புராணக் கதை** எடுத்தாளப்பட்டுள்ளது.

முன்னொரு காலத்தில் அசுரர்கள் வரங்கள் பல பெற்றிருந்தார்கள். அதனால், அவர்கள் தேவர்களைத் துன்புறுத்தினார்கள். அதனைத் தாங்க முடியாத தேவர்கள், பிரமதேவரிடம் சரண்புகுந்து அசுரர்களை வெல்லும் முறையைத் தெரிவித்து அழிவில்லா வாழ்வைத் தருமாறு வேண்டினர். பிரம தேவர் அவர்களை விஷ்ணுவிடம் அழைத்துச் சென்றார். "பாற்கடலைக் கடைந்து அமிர்தம் பெற்று விட்டால் அழிவில்லாது வாழலாம். ஆனால், அதற்கு அசுரர் உதவியும் வேண்டும்" என்று விஷ்ணு கூறினார். அமிர்தம் பெற்று அழிவில்லாது வாழும் நோக்கில் தேவர்கள் அசுரர்களை அழைத்தனர். இருசாராரும் மந்தரமலையை மத்தாகவும் வாசுகி என்ற பாம்பைக் கயிறாகவும் பயன்படுத்தி, திருப்பாற் கடலைக் கடையத்தொடங்கினர். தேவர்கள் பாம்பின் வாற்பக்கமும் அசுரர்கள் அதன் தலைப் பக்கமும் நின்று, பாற்கடலைக் கடையத்தொடங்கினர். அப்பொழுது மலை நேராகநில்லாது சாய்ந்த வண்ணம் ஆடியது. அதனை அவதானித்த விஷ்ணு, ஆமைவடிவமாக, கூர்ம அவதாரம் எடுத்தார். மலையின் கீழே சென்று, அதனைத் தமது முதுகிலே தாங்கிக்கொள்ள, மலை சாயாமல் நேரே நின்றது. அதன்பின் தேவர்களும் அசுரர்களும் அமிர்தத்தை விரைவில் எடுக்கும் ஆர்வத்தால் முழுப்பலத்துடன் கடைந்தனர். அதனாற் துன்புற்று மூச்சுவிடத் திணறிய வாசுகி, தன்னுள் இருந்த நஞ்சைக் கக்கியது. அந்த நஞ்சின் அகோரத்தினாலே அசுரர்களுடைய உடல் கரியநிறமாகின. வாசுகி கக்கிய அந்த நஞ்சின் அகோரத்தை எவராலும் தாங்கமுடியவில்லை. எனவே, இந்திரன் முதலான தேவர்கள் அனைவரும் சிவபெருமானிடம் சென்று, நிகழ்ந்ததைக் கூறி, தம்மைக் காத்தருளுமாறு வேண்டினர். சிவன் **ஆலகாலம்** என்ற அந்த நஞ்சை எடுத்து உண்ண, அது அவரது கண்டத்திலே தங்கியது. அதனால், சிவன் **ஆலமுண்ட கண்டன், விடமுண்ட கண்டன்** என்ற பெயர்களாற் போற்றப்படுகின்றார்.

தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடையத்தொடங்கு முன்னர், இறைவனை வழிபட்டு, அவரது ஆசியைப் பெற்றிருந்தல் வேண்டும். ஆனால், அவர்கள் அதனைக் செய்யத் தவறிவிட்டனர். எனினும், முயற்சியொன்றினைச் செய்யும்பொழுது இடையூறு ஏற்பட்டால், அவ்வேளையில் இறைவனை நினைப்பது உலக இயல்பு. அவ்வாறே, தேவர்களும், அசுரர்களும் ஆபத்து வந்தபோது இறைவனின் துணையை நாடினர். ஆனாலும், தம்மை வணங்காது விட்டனர் என்பதற்காக, இறைவன் அவர்களது துன்பத்தைப் போக்காது விடவில்லை. இறைவன் விருப்பு வெறுப்பு அற்றவன். இதனை, **சங்கரன்** (சுகத்தைச் செய்பவர்) என திருவருட்பயன் குறிப்பிடும். எந்தச் செயலைத் தொடங்குமுன்பும், இறைவனை நினைத்து வழிபட்டு, அவரது ஆசியைப் பெற்றிருந்தல் வேண்டும் என்ற நல்ல அறிவுரை இக் கதை மூலம் விளக்கப்படுகின்றது.



இலவச விநியோகத்திற்காக

திருமுறைப்பாடல்களில் ஒன்றான சுந்தரரின், **"ஆலந்தானுகந்து "** எனத் தொடங்கும் தேவாரப் பாடலில் **இறைவன் யமனை உதைத்த புராணக்கதை** எடுத்தாளப்பட்டுள்ளது. மிருகண்டு முனிவரின் மகன் மார்க்கண்டேயர். அவருக்கு ஆயுள் பதினாறு என்பதனால் பெற்றோர் மிகுந்த துன்பமடைந்தனர். அதனை அறிந்த மார்க்கண்டேயர், அவர்களுக்கு ஆறுதல் கூறி, அவர்களின் அனுமதியுடன், சிவனை நோக்கித் தவஞ்செய்தார். சிவபெருமான் காலனுக்கு அஞ்ச வேண்டியதில்லை என்று வரம் கொடுத்த ருளினார். மார்க்கண்டேயருக்குப் பதினாறு வயது முடிந்தது. சிவன் கொடுத்த வரத்தை அறிந்திராத யமன், பாசக்கயிறுடன் சென்று, மார்க்கண்டேயர் மீது அதனை வீசினான். அப்போது சிவபெருமான் தமது திருவடிகளால் யமனை உதைத்து, மார்க்கண்டேயருக்கு ஆயுளையும் அருளையும் பாலித்தார்.

சம்பந்தரின், **"**வேயுறு தோளிபங்கன்**"** எனத் தொடங்கும் தேவாரத்திலும், நாவுக்கரசரின், **"**சங்கநிதி பதுமநிதி**"** எனத் தொடங்கும் தேவாரத்திலும், திருமாளிகைத்தேவர் பாடிய **"**நீறணிபவளக் குன்றமே**"** என்ற திருவிசைப்பாவிலும் **இறைவன் கங்கையைச் சடையில்தரித்த புராணக்கதை** எடுத்தாளப்பட்டுள்ளது. பகிரதன் என்ற மன்னன் ஆகாயகங்கையைப் பூமிக்குக் கொண்டுவர நினைத்து, சிவபெருமானை நோக்கித் தவம் செய்தான். கங்கை பூவுலகத்தில் பாய்ந்தால், அது அழிந்துவிடும். அதனால், அடியார்க்கு எளியரான சிவபெருமான் பகிரதனுக்காக ஆகாயகங்கையை ஒரு திவலையாக்கி, தம் சடாமுடியில் தரித்துக் கொண்டார்.

நாயன்மார் தமது பாடல்களில், புராணக் கதைகளை மட்டுமன்றி, இதிகாசக் கதைகளையும் கையாண்டுள்ளனர். சம்பந்தரின், **"எடுத்தவன் தருக்கை"** என்ற தேவாரப் பாடலில், **இறைவன் இராவணனது கர்வத்தை அடக்கி அருள்புரிந்த இதிகாசக்கதை** குறிப்பிடப்பட்டுள்ளது. இராவணன் புட்பக விமானத்திலேறி, ஆகாயமார்க்கமாகச் சென்றான். அப்போது, கயிலைமலை தடையாக இருப்பதை உணர்ந்து, அந்த மலையை இராவணன் பெயர்த்தெடுக்க முயன்றான். அப்பொழுது சிவபெருமான் தமது திருவடிப்பெருவிரலினால் மலையை ஊன்றி, இராவணனின் கர்வத்தை அடக்கினார். இராவணன் கதறி அழுதான். சிவபக்தனான அவன், இறைவன் சாமவேதப்பிரியன் என்பதையுணர்ந்து, இனிமையாகப் பாடினான். இறைவன் மனமகிழ்ந்து, இராவணனுக்கு மந்திரவாளும் பிறவரங்களும் கொடுத்தருளினார்.

நாயன்மார், புராண இதிகாசக் கதைகளைத் திருப்பதிகங்களில் பாடி, தமிழ் நாட்டில் சைவத்தின் தொன்மையையும், மேன்மையையும் எடுத்துரைத்தனர். அவற்றை மக்களிடம் பரப்பினர். இது நாயன்மார் சைவ சமயத்தை வளர்க்க, கையாண்ட உத்தியாகும்.

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. புராணம் என்பதன் பொருள் யாது?
2. சைவ, வைணவ அடியார்கள் பக்திப் பாடல்களில் புராண இதிகாசக் கதைகளை இணைத்துப் பாடியமைக்கான காரணங்கள் யாவை?

### செயற்பாடு

1. விடம் உண்ட கதை மூலம் நீங்கள் பெற்றுக் கொண்ட அறிவுரைகளைத் தொகுத்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
2. திருமுறைப்பாடல்களில் வரும் புராண இதிகாசக் கதைகளுடன் தொடர்புடைய அடிகளையும் அவை இடம்பெறும் திருமுறை, திருமுறை ஆசிரியர் போன்ற விடயங்களையும் தேடித் தொகுத்து காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- புராணம் என்பது புராதனம், பழமையானது எனப் பொருள் தரும்.
- இதிகாசம் என்பது இது இவ்வாறு முன்னே நடந்தது எனும் பொருளைத் தரும்.
- புராண இதிகாசக் கதைகள், சிவபக்தியையும் சிவனது வீரதீரச்செயல்கள், அருட்திறன், தனித்துவம், மேன்மை என்பனவற்றை விளக்குவனவாகும்.



இலவச விநியோகத்திற்காக

பாடித் துதித்தார். இவ்வாறாகப் பல தலங்களையும் வணங்கிக் கொண்டு, தில்லையை அடைந்து நடேசப் பெருமானை வணங்கிப் பதிகம் பாடினார். அப்பொழுது, ''திருவாரூரில் நம்மிடம் வருக'' என்று ஓர் ஒலி கேட்க, அவர் திருவாரூரை நோக்கிப் புறப்பட்டார். செல்லும் வழியிற் சீர்காழியை அடைந்து, 'சம்பந்தர் பிறந்தருளிய பெரும்புகலி உள்ளும் நான் மிதியேன்' என்று ஊர் எல்லைப் புறத்தில் வணங்கி வலம்வரும்பொழுது, சிவபெருமானும் எதிரே காட்சி கொடுக்க, **''சாதலும் பிறத்தலுந் தவிர்த்தெனை''** என்ற பதிகத்தைப் பாடி வழிபட்டார்.

அதன் பின்னர், பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருவாரூருக்குச் சென்றார். ஆரூரரின் வருகையைத் தியாகேசர், அவ்வூரிலுள்ள அடியார்களுக்கு அறிவித்தார். எனவே, அடியார்கள் பல்வகை வாத்தியங்கள் முழங்க, அவரை எதிர்கொண்டு வரவேற்றனர். அப்பொழுது நம்பியாரூரர் அவ்வடியார்களை நோக்கி, **''கரையுங் கடலும்''** என்று பதிகம் பாடி வணங்கினார்.

## 4. தம்பிரான் தோழராதல்

பின்னர், திருமூலட்டானத்தைச் சூழ்ந்த திருமாளிகை வாயிலிற் புகுந்து வன்மீகநாதரை வணங்கினார். அவ்வேளையில், ''நாம் உனக்குத் தோழரானோம்; நாம் உன்னைத் தடுத்து ஆட்கொண்ட, அந்த மணக்கோலத்துடன் நீ மண்மேல் விளையாடு'' என்று அசரீரி ஒலி கேட்டது. அன்று முதல் அடியார்கள் அவரைத் **தம்பிரான் தோழர்** என்றும் அழைக்கலாயினர்.

## 5. பரவையாரைத் திருமணஞ் செய்தல்

கயிலைச் சேடியரிருவரிற் கமலினியார், திருவாரூரில் பரவையார் என்னும் பெயருடன் வாழ்ந்து வந்தார். அவர் திருவாரூர்க் கோயிலுக்குத் தினமும் சென்று, மாலைகட்டல் முதலான தொண்டுகளைச் செய்து வந்தார். ஒரு நாள் சுந்தரர் அவரைக் கண்டார். இருவரும் ஒருவரை ஒருவர் விரும்பினர். இறைவன் திருவருளால் இருவருக்குந் திருமணம் நிறைவேறியது. இல்வாழ்க்கையில் ஈடுபட்ட சுந்தரர் அடியார்க்கு அமுது செய்வித்தல், இறைவன் புகழ் பாடல் ஆகிய பணிகளில் ஈடுபட்டிருந்தார்.

## 6. சுந்தரர் திருத்தொண்டத் தொகையைப் பாடியமை

ஒருநாள் அவர் திருவாரூர்க் கோயிலுக்குட் செல்லும்பொழுது, முற்புறத்திலுள்ள தேவாசிரியன் என்னும் மண்டபத்திற் கூடியிருந்த அடியார்களைக் கண்டார். உடனே, ''இந்த அடியார்களுக்கு நான் அடியவனாகும் நாள் எந்நாள்?'' என்று இறைவனிடங் கேட்டு வணங்கினார். அப்பொழுது இறைவன் அவருக்குக் காட்சிகொடுத்து, அடியார்களின் பெருமையையும் அவர்களது வழித்தொண்டின் வரலாறுகளையும் அவருக்கு உணர்த்தி, அவர்களைப் பாடுவதற்கு, **''தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்''** என்று அடியும் எடுத்துக் கொடுத்தார். அவ்வாறு தொடங்கிச் சுந்தரர் திருத்தொண்டத் தொகையைப் பாடி முடித்தார்.

## 7. குண்டையூர்க்கிழார் நெல் பெற்றமை

சுந்தரரின் இல்வாழ்க்கை சிறப்பாக நடைபெறுவதற்குத் தேவையான பொருள்களை குண்டையூர்க்கிழார் என்ற செல்வர் வழங்கி வந்தார். இவ்வாறு நடைபெற்று வருகையில், மழை இல்லாமற் பஞ்சம் ஏற்பட்டதால், சுந்தரருக்கு நெல் அனுப்ப முடியவில்லை. எனவே, அவர் மிகவும் மனம் வருந்தி, ஒருநாள் இரவு உணவு உண்ணாமலே உறங்கினார். அன்று இரவு சிவபெருமான் அவருடைய கனவிலே தோன்றி, ''ஆரூரன் தனக்கு உன்பால் நெல் தந்தோம்'' என்று அருளினார். குண்டையூர்க் கிழார் நித்திரைவிட்டு எழுந்தபொழுது, அவரின் வீடு முழுவதும் நெல் நிறைந்திருந்தது. எனினும், அதனைத் திருவாரூருக்கு எடுத்துச் செல்ல ஆள் கிடைக்கவில்லை. நிலைமையைக் குண்டையூர்க் கிழார் சுந்தரருக்குத் தெரிவித்தார். இந்நிலையிற் சுந்தரர், **''நீள நினைந்தடியேன்''** என்ற பதிகத்தைப் பாடினார். அன்றிரவு பரவையாரின் மாளிகையில் நெல் மலையாகக் குவிக்கப்பட்டது.

## 8. சுந்தரர், 'சிங்கடியப்பன்'' 'வனப்பகையப்பன்' ஆனமை

திருநாட்டியத்தான் குடியிலே வாழ்ந்த கோட்புலியாரது அழைப்பை ஏற்று, நம்பியாரூரர் அங்கு சென்றார். அவரைக் கோட்புலியார் தமது மனையில் விருந்தினராக வரவேற்றார். பின்னர், அவர் தம் புதல்வியரான சிங்கடியாரையும் வனப்பகையாரையும் ஆட்கொண்டருள வேண்டும் என்று சுந்தரரை இரந்தார். ''இவ்விருவரும் எனக்குப் புதல்வியராவர்'' என்று கூறிச் சுந்தரர் அவர்களை உச்சி மோந்தார். அன்று முதல் சுந்தரர் தம்மைச் **'சிங்கடியப்பன்'** என்றும் **'வனப்பகையப்பன்'** என்றும் பதிகங்களில் அமைத்துப் பாடலானார்.

## 9. செங்கற்கள் பொன்கட்டிகளானமை

திருவாரூரிற் பங்குனி உத்தரத் திருவிழாச் செலவிற்காகப் பரவையாருக்குக் கொடுப்பதற்கு, சுந்தரருக்கு பொன் தேவையாக இருந்தது. எனவே, அவர் திருப்புகலூருக்குச் சென்று, இறைவனை வணங்கி, தமக்குப் பொன்



இலவச விநியோகத்திற்காக

தருமாறு இரந்தார். ஆயினும், அவருக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. மனச் சோர்வுடன் அண்மையிலிருந்த மடத்துக்குச் செல்ல நினைத்து, கோயில் முற்றத்தின் ஒருபக்கத்தில் அமர்ந்திருந்தார். அப்பொழுது சிவபெருமான் திருவருளால் நித்திரை வருதலும், அங்கிருந்த செங்கற்களாலே தலையணை அமைத்து, நித்திரை செய்தார். அவர் விழித்தபொழுது செங்கற்களெல்லாம் பொன்கட்டிகளாக இருந்தன. அப்பொழுது சுந்தரர், **"தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்"** என்ற திருப்பதிகம் பாடினார். பின்பு பொன்னை பரவையாரிடம் திருவிழாச் செலவுக்காகக் கொடுத்தார்.

## 10. சிவபெருமான் சுந்தரருக்கு வழிகாட்டியமை

நம்பியாரூரர் திருத்தல யாத்திரையை மேற்கொண்டு, பற்பல திருத்தலங்களுக்குச் சென்று, சிவபெருமானை வழிபட்டு ஆங்காங்கே திருப்பதிகமும் பாடினார். 'தில்லைக்குச் செல்ல வேண்டும்' என்றெண்ணிச் செல்லும் வழியில், திருக்கூடலையாற்றூரை வணங்காது, திருமுதுகுன்றத்துக்குச் செல்ல நினைத்தார். அப்பொழுது, அவருக்கு வழி தெரியாமற் போயிற்று. அவ்வேளையில், சிவபெருமான் அடியவராய் வந்து அவர்முன் நின்றார். சுந்தரர் திருமுதுகுன்றத்துக்குச் செல்ல வழி கேட்க, அவர் சுந்தரரைத் திருக்கூடலையாற்றூருக்கு அழைத்துச் சென்று மறைந்தார். சுந்தரர், தமக்கு வழிகாட்டியவர் சிவபெருமானே என்றுணர்ந்து, **"வடிவடை மழுவேந்தி"** என்ற பதிகம் பாடி, கூடலையாற்றூரை அடைந்து வழிபட்டு, அதன் பின்னர், திருமுதுகுன்றஞ் சென்றார்.

## 11. ஆற்றிலிட்ட பொன்னைக் குளத்தில் எடுத்தமை

அங்கு சென்ற சுந்தரர், அங்குள்ள இறைவனை வணங்கினார். சிவபெருமான் அவருக்குப் பன்னீராயிரம் பொன் கொடுக்க, அதனைத் திருவாரூரில் தருமாறு சிவபெருமானை வேண்டினார். அப்பொழுது, "இப்பொன்னை மணிமுத்து ஆற்றிற் போட்டு, திருவாரூர்க் குளத்தில் எடுத்துக் கொள்" என்று ஓர் ஒலி கேட்டது. அவ்வாறே, சுந்தரர் பொன்னை ஆற்றிற் போட்டபின் தில்லையையும் வழிபட்டுத் திருவாரூருக்கு மீண்டார். ஒருநாள், பரவையாரிடம் வாழ்ந்திருந்த போதுதிருமுதுகுன்றத்துச் சிவபெருமான் தமக்குப் பொன் தந்ததைக் கூறினார். பின்னர், இருவரும் குளத்தை அடைந்து, அங்கு பொன்னைத் தேட அது கிடைக்கவில்லை. "ஆற்றில் போட்டு, குளத்தில் எடுக்கலாமோ?" என்று பரவையார் கேலி செய்தார். சுந்தரர் துயரடைந்து, **"பொன் செய்த மேனி"** என்னும் திருப்பதிகத்தைப் பாடி, கடவுளைத் துதித்துப் பொன் பெற்றார்.

## 12. சிவபெருமான் தண்ணீர்ப்பந்தரும் பொதிச்சோறும் அருளியமை

பல தலங்களுக்கும் யாத்திரை சென்ற சுந்தரர், திருக்குருகாவூருக்குச் சென்றபோது, வழியில் கடும் வெயில் காரணமாக பசியும் தாகமும் அவரை வருத்தின. அதனையறிந்த சிவபெருமான், வழியில் தண்ணீர்ப்பந்தல் அமைத்து, அடியவர் வடிவில் அங்குபொதிச்சோறு வைத்துக் கொண்டிருந்தார். அங்கு வந்து சோறுண்டு துயில் கொண்டு இளைப்பாறிய சுந்தரர், விழித்தெழுந்து பார்த்தார். அடியவரைக் காணாமையால் வியப்படைந்து, **"இத்தனையாமாற்றை அறிந்திலேன்"** என்ற பதிகத்தைப் பாடினார்.

## 13. சங்கிலியாரை மணந்தமை

சுந்தரர் தொண்டை நாட்டிற்கு தலயாத்திரையை மேற்கொண்டு, திருவொற்றியூருக்குச் சென்றிருந்தார். அங்கே கயிலையில் சந்தித்த அநிந்திதையார் சங்கிலியார் என்னும் பெயருடன் ஆலயத்தில் சரியைத் தொண்டினைச் செய்து வந்தார். சங்கிலியாரைக் கண்ட சுந்தரர் அவரைத் திருமணஞ் செய்ய விரும்பினார். சுந்தரர், பரவையாரின் கணவர் என்பதை சங்கிலியார் அறிந்திருந்தார். அதனால், தம்மை விட்டுப் பிரிவதில்லை என்ற சத்தியம் பெற்றபின் திருமணத்துக்குச் சம்மதித்தார். திருமணம் நிகழ்ந்து, இருவரும் இனிதாக வாழ்ந்தனர்.

## 14. சுந்தரர் கண்பார்வை இழந்தமை

சுந்தரர் சங்கிலியாருடன் வாழ்ந்திருந்த காலத்தில் திருவாரூர்த் தியாகேசரின் நினைவும் பங்குனி உத்தரத் திருவிழாக் காணும் விருப்பும் ஏற்பட, அவர் அங்கிருந்து திருவாரூருக்குப் புறப்பட்டார். சங்கிலியாருக்குக் கொடுத்த சத்திய வாக்குறுதி தவறியமையால், சுந்தரர் இரு கண்பார்வையையும் இழந்து துயருற்றார். அடியார்களின் உதவியுடன் திருவெண்பாக்கம் அடைந்து, **"பிழையுளன பொறுத்திடுவீர்"** என்ற திருப்பதிகத்தைப் பாடி, இறைவன் அருளால் ஊன்றுகோல் பெற்றார்.

## 15. சுந்தரர் கண்பார்வை பெற்றமை

ஊன்றுகோலுடன் தலயாத்திரையைத் தொடர்ந்த சுந்தரர், காஞ்சிபுரத்தை (திருக்கச்சியேகம்பத்தை) அடைந்தார். அங்கு **" கடையானேன் எண்ணாத"** என்ற பதிகத்தைப் பாடி வணங்கி, இடக்கண் பார்வை பெற்றார். இவ்வாறாகத் திருவாரூரை அடைந்த சுந்தரர், வன்மீகநாதரின் கோலத்தைக் காண்பதற்கு ஒரு கண் போதாமையால், மற்றைய



இலவச விநியோகத்திற்காக

கண்ணுந் தந்தருளவேண்டும் என்னுங் குறிப்போடு, **“மீளா அடிமை உமக்கே”** என்ற பதிகத்தைப் பாடி, வலக்கண் பார்வையையும் பெற்றார்.

## 16. சிவபெருமான் பரவையாரிடந் தூது சென்றமை

திருவொற்றியூரில் சுந்தரர் சங்கிலியாரை மணந்திருந்த செய்தியை அறிந்த பரவையார், கோபமடைந்தார். அவ்வேளையில், திருவாரூருக்கு வந்த சுந்தரர் பரவையாரின் இல்லத்துக்குப் போக விரும்பினார். பரவையார் அதற்கு உடன்படாமையால் சுந்தரர் சிவபெருமானையே பரவையாரிடந்தூது விடுத்தார். சிவபெருமான் பரவையாரின் ஊடலைத் தணித்து, சுந்தரரை அவரோடு சேர்த்து வைத்தார்.

## 17. ஏயர்கோன் கலிக்காம நாயனாருடன் நட்புக் கொள்ளல்

சிவபெருமானை சுந்தரர் தூது அனுப்பிய செய்தியை அறிந்த ஏயர்கோன் கலிக்காமர் என்ற அடியார் சுந்தரர்மீது கடுங் கோபமுற்றார். இதனைக் கேட்டும் உயிர் நீங்காத தான், சுந்தரரைக் கண்டால் மனம் இசையாது என்று வஞ்சினம் பூண்டார். ஆரூரரும் அதனை அறிந்து, தம் பிழையையும் உணர்ந்து இறைவனை வணங்கினார். இறைவன் அவர்களை ஒற்றுமையாக்குவதற்காக, கலிக்காமருக்குச் சூலை நோயைக் கொடுத்து, அதனைச் சுந்தரன் மட்டுமே நீக்கவல்லான் என்று அவருக்கு அறிவித்தார். சுந்தரருக்கும் அதனைத் தெரிவித்தார். எனவே, சுந்தரர் கலிக்காமரிடம் வருவதாக அறிவித்தார். இதனைக் கேட்ட கலிக்காமர், “அவன் வந்து என் நோயைத் தீர்ப்பதைவிட, நான் உயிரை விடுவது மேல்” என்று தம் உடைவாளாற் குத்தி உயிர் நீத்தார். அதன்பின் அங்கு வந்த சுந்தரர் மிக வருந்தித் தாமும் இறப்பதற்காக உடைவாளை எடுத்தார். அப்பொழுது இறைவன் அருளாற் கலிக்காமர் உயிர் பெற்றெழுந்து, சுந்தரரைத் தடுத்தார். இருவரும் ஒருவரை ஒருவர் வணங்கி, திருப்புன்கூர்க் கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கினர். சுந்தரர், **“அந்தணாளனுன்”** என்ற பதிகத்தைப் பாடியருளினார்.

## 18. காவிரி ஆறு பிரிந்து வழிவிட்டமை

சுந்தரர் திருவாரூரில் வாழ்ந்தகாலத்திலே, கழறிற்றறிவார் என்னும் சேரமான் பெருமாள் திருவஞ்சைக்களத்திலிருந்து சேரநாட்டை ஆண்டு வந்தார். அவர் சுந்தரரின் பக்தி மகிமையைக் கேட்டறிந்து, திருவாரூருக்குச் சென்று அவருடன் நட்புக் கொண்டார். அதனால், நம்பியாரூரருக்குச் **சேரமான் தோழர்** என்ற பெயரும் வழங்கலாயிற்று. அவர்கள் இருவருந் தலயாத்திரை மேற்கொண்டு, பாண்டி நாட்டுக்குச் சென்று, மதுரை முதலிய தலங்களை வணங்கினார். மதுரையிலே பாண்டிய மன்னனால் வரவேற்கப்பட்டனர். சுந்தரரும் சேரமான் பெருமாளும் திருக்குற்றாலம், திருநெல்வேலி முதலிய தலங்களை வழிபட்டு இராமேச்சரத்தை அடைந்தனர். சுந்தரர் அங்கிருந்து கொண்டே ஈழநாட்டிலுள்ள திருக்கேதீச்சரத்தை வணங்கிப் பதிகம் பாடினார். பாண்டி நாட்டை விடுத்து இருவருஞ் சோழ நாட்டை அடைந்து, திருவாரூர் சேர்ந்தனர். பின்னர் சேரமானின் வேண்டுகோளுக்கு இணங்கி, சுந்தரர் அவருடன் சேரநாட்டுக்குச் சென்றார். வழியிலே, காவிரி ஆறு பெருக்கெடுத்து ஓடிற்று. சுந்தரர் இறைவனை வேண்டிப் பதிகம் பாட, காவிரி ஆறு பிரிந்து வழிவிட்டது. இருவரும் ஆற்றைக் கடந்து சேரநாடு சேர்ந்தனர்.

## 19. வேடர்கள் சுந்தரரின் பொதிகளைக் கவர்ந்தமை

திருவஞ்சைக்களத்திலே சேரமான், சுந்தரரைச் சிறிது காலம் வைத்துப் பக்தியன்போடு ஆதரித்து வந்தார். சுந்தரருக்குத் திருவாரூர் நினைவு வர, அவர் சேரமானை அரிதிற் பிரிந்து, திருவாரூருக்குப் புறப்பட்டார். சேர மன்னர் அவருக்குப் பொன்னும் பிற பரிசில்களும் கொடுத்து, அவற்றைச் சுமக்க ஆட்களையும் அனுப்பினார். சுந்தரர் சேர நாட்டை விட்டு, திருமுருகன் பூண்டி வழியே வந்தார். அப்போது சிவபெருமானின் கட்டளைப்படி, பூத கணங்கள் வேடர்களாகத் தோன்றி, சுமையாட்கள் கொண்டுபோன பொதிகளையெல்லாம் பறித்தன. நம்பியாரூரர் கோயிலுக்குச் சென்று, **“கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர்”** என்று தொடங்கும் பதிகம் பாட, சூறைபோன பொருள்கள் எல்லாம் திருவாயிலின் முன்னே கொண்டுவந்து வைக்கப்பட்டன. சுந்தரர் அவற்றைப் பெற்றுத் திருவாரூரைச் சேர்ந்தார்.

## 20. முதலையுண்ட பிள்ளையை மீட்டமை

திருவாரூரிலே வன்மீகநாதரை வழிபட்டு வருங்காலத்தில் சுந்தரருக்குச் சேரமான் பெருமாள் நினைவு வர, அவர் சேரநாட்டுக்குப் புறப்பட்டார். வழியிலே கொங்கு நாட்டிலுள்ள திருப்புக்கொளியூர் வீதி வழியே செல்லும்போது அங்கே ஒரு வீட்டில் மங்கல ஒலியும் எதிர் வீட்டில் அழுகை ஒலியுங் கேட்டன. அதனைக் கேட்டு வியப்புற்ற சுந்தரர், அதற்கான காரணத்தைக் கேட்டார். அவ்வூர்க் குளத்தில் நீராடச் சென்ற பிள்ளைகளில் முதலை விழுங்கிய சிறுவனை இழந்த பெற்றோரின் அவலக்குரல் ஒரு வீட்டில் ஒலிக்க, உயிர் பிழைத்து மீண்ட சிறுவனின் பூணூற் சடங்கு நிகழும் வீட்டில் மங்கல ஒலி கேட்கின்றதெனக் கூறினர். சுந்தரர் குளக்கரைக்குச் சேர். பொன். இராமநாதன்



இலவச விநியோகத்திற்காக

சென்று, திருப்புக்கொளியூர் அவிநாசிப் பெருமானை நினைத்து வணங்கி, **"ஏற்றான் மறக்கேன்"** என்று தொடங்கும் பதிகத்தைப் பாடினார். அப்பொழுது கழிந்த ஆண்டுகளுக்கான வளர்ச்சியோடு இறைவன் திருவருளால், முதலை அப்பிள்ளையைக் கரையிற் கொணர்ந்து உமிழ்ந்தது. அதனைக் கண்ட எல்லோரும் சுந்தரரையும் அவிநாசியப்பரையும் போற்றினர்.

## 21. சுந்தரர் திருக்கயிலையை அடைந்தமை

சுந்தரர், சேர நாட்டிலுள்ள சிவத்தலங்களை வணங்கிக் கொண்டு, சேரமான் பெருமாளோடு வாழ்ந்து வருங்காலத்தில் ஒருநாள், திருவஞ்சைக்களக் கோவிலுக்குச் சென்று, தமக்கு இவ்வுலக வாழ்க்கையை முடித்து முத்தி தரும்படி வேண்டி, **"தலைக்குத் தலைமாலை"** என்னும் பதிகத்தைப் பாடினார். அப்பொழுது இறைவன் ஆணைப்படி, தேவர்கள் வந்து கோயில் வாயிலில் வைத்துச் சுந்தரரை வெள்ளை யானையில் ஏற்றிக் கயிலைக்குக் கொண்டு சென்றனர்.

சுந்தரர் தமது பதினெட்டாவது வயதில் கயிலை சேர்ந்தார். சுந்தரின் குருபூசைத் தினம் ஆடிச்சுவாதி நட்சத்திரமாகும். இறைவனோடு தோழமை பூண்டு பக்தி கொண்ட சுந்தரர் யோக நெறியில் நின்றவராவார். நம்பியாரூரர், ஆளுடைய நம்பி, வன்றொண்டர், திருநாவலூரர், தம்பிரான் தோழர், சேரமான் தோழர், சிங்கடியப்பன், வனப்பகையப்பன் என்பன சுந்தரமூர்த்தி நாயனாருக்கு வழங்கும் பிற பெயர்களாகும்.

"வாழி திரு நாவலூர் வன்றொண்டர் பதம் போற்றி"

## (ஈ) மாணிக்கவாசக சுவாமிகள்



### 1. அறிமுகம்

சமய குரவர் நால்வரில் ஒருவரான மாணிக்கவாசக சுவாமிகள், ஏனைய மூவரிலும் வேறுபட்டவர். அவர் ஒருவரே மந்திரிப்பதவி வகித்தவர்; **தென்னவன் பிரமராயன்** என்னும் பட்டம் பெற்றவர். அவற்றையெல்லாம் துறந்து, ஆன்மீக வாழ்வுக்குத் தன்னை அர்ப்பணித்தவர்: இது அவரின் **முதற்சிறப்பு** ஆகும். தில்லை நடராசப் பெருமானே அவரது திருவாசகப் பாக்களை ஏட்டில் எழுதும் பெரும் புண்ணியம் செய்தவர். இது அவரின் **இரண்டாவது சிறப்பு** ஆகும். பசவர், போப்பையர் போன்றோரால்,**"உருக்கப் பண்பு நிறைந்த பாடல்களைப் பாடியவர்"** என்ற கணிப்பையும் மதிப்பையும் பெற்ற சமயகுரவர். காலம், இடம், மொழி, மதம் என்ற எல்லைகளைக் கடந்த இக்கணிப்பும் மதிப்பும் மாணிக்கவாசக சுவாமிகளின் சிறப்பின் சிகரமாகும்.

### 2. வாழ்வும் பணியும்

மாணிக்கவாசக சுவாமிகள் மதுரையை அடுத்துள்ள திருவாதவூர் என்னும் ஊரினர்; திருவாதவூரினர் என்னும் பெயரினர். அந்தணர் குலத்தைச் சேர்ந்த சம்புபாதாசிரியருக்கும் சிவஞானவதியாருக்கும் மகனாக திருவாதவூரர் பிறந்தார். மதுரை அக்காலப் பாண்டி நாட்டின் தலைநகர். அக்காலத்தில் பாண்டி நாட்டை அரிமர்த்தன பாண்டியன் என்ற மன்னன் ஆண்டான். அறிவாற்றல் மிக்க வாதவூரர், பாண்டியன் மகிழ, அரச சபையில் அமைச்சராகப் பணிபுரிந்தார். அவரது திறமைகளையும், பணியையும் மெச்சிய பாண்டிய மன்னன் **"தென்னவன் பிரமராயன்"** என்னும் பட்டத்தை அவருக்கு வழங்கினான். ஆயினும், உலகியல் வாழ்வில் நிலைபெறாத வாதவூரரது மனம் ஆன்மீக விசாரணையிலேயே நாட்டம் கொண்டது.

### 3. வாழ்க்கையில் திருப்பம்

கீழைக்கடற்கரையில், மரக்கலங்களில் அராபியக் குதிரைகள் வந்திறங்குவது வழக்கம். அக்குதிரைகளை வாங்கிவரும் பணியைப் பாண்டியன் மாணிக்கவாசகரிடம் ஒப்படைத்தான். அவர் பரிவாரங்களுடன் செல்லும்போது வழியில், **திருப்பெருந்துறை** என்னும் இடத்தில், குருந்தமர நிழலில் குருநாதர் ஒருவர் சீடர்களுக்கு ஞானோபதேசம் அளிக்கும் காட்சியைக் கண்டார். அவரின் சீடராகச் சேர்ந்து உபதேசம் பெற்றார்; அரச பணியை மறந்தார். பரிவாரத்தினர் மாணிக்கவாசகரின் செயல்களைப் பாண்டியனிடம் சென்று முறையிட்டனர். பாண்டியன் இதனை அறிந்தவுடன் மாணிக்கவாசகருக்குச் செய்தி ஓலை அனுப்பினான். மாணிக்கவாசகர், ஓலையைக் கொண்டு வந்த ஏவலாளர்களைக் கொண்டே அதனை வாசிப்பித்தார். "இறைவனின் அடியவனான எனக்குப் பாண்டியன் எவ்வாறு கட்டளை இடமுடியும்?" என்று குருநாதரிடம் அவர் வினவினார். அதற்குக் குருநாதர், "நீ மதுரைக்குப் போ; அங்கு


இலவச விநியோகத்திற்காக

ஆவணி மூல நாளிற் குதிரைகள் வருமென்று பாண்டியனுக்குத் தெரிவி'' என்று கூறினார். அத்துடன் அரசனுக்கு வழங்குமாறு மாணிக்கக்கல் ஒன்றினையுங் குருநாதர் மணிவாசகரிடங் கொடுத்தார். குருவின் சொல்லைச் சிரமேற் கொண்டு மணிவாசகர் மதுரைக்கு ஏகினார்.

## 4. திருவிளையாடற் சோதனைகள்

மணிவாசகர் கொண்டு சென்ற நிதி பற்றி வினவிய பாண்டியன், அவருக்குச் சிறைத்தண்டனை விதித்தான். சிறையதிகாரிகள் வாதவூரரை வருத்தினர். ஆவணி மூல நாளில் குதிரைகள் மதுரைக்கு வந்தமையால் பாண்டியன், மணிவாசகருக்கு விடுதலை வழங்கினான். கொற்றக் குதிரையில் வந்த குதிரை வணிகத் தலைவருக்குச் சிறப்புப் பரிசும் அளித்தான். இக்குதிரைகள் **சிவபிரானின் திருவிளையாடலா**ல் பரிவடிவம் பெற்ற நரிகளாகும். சிவபிரானே, குதிரை வணிகத் தலைவனாக வந்தார் என்பதை மாணிக்கவாசகர் திருவாசகத்தில், பின்வருமாறு பாடியுள்ளார்.

'பெற்றி பெறற்கரிய பெம்மான் பெருந்துறையான்
கொற்றக் குதிரையின் மேல் வந்தருளி'

அன்றிரவு சிவபிரானின் **மற்றொரு திருவிளையாடல்** இடம் பெற்றது; பரிகள் மீண்டும் நரிகளாக மாறின. குதிரைப் பந்தியில் கட்டப்பட்டிருந்த உண்மைக் குதிரைகளைக் கடித்து, அவை ஊளையிட்டன. அதனை அறிந்த மன்னன் பாண்டியன் நிதி முழுவதையும் மீண்டும் ஒப்படைக்கும் வரை மணிவாசகருக்குக் கடுந்தண்டனை வழங்கினான். சிறையதிகாரிகள் வைகை ஆற்றுச் சுடுமணலில் நிறுத்தி, நெற்றியில் கல்லேற்றி அவரை வதைத்தனர்.

இந்நிலையில் மணிவாசகருக்கு அபயம் அளிக்கத் திருவுளம் கொண்ட சிவபிரான் **பிறிதொரு திருவிளையாடலைச்** செய்தார். வற்றி வரண்டிருந்த வைகை நதி பெருகிக் கரை மீறிப் பாய்ந்து பெரும் அழிவுகளை ஏற்படுத்தியது. எனவே, மக்களின் கருத்திற்கு மதிப்புக் கொடுத்த பாண்டிய மன்னன் மணிவாசகருக்கு விதித்த தண்டனையை விலக்கினான். அதனையடுத்து, வெள்ளச்சேதம் எதிர்காலத்தில் நிகழாதவாறு வைகை நதிக்கு வெள்ளத்தடை அணைகட்டும் துரித பணியைக் கூட்டுறவு அடிப்படையில் நிறைவேற்றுமாறு பாண்டியன் ஆணையிட்.டான்.

மதுரைவாசிகள் அணை கட்டும் பணியில் ஈடுபட்டனர். ஆனால், 'செம்மனச் செல்வி' என்னும் 'பிட்டுவாணிச்சி' தனது பங்கை நிறைவேற்ற இயலாதவளாக இருந்தாள். இவ்வேளையில் சிவபிரான், செம்மனச்செல்விக்கு உதவுவதற்காகவும் மாணிக்கவாசகரின் மாண்பினை உலகுக்கு உணர்த்தவும் வாதவூரர் வாழ்வில் **நான்காவது திருவிளையாடலைப்** புரிந்தார். பிட்டுவாணிச்சியின் கூலியாளாக மாறி, அவரின் உதிர்ந்த பிட்டை உண்டும், மணலில் படுத்துறங்கியும் வேலை செய்யாது காலத்தை வீணே கழித்தார். இப்பொதுப்பணியை மேற்பார்வை செய்ய வந்த பாண்டிய மன்னன் பிட்டுவாணிச்சியின் பணி நிறைவேறாதது கண்டு, அவளது கூலியாளின் முதுகிலே தன் கையிலிருந்த பிரம்பால் ஓங்கி அடித்தான். கூலியாள் மறைய, அவ்வடி உலகிலுள்ள சகல உயிர்கள் மீதும் பட்டது. இச்சம்பவத்தை மாணிக்கவாசக சுவாமிகள்,

''மண்சுமந்து கூலிகொண் டக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்'' என்று பாடியுள்ளார்.

மதுரை மக்களும் மன்னனும் சிவபிரானின் திருவிளையாடலை உணர்ந்தனர். மணிவாசகரின் மாண்பையும் மதித்தனர். பாண்டியன் மணிவாசகரின் விருப்பத்தை ஏற்று, அவர் ஞான நெறியைத் தொடர இணங்கினான்.

## 5. ஆலய தரிசனமும் சிதம்பர முத்தியும்

சுவாமிகள் அதன் பின்னர் தமது வாழ்க்கையை சமயத்திற்காகவே அர்ப்பணித்தார். அவர் திருத்தலங்கள் பலவற்றிற்கும் சென்று சிவபிரானை வழிபட்டார். அங்கெல்லாம் பதிகங்கள், பத்துக்கள் போன்ற பல பாசுரங்களைப் பாடினார். அவற்றில், தென்னாட்டுச் சைவரிடையே வழங்கிய, நாட்டுப் பாடல் வடிவங்களையும் இசை வடிவங்களையும், ஞானமும் பக்தியும் மிளிர, திருவம்மானை, திருச்சாழல், திருவெம்பாவை, திருக்கோத்தும்பி முதலிய பாடல் தொகுதிகளில் கையாண்டுள்ளார். தமது தல யாத்திரைகளின் போது, மாற்றுச் சமயத்தவரோடு வாதங்கள் பல புரிந்து வெற்றியீட்டியமை, ஊமை இளவரசியைப் பேசச் செய்தமை முதலான அற்புதங்களைச் செய்தார்.

மாணிக்கவாசக சுவாமிகள் தமது அந்திமக் காலத்தில் சிதம்பரத்தில் வாழ்ந்தார். ஒரு நாள் அந்தணர் ஒருவர் அவரிடம் வந்து, 'நீர் பாடிய பாடல்களை ஓத விரும்பி அவற்றை உம்மிடம் கேட்டு எழுதுவதற்கு வந்தேன்' என்று கூறினார். எனவே, அவர் அப்பாடல்களை மீண்டும் பாட, அந்தணர் அவற்றை ஏட்டில் எழுதினார். பின்னர், சிதம்பரநாதரைப் பாட்டுடைத் தலைவராக வைத்துக் கோவைப் பிரபந்தம் ஒன்று பாடுமாறும் அந்தணர் கேட்க, சுவாமிகளும் அவ்வாறே **திருக்கோவையாரைப்** பாடினார். அதனையும் எழுதியபின் அந்தணர் விரைவாக மறைந்துவிட்டார். அடுத்த நாள் காலையிலே தில்லைப் பெருமானுக்குப் பூசைசெய்ய வந்த தில்லை மூவாயிரவரில்



இலவச விநியோகத்திற்காக

சிலர், கோயிற் படியில் ஏடு ஒன்று இருக்கக் கண்டு வியந்தனர். அவர்கள் அதனை எடுத்துப் பார்த்த பொழுது, அதிலே **திருவாசகமும் திருக்கோவையாரும்** எழுதப்பட்டிருந்தன. ஏட்டின் ஈற்றில் "வாதவூரன் விளம்பிட அம்பலவன் எழுதியது" என்று அடிக்குறிப்பிட்டு எழுதி, "அழகிய சிற்றம்பலமுடையான்" எனக் கையொப்பமும் இடப்பட்டிருந்தது. அதனை அறிந்து வியந்த தில்லை மூவாயிரவர் பலர் அடிகளிடஞ் சென்று, "நீர் பாடிய பாடல்களுக்குப் பொருள் யாது?" என்று கேட்டனர். அவர்களை அழைத்துக் கொண்டு தில்லைப் பெருமானின் கோயிலுக்குட் சென்று, அங்கு அம்பலத்தரசனைச் சுட்டிக்காட்டி, 'இவரே அதன் பொருள்' என்று கூறிவிட்டுச் சிவசாயுச்சியம் அடைந்தார். 'சிவத்தோடு இரண்டறக் கலத்தல்' என்னும் அத்துவித முத்தியே, திருவாசகம் கூறும் ஞானமார்க்கத்தின் பொருள் என்பதை மாணிக்கவாசகரின் கடைசிச் சொல் உணர்த்துகின்றது.

'கடையூழி வரும் தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்
உடையார் உன்வாசகத்தில் ஒரு பிரதி கருதினதே'

சிவபிரான், தனது கடையூழித் தனிமையைப் பொருண்மை மிக்கதாக மாற்றவே, அவர் திருவாசகப் பிரதியை எழுதத் திருவுளம் கொண்டார் என்னும் சுந்தரம்பிள்ளையவர்களின் (மனோன்மணீயம்) கூற்று, மாணிக்கவாசகரது திருவாசகத்தின் சிறப்பை எடுத்தியம்புகிறது.

ஞானநெறி நின்று, சைவசித்தாந்தக் கருத்துகளையும் இலக்கிய மரபுகளையும் பரப்பியவர் திருவாதவூரர். இவருக்கு மாணிக்கவாசகர், மணிவாசகர், பெருந்துறைப்பிள்ளை முதலான பெயர்கள் வழங்குகின்றன. திருவாதவூரர், தமது முப்பத்திரெண்டாவது வயதில் ஆனி மக நட்சத்திரத்தில் இறைவனுடன் இரண்டறக் கலந்தார்.

'வாழிதிரு வாதவூரர் பதம் போற்றி'

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சம்பந்தரும் அப்பரும் இணைந்து செய்த அற்புதங்களைக் குறிப்பிடுக.
2. சமய குரவர் நால்வரும் கடைப்பிடித்த மார்க்கங்கள் யாவை.
3. மாணிக்க வாசகர் பாடிய நூல்கள் எவை?

## செயற்பாடு

**1. நாயன்மார் நால்வரதும் விபரங்களை உள்ளடக்கிய பின்வரும் அட்டவணையைப் பூர்த்தி செய்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.**

| | சம்பந்தர் | அப்பர் | சுந்தரர் | வாதவூரர் |
|---|---|---|---|---|
| 1. பிறந்த நாடு | | | | |
| 2. பிறந்த ஊர் | | | | |
| 3. தாயாரின் பெயர் | | | | |
| 4. தந்தையாரின் பெயர் | | | | |
| 5. இயற் பெயர் | | | | |
| 6. வேறு பெயர்கள் | | | | |
| 7. முதல் பாடிய பதிகம் | | | | |
| 8. இறுதியாகப் பாடிய பதிகம் | | | | |
| 9. முத்தியடைந்த தினம் | | | | |
| 10. நின்ற நெறி | | | | |
| 11. நின்ற மார்க்கம் | | | | |
| 12. அடைந்த முத்தி | | | | |

### பாடச்சுருக்கம்

- சமய குரவர் நால்வரும் இறையருளுடன் அற்புதங்களைச் செய்து, மக்களின் துன்பங்களை நீக்கி, இறைபக்தியை வளர்த்தனர். சைவத்தின் சிறப்பினை நிலைநாட்டினர். சைவத்தின் மறுமலர்ச்சிக்காக உழைத்தனர். பதிகங்கள் பாடி, கோயில்களை முதன்மைப்படுத்தினர்.
- அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர் என்னும் சமய குரவர் நால்வரும் முறையே, சரியை, கிரியை, யோக, ஞான நெறிகளைப் பின்பற்றினர்.
- நாம் சமய குரவர் நால்வரதும் குருபூசைத் தினங்களைக் கொண்டாடி, அவர்கள் செய்த பணிகளுக்கு மதிப்பளிப்போம்.



இலவச விநியோகத்திற்காக

# 14 சந்தான குரவர்

சந்தானம் என்பதற்குத் தொடர்ச்சி, பரம்பரை, தலைமுறை என்பன பொருளாகும். சைவ சந்தானத்திற்கு முதல்வர் திருநந்திதேவராவர். சைவ சமயகுரவர்களைப் போலவே, சந்தான குரவர்களும் நால்வராவர். சந்தான குரவர், சமயகுரவர்களை விட காலத்தால் பிற்பட்டவர்கள். சமயகுரவர்கள் செய்தருளிய தேவார, திருவாசகங்களுக்கு, சந்தான குரவர்கள் செய்த சித்தாந்த சாத்திரங்கள் இலக்கணம் போன்று அமைந்துள்ளன. சந்தான குரவர்களாக நால்வரைக் கூறுவர். மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியார் என்போரே அந்நால்வரும் ஆவர். அவர்கள், குரு, சீட பரம்பரை முறையில், சைவசித்தாந்த சாத்திர நூற் பயிற்சி வழங்கிய தத்துவ ஞானிகள்.

## அ. மெய்கண்ட தேவர்

இவர் திருப்பெண்ணாகடத்தில் வாழ்ந்த அச்சுதகளப்பாளருக்கும் மங்களாம்பிகைக்கும் மகனாகப் பிறந்தவர். அச்சுதகளப்பாளரது குலகுரு சகலாகம பண்டிதர் எனப்படும் அருணந்தி சிவாசாரியார். அச்சுத களப்பாளர் தமக்குக் குழந்தைப் பேறில்லாமையால் மனம் வருந்தினார். அதனால், தம் குலகுருவை அடைந்து தம் குறையைக் கூறினார். அருணந்தி சிவாசாரியார், திருமுறையை அருச்சித்துக் கயிறுசாத்திப் பார்த்தார். அப்போது,

> "பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோடு உள்ளநினை
> வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண்டா வொன்றும்
> வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு மூக்குளநீர்
> தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே"

என்னும் சம்பந்தருடைய திருவெண்காட்டுத் திருப்பதிகப் பாடல் வந்தது. அதன் பொருளை விளக்கி, அத் திருப்பதிகத்தின் மேன்மையையும் அத் திருப்பதியிலுள்ள குளங்களிலே முழுகி இறைவனை வழிபடும் முறைமையினையும் அறிவுறுத்தித் திருவெண்காட்டுக்குப் போகும்படி ஆணையிட்டருளினார்.

திருவெண்காடு சென்று தீர்த்தமாடி, அங்கு கோயில் கொண்டிருக்கும் திருவெண்காட்டு மகாதேவரையும், பிரமவித்தியாநாயகியையும் வழிபட்டு வந்தனர். சில காலம் செல்ல அச்சுதகளப்பாளரின் மனைவியார் கருவுற்றார். உரிய காலத்தில் மங்களாம்பிகையார் ஆண் மகவொன்றைப் பெற்றார். திருவெண்காட்டு இறைவனின் திருவருளாற் பிறந்த அக் குழந்தைக்குப் பெற்றோர், "சுவேதனப் பெருமாள்" என்று பெயரிட்டனர். பின்னர், அச்சுதகளப்பாளர் இறைவனை வணங்கி, மனைவியாரோடும் அருமைப் புதல்வருடனும் புறப்பட்டு, திருப்பெண்ணாகடத்தை அடைந்தார்.

சுவேதனப் பெருமாள்திருவெண்ணெய் நல்லூரில் உள்ள தமது மாமனாரின் வீட்டில் வாழ்ந்து வந்தார். சுவேதனப்பெருமாள் இரண்டாம் வயதை எய்தியபொழுது, மெய்ஞ்ஞானத்தை உணரும் பக்குவ நிலை உடையவராய் விளங்கினார். அக்காலத்தில், பொதிய மலையிலிருந்து அகத்திய முனிவரைக் காணும் பொருட்டு, திருக்கயிலையினின்றும் புறப்பட்டு வந்த பரஞ்சோதி முனிவர், சுவேதனப் பெருமாளைக் கண்டு, அவரது பக்குவ நிலையை அறிந்து, அவருக்குச் சைவசித்தாந்த மெய்ப்பொருளை உணர்த்தி, **"மெய்கண்டார்"** என்னும் திருப்பெயரையும் சூட்டியருளினார்.

பின்பு, மெய்கண்டதேவர் திருவெண்ணெய் நல்லூரிலுள்ள பொல்லாப் பிள்ளையாரின் திருமுன்பு நிட்டை கூடினார். அதன் பயனாக, சைவசித்தாந்த உட்பொருளை ஓதிதுணர்ந்து, சிந்தித்துத் தெளிந்து, தமிழிலே **சிவஞானபோதம்** எனப்படும் சிறந்த சைவசித்தாந்த நூலை அருளிச் செய்தார். இது சைவசித்தாந்தக் கோட்பாடுகளை விளக்கும் தமிழ் நூல்; பன்னிரெண்டு சூத்திரங்களையும் பிரமாணவியல், இலக்கணவியல், சாதனவியல், பயனியல் என நான்கு இயல்களையும் கொண்டது. சித்தாந்த உண்மைகளைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் இயல்புடையது. இது இந்நூலின் சிறப்பாகும்.

மெய்கண்டதேவர் சிவஞானபோதத்தின் நுண் பொருளைப் பக்குவம் வாய்ந்த நாற்பத்தொன்பது மாணவர்களுக்குப் போதித்தருளினார். மெய்கண்டதேவரின் மாணவர்களுள் சிறந்தவர் அருணந்தி சிவசாரியாராவார். மனவாசகங்கடந்தார், சிற்றம்பல நாடிகள் முதலானவர்களும் மெய்கண்டதேவரின் மாணவர்களுள் அடங்குவர். இவ்வாறு சைவ சித்தாந்தப் பணியாற்றிய மெய்கண்டதேவர், சில காலம் நிட்டையில் கூடியிருந்து ஐப்பசி மாதத்து சுவாதியில் சிவபதம் அடைந்தார்.


இலவச விநியோகத்திற்காக

## (ஆ) அருணந்தி சிவாசாரியர்

அருணந்தி சிவாசாரியார் திருத்துறையூரிலே ஆதிசைவ மரபிலே பிறந்தவர். அவரது இயற்பெயர் சதாசிவாசாரியர் என்பதாகும். அவர் சமய, விசேட, நிருவாண தீட்சைகளும், ஆசாரிய அபிஷேகமும் பெற்றதுடன், வேத சிவாகமம், திருமுறைகள் முதலிய ஞான நூல்களையும் ஓதியுணர்ந்தார். தமிழிலும் நல்ல புலமையுடையவர். சகல கலைகளையும் கற்றுத் தெளிந்த அவர், சகலாகம பண்டிதர் என்னும் சிறப்புப் பெயருடையவராய் விளங்கினார். அதனால், அவர் சைவசித்தாந்த நெறிக்கோர் தலைவராகவும் தம் நாட்டில் வாழ்ந்த சைவர்களுக்குக் குலகுருவாகவும் விளங்கினார். ஐந்தெழுத்தை அன்புடன் ஓதுவித்தார். அரும்பெரும் போதனைகளைச் செய்தார். அவரிடம் பலர் பாடங் கேட்டனர்.

அவர், அச்சுதகளப்பாளர் பெற்ற மெய்கண்டதேவரின் மகிமைகளைக் கேள்வியுற்று, அவரைத் தரிசிக்க விரும்பித் திருவெண்ணைய் நல்லூரை அடைந்தார். அப்பொழுது மெய்கண்டதேவர் ஆணவத்தின் இயல்புகள் பற்றித் தம் மாணவர்களுக்கு உபதேசஞ் செய்து கொண்டிருந்தார். அங்கு வந்த சகலாகம பண்டிதர், தம் வரவுகண்டும் தம்முடன் மெய்கண்டதேவர் ஒன்றும் பேசாதிருந்தமையால், மனச்செருக்கோடு அவர்முன் நின்று, "ஆணவத்தின் வடிவம் எவ்வாறிருக்கும்?" என வினாவினார். மெய்கண்டதேவர் அதற்கு விடையாக அவரையே சுட்டிக் காட்டியதன் மூலம், "இப்படியிருக்கும்" என்று குறிப்பால் உணர்த்தியருளினார். அதனால், செருக்கு அகன்ற சகலாகம பண்டிதர், மெய்கண்ட தேவரின் மகிமையை உணர்ந்து வணங்கி, தம்மைச் சீடராக ஏற்று ஞானோபதேசஞ் செய்தருளும்படி பிரார்த்தித்தார். சகலாகம பண்டிதரின் பக்குவ நிலையைக் கண்ட மெய்கண்டதேவர் அவருக்குச் சிவஞான போதத்தை உபதேசித்து, **"அருணந்தி சிவம்"** என்னும் தீட்சாநாமஞ்சாத்தி, " சிவஞானபோத நூற்பொருளை விரித்துப் பிற்காலத்தாருக்கு இனிது விளங்குமாறு ஒரு நூல் செய்வீராக" என்ற பணித்தருளினார்.

மெய்கண்டதேவரின் ஆணையைச் சிரமேற்கொண்ட அருணந்தி சிவசாரியார், சிவஞான போதத்திற்கு சிறந்த வழிநூலாக சிவஞானசித்தியாரை இயற்றினார். அத்துடன் இருபா இருபஃது என்னும் சைவசித்தாந்த நூலையும் அருளிச் செய்தார். அவற்றை அவர், மறைஞானசம்பந்தர் முதலான சீடர்களுக்கு உபதேசித்தருளினார். இவர் திருந்துறையூரில் ஒரு புரட்டாதி மாதத்துப் பூர நட்சத்திரத்திலே சிவபெருமானது திருவடி நிழலெய்தினார்.

## (3) மறைஞான சம்பந்தர்

அருணந்தி சிவாசாரியரின் மாணவருள் ஒருவரான மறைஞான சம்பந்தர் திருப்பெண்ணாகடத்திலே, பிராமண குலத்தில் பிறந்தார். அவரது இயற்பெயர் பரமசிவானந்தம். வேத சிவாகமங்களையும் சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபா இருபஃது என்னும் சைவசித்தாந்த நூல்களையும் நன்கு கற்றணர்ந்து ஞானியாய் விளங்கினார். அதனால், **மறைஞான சம்பந்தர்** என்னும் திருப்பெயர் அவருக்கு வழங்குவதாயிற்று.

மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியர் முதலிய சீடர்களுக்கு ஞானோபதேசஞ் செய்தருளினார். சிதம்பரத்தைச் சார்ந்த திருக்களாஞ்சேரியிலே சிலகாலம் மௌனவிரதம் பூண்டிருந்து ஒரு ஆவணி உத்தரத் திருநாளிலே சிவபதம் அடைந்தார்.

## (4) உமாபதி சிவாசாரியார்

உமாபதி சிவாசாரியார் தில்லையில் வாழ்ந்த தில்லைவாழந்தணர்களுள் ஒருவர். சிதம்பரத்தையடுத்த கொற்றவன்குடி என்னும் கிராமத்தில் வாழ்ந்தமையால், **"கொற்றவன் குடி முதலியார்"** என்று அவரை அழைப்பர். அவர் வேத சிவாகமங்களிலும், தமிழ்மொழி, வடமொழிகளிலும் புலமை பெற்று வாழ்ந்தவர்; சிவ பக்தியாலும், அடியார் பக்தியாலும் சிறந்தவர். ஒருநாள் அவர் சிதம்பரத்திலுள்ள நடராசப் பெருமானுக்குப் பூசை செய்த பின் சிவிகையிலேறி, தீவர்த்தி முதலான விருதுகளோடு தமது இருப்பிடத்துக்குச் சென்றார். அப்பொழுது இவரது ஆடம்பரத்தைக் கண்ட மறைஞானசம்பந்தர் தம் மாணவரிடத்திலே, "பட்ட கட்டையிற் பகற்குருடு போகின்றது" என்று கூறியருளினார். மெய்ஞ்ஞானத்தை உணரும் பக்குவநிலை அடைந்தவரான உமாபதிசிவாசாரியர் அவ்வார்த்தையைக் கேட்ட மாத்திரத்திலே, அதன் குறிப்புப் பொருளை உணர்ந்து சிவிகையை விட்டிறங்கி, மறைஞான சம்பந்தரை வணங்கினார். பின்னர் அவரிடத்திலே ஞானோபதேசம் பெற்று, சீடரானார்.

உமாபதி சிவசாரியாரின் அதி தீவிர பக்குவ நிலையை உலகினருக்குக் காட்ட விரும்பிய மறைஞானசம்பந்தர், ஒரு நாள் உமாபதி சிவாசாரியாருடன் நெசவாளர் இருக்குமிடத்தை அடைந்து, அங்குள்ள ஒருவரிடம் நெசவுக்கு வைத்திருந்த கூழை வாங்கிப் பருகினார். அவரருகே மிகுந்த பக்தியுடையவராய் நின்ற உமாபதி சிவாசாரியர், தம் குருவின் முழங்கை வழியாக ஒழுகிய கூழைப் பிரசாதமாகக் கொண்டு இரு கையாலும் ஏந்திப் பருகினார். உமாபதி சிவாசாரியரின் இச்செயலை அறிந்த தில்லை வாழந்தணர்கள், அவரது உயர்ந்த மனநிலையை உணராமல்,



இலவச விநியோகத்திற்காக

அவரைப் பழித்தது மாத்திரமன்றி, நடராசப் பெருமானுக்குப் பூசை செய்யத் தடையும் விதித்தனர். அதனால், உமாபதி சிவாசாரியார் கொற்றவன் குடியிலே போய்த் தங்கியிருந்தார்.

அந்நாளில், சிதம்பரத்திலே நிகழ்ந்த கொடியேற்ற விழாவில், கொடி ஏறாமல் தடைப்பட்டது. உமாபதி சிவாசாரியர் அங்கு இல்லாமையாலேயே காரணம் என்பதை அறிந்த தில்லை வாழந்தணர், அவரிடம் சென்று வணங்கி, அவரை அழைத்து வந்தனர். உமாபதி சிவாசாரியர் நடராசப் பெருமானை வணங்கி, கொடிக்கவி பாடியருள, ஏறாது நின்ற கொடி ஏறலாயிற்று. உமாபதி சிவாசாரியாரின் மகிமையை உணர்ந்து, தில்லை வாழந்தணர் அவரிடத்திலே பக்தியுடையவர்களாய் ஒழுகினர்.

இறைவன் திருவருளால் இந்த அற்புதங்களைச் செய்தருளிய உமாபதி சிவாசாரியார் சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்ப.்றொடை, கொடிக்கவி, நெஞ்சு விடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்னும் சித்தாந்த அட்டகங்களையும், கோயிற்புராணம் (சிதம்பர மான்மியம்), சேக்கிழார் புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருமுறை கண்ட புராணம், திருப்பதிகக் கோவை, பௌஷ்கர ஆகம வியாக்கியானம் முதலிய நூல்களையும் அருளிச் செய்தார்.

இவரது மாணவர் நமச்சிவாயத்தேசிகர் முதலியோராவர். நமச்சிவாயத் தேசிகரே திருவாவடுதுறை ஆதீனத்தைத் தாபித்து, அவ்வாதீனத்தின் முதற் குருவாய் விளங்கியவர். உமாபதி சிவாசாரியர் சித்திரை அத்த நட்சத்திரத்தில் சிவபதம் அடைந்தார். இவரது திருக்கோவில் கொற்றவன் குடியில் இன்றும் உள்ளது.

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சுவேதனப் பெருமாள் என அழைக்கப்படுபவர் யார்?
2. அச்சுதகளப்பாளருக்கு **"அருணந்தி சிவம்"** என்ற தீட்சாநாமத்தை வழங்கியவர் யார்?
3. பரமசிவானந்தம் என்பவருக்கு **மறைஞான சம்பந்தர்** என்னும் பெயர் வழங்கக் காரணம் யாது?
4. உமாபதி சிவாசாரியார் கொடிக்கவி என்னும் நூலை எச்சந்தர்ப்பத்தில் பாடியருளினார்?

### செயற்பாடு

1. **சந்தானகுரவர் நால்வரதும் விபரங்களை உள்ளடக்கிய அட்டவணை ஒன்றினைத் தயாரித்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.**

| | மெய்கண்ட தேவர் | அருணந்தி சிவாசாரியார் | மறைஞான சம்பந்தர் | உமாபதி சிவாசாரியார் |
|---|---|---|---|---|
| 1. பிறந்த ஊர் | | | | |
| 2. பிறந்த குலம் | | | | |
| 3. வேறு பெயர்கள் | | | | |
| 4. குரு | | | | |
| 5. சீடர் | | | | |
| 6. செய்த அற்புதம் | | | | |
| 7. எழுதிய நூல்கள் | | | | |
| 8. முத்தி பெற்ற தினம் | | | | |

### பாடச்சுருக்கம்

- மெய்கண்டதேவர் தமிழிலே **சிவஞானபோதம்** என்ற நூலை இயற்றியுள்ளார்.
- அருணந்தி சிவாசாரியார், சிவஞானசித்தியார், இருபா இருப.்து என்னும் சைவசித்தாந்த நூல்களை அருளிச் செய்தார்.
- சிவஞானபோதத்தின் வழிநூல் சிவஞானசித்தியாராகும்.
- உமாபதி சிவாசாரியார் **"கொற்றவன் குடி முதலியார்"** என்றும் அழைக்கப்படுவார்.
- உமாபதி சிவாசாரியார் இயற்றிய சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்ப.்றொடை, கொடிக்கவி, நெஞ்சு விடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்னும் எட்டு நூல்களும் சித்தாந்த அட்டகம் எனப்படும்.



இலவச விநியோகத்திற்காக

# 15 சித்தர்கள்

ஞாலமதில் ஞானநிட்டை யுடையோருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன்றில்லைச்
சீலமிலைத் தவமில்லை விரதமோடாச் சிரமச்
செயலில்லைத் தியானமிலைச் சித்தமலம் இல்லை
கோலமிலைப் புலனில்லைக் கரணம் இல்லை
குணம் இல்லைக் குறியில்லைக் குலமும் இல்லை
பாலருடன் உன் மத்தர் பிசாசர் குணம் மருவிப்
பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்

\- சிவஞான சித்தியார் -

சித்துக்களில் வல்லவர்கள் சித்தர்கள் ஆவர். அவர்கள் பல வகையான சித்துக்களை (அற்புதங்களை)ச் செய்தமையால் சித்தர்கள் எனப் பெயர் பெற்றனர். சித் என்றால் அறிவு. அறிவு வடிவமாகத் தம்மை ஆக்கிக் கொண்டவர்கள் சித்தர்கள் எனவும் பொருள் கூறப்படும். சித்தர்கள் அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் அட்டமா சித்திகளிற் கைதேர்ந்தவர்கள். யோக மார்க்கத்தில் வல்லவர்கள். யோக நெறி நின்று, பல சித்திகளைப் பெற்றவர்கள். சித்தர்கள் சாதி, சமய, ஆசாரக் கட்டுப்பாடுகளுக்கு அப்பாற்பட்டவர்கள். சித்தர்கள் உடலைத் திடமாக வைத்திருப்பதற்கும் நீண்ட நாள் வாழ்வதற்கும் வைத்தியத் துறையில் ஆராய்ச்சி செய்து கண்டமுறை **சித்த வைத்தியம்** எனப்படும்.

தமிழகத்திலும், ஈழத்திலும் சித்தர்கள் பலர் இருந்திருக்கின்றனர். ஆயினும், தமிழ் நாட்டில் சித்தர் மரபொன்று நெடுங்காலமாக இருந்து வருகின்றது. அச்சித்தர்கள் பதினெண்மரெனக் கூறுவது மரபாகும். அகத்தியர், திருமூலர், சிவவாக்கியர், பட்டினத்தார், பத்திரகிரியார், அகப்பேய்ச் சித்தர், குதம்பைச் சித்தர், கடுவெளிச் சித்தர், அழுகணிச் சித்தர், கொங்கணச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர், இடைக்காட்டுச் சித்தர், கருவூரார், மதுரை வாலைசாமி, கணபதிதாசர், உரோம ரிஷி, சட்டைமுனி, இராமதேவர் முதலானோர் பதினெண்சித்தர்களில் அடங்குவர். ஈழத்திலும் பெரியானைக்குட்டிச் சித்தர், சித்தானைக்குட்டிச் சித்தர், நவநாதச் சித்தர், கடையிற் சுவாமிகள், யோகர் சுவாமிகள், செல்லப்பா சுவாமிகள், என ஞானியர் பலர் இருந்திருக்கின்றனர். அவர்களில் கடையிற் சுவாமிகள், யோகர் சுவாமிகள், செல்லப்பா சுவாமிகள் ஆகியோர் பற்றிச் சுருக்கமாக கற்போம்.

## (1) கடையிற் சுவாமிகள்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் மத்தியில் ஈழநாட்டிற் கடையிற் சுவாமி முதலான சித்தர்கள் வாழ்ந்தனர். கடையிற் சுவாமிகளின் பெங்களூரில் நீதிபதியாக இருந்தபோது குற்றவாளிக்கு மரணதண்டனை விதிக்க மனமொப்பாமையினால், அதனைத் துறந்துவிட்டு, ஈழம் வந்தவர் என்பர். கடையிற் சுவாமிகள் பெரும்பாலும் யாழ்ப்பாணம் பெரிய கடைப்பகுதியிற் காணப்பட்டமையால் அவர் **கடையிற் சுவாமிகள்** என்றழைக்கப்பட்டார். சுவாமிகளின் தோற்றம் வசீகரிக்கும் தன்மையது. கடையிற் சுவாமிகள் அற்புதங்கள் பல புரிந்துள்ளார். பெரிய கடையிற் கடை வைத்திருந்தவர்கள், சுவாமிகளுக்கு ஏதேனுமொரு பொருளைக் கொடுத்தால் தங்கள் வியாபாரம் செழித்தோங்குமெனக் கருதினர். கடையிற் சுவாமிகளுக்கு வயிரமுத்துச் செட்டியார், சின்னச்சுவாமி, குழந்தைவேற் சுவாமி, சடைவரதர், செல்லப்பா சுவாமி போன்ற பலதரப்பட்ட சீடர்கள் இருந்தனர். யாழ்ப்பாணம் நீராவியடியில் தம் இறுதிக் காலத்தைக் கழித்த கடையிற் சுவாமிகள் 1891 ஆம் ஆண்டு புரட்டாதி மாதம் பூரட்டாதி நட்சத்திரத்தில் சமாதிநிலை எய்தினார்.

## (2) செல்லப்பா சுவாமி

செல்லப்பா சுவாமி, நல்லூர்க் கோயில் வீதியில் கடையிற் சுவாமியைத் தமது சற்குருவை கண்டு கொண்டார். ஒருநாள் கடையிற் சுவாமிகளைக் காண, பெரிய கடைக்குச் சென்றார். குருவின் வழியில் தொடர்ந்து, உலகம் போற்றும் உத்தம ஞானியானார். அரச உத்தியோகத்தைத் துறந்து ஆன்மீக விடுதலை நாடி வந்த சதாசிவனின் பக்குவநிலையை உணர்ந்த செல்லப்பா சுவாமிகள், அவரைத் தம் சீடராக்கி, ஐந்து ஆண்டுகள் பயிற்சி அளித்து யோகர் சுவாமிகளாக்கினார். செல்லப்பா சுவாமிகள் தம் சீடரை அழைத்துக் கொண்டு கால்நடையாக நெடுந்தூரம் ஊர் சுற்றக் கிளம்பிவிடுவார். அப்போது தாம் பெற்ற அனுபூதி ஞானத்தைச் சூத்திரம் போன்ற சிறுசிறு வாக்கியங்களாகச் செல்லப்பா சுவாமிகள் சீடருக்குக் கூறுவார். பக்குவ நிலையிலிருந்த சீடர்களுக்கு ஒவ்வொரு வார்த்தையும் முழு நூல் போல விளக்கமளித்தன.



இலவச விநியோகத்திற்காக

செல்லப்பா சுவாமிகள், நல்லூர்க் கந்தனது பெரியதேர் தங்கிநிற்கும் தேரடிக் கட்டடத்தின் படிகளை அடுத்து நின்ற வில்வமரத்தின்கீழ் நிட்டை கூடி இருப்பது வழக்கமாகும். அவர் ஒரு முறை நிட்டை கூடினால் நாட்கணக்காக அப்படியே தியானத்தில் ஆழ்ந்திருப்பார். பின்னர், நிட்டை கலையும். அவருடைய பேச்சும், நடத்தையும் பொது மக்களுக்கு விந்தையாக இருக்கும். அதனால், அவரை ''விசர்ச் செல்லப்பா'' என அழைத்ததுமுண்டு. ஊரூராய்த் திரியும் போதும் தமக்குள்ளே தாமே பேசிக் கொண்ட வார்த்தைகளான **''எல்லாம் செப்படி வித்தை''**, **''அப்படியே உள்ளது''**, **''ஒரு பொல்லாப்பும் இல்லை''**, **''முழுவதும் உண்மை''**, **''ஒருவருக்கும் தெரியாது''**, **''ஆர் அறிவார்''** முதலான வாக்கியங்கள், செல்லப்பா சுவாமிகளிடமிருந்து அடிக்கடி வெளிப்பட்டன. இவையே பின்னாளில் அவரது சீடரான யோகர் சுவாமிகளுக்கு மகாவாக்கியங்களாக அமைந்தன. செல்லப்பா சுவாமிகள் 1915 ஆம் ஆண்டு பங்குனி மாதம் மகாசமாதி அடைந்தார்.

### (3) யோகர் சுவாமிகள்

யோகர் சுவாமிகளது பிள்ளைத் திருநாமம் ''சதாசிவம்''என்பதாகும். செல்லப்பா சுவாமிகளின் சீடரான யோகர் சுவாமிகள் ஐம்பதாண்டுகளுக்கு மேற் சிறந்த ஞானியாக விளங்கினார். நாவலரைப் பின்பற்றிச் சைவ சமய பரிபாலனமும் செய்து வந்தார். சித்தர் மரபும் வேதாகம மரபும் அவரிடம் சங்கமமாயின. திருமுறைகளை முறையாக ஓதியும் ஓதுவித்தும் அவற்றுக்கு வகுப்புக்களை நடத்தியும் வந்தார்; புராணபடனத்திற்கும் புத்துயிர் கொடுத்தார். சித்தாந்தசாத்திர வகுப்புக்களை நடாத்தி வந்தார்.

சுவாமிகள் ஒரு நாள் தம் குருவைத் தரிசித்தார்கள். பின் தேர்முட்டியின் மேற்படியிலிருந்து நாற்பது நாட்கள் இரவுபகலாக யோக நிட்டையிலிருந்தார். அதன் பின் குருவின் கட்டளைப்படி அன்பர்கள் வழங்கிய உணவை உண்ணத் தொடங்கினார். அன்றிலிருந்து மக்கள் அவரை, **''யோகர் சுவாமிகள்''** என்று அழைக்கலாயினர். செல்லப்பா சுவாமிகள் சமாதியடைந்த பின்னர், யோகர் சுவாமிகள் கொழும்புத் துறைக்குச் சென்று, அங்கே வாழ்ந்து வந்தார். அவரின் பெருமைகளை அறிந்த மக்கள் அவரிடஞ் சென்றனர். தஞ்சமென்று வந்தவர்களுக்கு இவர் உய்யும் நெறிகளை வகுத்தளித்தார்.

சுவாமிகள் தம் அடியார்க்ளின் நன்மைக்காக, **''சிவதொண்டன்''** என்ற மாத இதழைத் தொடங்கினார். அத்துடன், ''சிவதொண்டன் நிலையங்களை'' யாழ்ப்பாணத்திலும், மட்டக்களப்பில் செங்கலடியிலும் நிறுவினார். யோகர் சுவாமிகள் தம் அன்பர்களுக்கு கவிதையிலும், உரையிலும் கூறிய உபதேசங்கள் **''நற்சிந்தனை''** என வழங்கப்படுகின்றது.

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சித்தர்கள் எனப்படுவோர் யாவர்?
2. தமிழக சித்தர்கள் நால்வரையும், ஈழத்து சித்தர்கள் நால்வரையும் பெயரிடுக?
3. செல்லப்பா சுவாமிகள் அருளிய மகாவாக்கியங்கள் எவை?

### செயற்பாடு

1. செய்திப்பத்திரிகையில் வரும் சித்தர்கள் தொடர்பான தகவல்களைச் சேகரித்து, வகுப்பில் காட்சிப்படுத்துக.
2. அட்டமாசித்திகளை எழுதி, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- ஈழத்து ஞானியரில் கடையிற் சுவாமிகள், செல்லப்பா சுவாமிகள், யோகர் சுவாமிகள் என்போர் குறிப்பிடத்தக்கவர்கள்.
- கடையிற் சுவாமிகளின் சீடர் செல்லப்பா சுவாமிகள் ஆவார்.
- செல்லப்பா சுவாமிகளின் சீடர் யோகர் சுவாமிகள் ஆவார்.
- யோகர் சுவாமிகள் தம் அடியார்களின் நன்மைக்காக, ''சிவதொண்டன்'' என்ற மாத இதழையும், ''சிவதொண்டன் நிலையங்களை'' யாழ்ப்பாணத்திலும், மட்டக்களப்பில் செங்கலடியிலும் நிறுவினார்.
- யோகர் சுவாமிகள் கூறிய உபதேசங்கள் ''நற்சிந்தனை'' எனப்படும்.


இலவச விநியோகத்திற்காக

# 16 அபிராமிப்பட்டர்

தமிழகத்தில் தஞ்சை மாவட்டத்திலே திருக்கடவூரில் திருக்கடவூர் வீரட்டானம் என்னும் சிவத்தலம் உள்ளது. தேவர்கள் அமுத கடத்தை வைத்து எடுக்க முடியாது இறையருள் வேண்டி நின்ற சிறப்புடையது திருக்கடவூர்த் தலம். அத்தலத்தில் இறைவன் அமிர்த கடேசுவரர், இறைவி அபிராமி அம்மையுடன் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

திருக்கடவூரில் அபிராமிப்பட்டர் என்பவர் வாழ்ந்து வந்தார். அவரது இயற்பெயர் சுப்பிரமணியன் என்பதாகும். அவர் வடமொழியிலும், சோதிடக் கலையிலும் புலமை பெற்றிருந்தார். அதனால், சரபோஜி மன்னனின் அரச சபைச் சோதிடராக நியமிக்கப்பட்டார். பட்டர் தேவி உபாசனையில் சிறந்தவர். நாள் தோறும் திருக்கடவூர் அபிராமி அம்மையை வழிபாடு செய்யும் வழக்கம் உடையவர்.

ஒருநாள் சரபோஜி மன்னன் காவிரியாற்றில் நீராடிய பின்னர், ஆலய தரிசனம் செய்ய வந்தான். மக்கள் பூரணகும்பம் வைத்து அரசனுக்கு மரியாதை செய்தனர். ஆலயத்தில் அபிராமி அன்னையின் பக்தியில் ஆழ்ந்திருந்த பட்டர், அரசன் அங்கு வந்ததைக் கவனிக்கவில்லை. அதனால், மன்னன் வியப்படைந்து, மக்களிடம் காரணத்தை வினவினான். பட்டர், 'பித்தன்' என்று அவர்கள் கூறினர். அரசன் பட்டரைப் பரீட்சித்துப் பார்க்க நினைத்து, 'இன்று என்ன திதி' என்று கேட்டான். மறுநாள் பௌர்ணமி என்று பட்டர் கூறினார். உண்மையில் மறுநாள் அமாவாசைத் தினமாகும். பட்டர் தனது கண்களை மூடிக்கொண்டு அபிராமி அன்னையின் பக்தியிலும், அருள் ஒளியிலும் திளைத்திருப்பவர். அவருக்கு இருள் நாள் என்பதே இல்லை. அதனால், அமாவாசைத் தினத்தைப் பௌர்ணமி என்று அரசனுக்குக் கூறினார்.

பட்டர் கூறியதைக் கேட்ட அரசன் கோபம் அடைந்தான். அவர் தன்னைக் கேலி செய்து அவமதித்து விட்டதாக அரசன் நினைத்தான். அதனால், 'நாளை மாலையிற் பூரண சந்திரன் கிழக்கில் உதிக்க வேண்டும். இல்லையேல், பட்டருக்கு மரணதண்டனை விதிக்கப்படும்' என அரசன் அறிவித்தான். அதைக் கேட்டதும் பட்டருக்குச் சுயநினைவு வந்தது. தாம் செய்த தவறை உணர்ந்தார். நீண்டநேரம் யோசித்து, மறுநாள், செய்ய வேண்டியவை பற்றி ஒரு முடிவுக்கு வந்தார். அமாவாசைத் தினத்தைப் பௌர்ணமி தினமாக மாற்ற அபிராமி அன்னையின் அருளினால் மட்டுமே முடியும். அதனால், அன்னையின் அருளைப் பெற, கடுந்தவம் செய்ய வேண்டும். அன்னையின் அருள் கிடைக்காதவிடத்து தாமே இறத்தல் வேண்டும்' என அவர் முடிவு செய்தார்.

மறுநாள் அதிகாலையில் ஆலயத்துக்குச் சென்ற பட்டர், அன்னை அபிராமியை வணங்கினார். ஆலயத்துக்கு முன்னால் ஆழமான குழியொன்றை வெட்டி, அதிலே தீமூட்டினார். அதற்கு மேலே நூறு கயிறுகள் கட்டி உறி ஒன்று செய்து, அதன் மீது அவர் ஏறி அமர்ந்தார். "அன்னைமீது நூறு பாடல்களை அந்தாதியாய்ப் பாட வேண்டும். அவ்வாறு ஒவ்வொரு பாடல் பாடியதும் உறியின் ஒவ்வொரு கயிறையும் வெட்டிவிட வேண்டும். நூறு கயிறுகளையும் வெட்டி முடிய, தீக்குழிக்குள் வீழ்ந்து இறப்பது" என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டார்.

சூரியன் உதிக்கும்போது, விநாயகர் காப்பினைப் பாடினார். அமாவாசை தினத்தைப் பௌர்ணமி என்று தான் கூறியதை அரசனுக்கு நிரூபிக்கும்படி அபிராமி அம்மையை வேண்டிக் கொண்டு, அவரைப் போற்றி, **'உதிக்கின்ற செங்கதிர்'** என்று பாடத் தொடங்கினார். எழுபத்தெட்டுப் பாடல்களைப் பாடியவுடன் அபிராமி அன்னை அவருக்குக் காட்சியளித்தாள். அப்பொழுது சூரியன் மறைய, கிழக்குத் திசையிற் பேரொளியுடன் பூரணசந்திரன் தோன்றியது. அபிராமி அன்னை தன் காதிலிருந்த தோடு ஒன்றினைக் கழற்றி, கிழக்கு வானில் எறிந்ததே பட்டர் கண்ட அற்புதக் காட்சி. அதனை அவர் எழுபத்தொன்பதாம் பாடலில் **'விழிக்கே அருளுண்டு'** என வெளிப்படுத்தியுள்ளார். ஏனைய பாடல்களில் அபிராமி அன்னை தமக்குச் செய்த நன்மைகள் எல்லாவற்றையும் கூறியுள்ளார்.



இலவச விநியோகத்திற்காக

அபிராமி அன்னை தம் அடியாரின் வாக்கினைக் காப்பாற்றுவதற்காகச் செய்த அற்புதத்தினை அனைவரும் கண்டு அதிசயித்தனர். பட்டருக்கு வஞ்சனை செய்தவர்களும் அரசனும் தாம் செய்த பிழையை உணர்ந்தனர்; தெய்வப் பழி சூழப்போகின்றதே என்று பயந்தனர். அவர்கள் அனைவரும் பட்டரிடம் ஓடிச் சென்றார்கள். அவருடைய தெய்வத் தன்மையை அறியாமற் செய்த பிழையைப் பொறுக்குமாறு பட்டரின் காலில் வீழ்ந்து இரந்தனர். அப்பொழுது அரசன் இட்ட தண்டனை காரணமாகவே தாம் அன்னையின் அருட்காட்சியைக் காணக் கிடைத்ததென்றும்; எனவே, மனங்கலங்கத் தேவையில்லை என்றும் அவர் அரசனைத் தேற்றினார்.

அரசன் செய்யவிருந்த பொருள் உதவியையும் பட்டர் ஏற்றுக்கொள்ளவில்லை. அபிராமி அன்னையின் திருவருள் கிடைக்கப் பெற்றது மட்டுமே தனக்குப் போதும்; வேறொன்றும் தேவையில்லை என்று அவர் அரசனுக்குக் கூறினார். பித்தன் என்று எண்ணப் பெற்ற அபிராமிப்பட்டரின் ஞானத்தையும் பக்தியையும் கண்ட அரசன், அவரின் சீடனானான். அந்த நாளிலிருந்து அரசனின் விருப்பப்படி அவருக்கு **'அபிராமிப்பட்டர்'** என்ற பெயர் வழங்கி வருகின்றது.

அபிராமி அம்மையாரின் தோடு அன்று இரவு முழுவதும் பூரண சந்திரனாகப் பிரகாசித்தது. மறு நாட்காலையில் அது மறைந்தது. அன்று தொட்டு இன்றுவரை அன்னையின் அருளைப் பெற விரும்பும் அடியார்கள் நூறு பாடல்களைக் கொண்ட அபிராமி அந்தாதிப் பாடல்களை ஓதிப் பெரும் பயன் பெற்று வருகின்றனர். நாமும் அதனைப் படித்து நற்பயன் பெறுவோம்.

விழிக்கே அருளுண்டு அபிராம வல்லிக்கு வேதம்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண்டு எமக்கு அவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்றுவெம் பாவங்க ளேசெய்து பாழ்நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர்தம் மோடென்ன கூட்டினியே.

(79 வது பாடல், அபிராமி அந்தாதி)

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.**

1. அபிராமிப்பட்டரிடம் காணப்பட்ட நல்ல பண்புகள் இரண்டு தருக.
2. அபிராமி அன்னை, தன் அடியாரை எவ்வாறு காப்பாற்றினார்?
3. திருக்கடவூர் வீரட்டான ஆலயத்தின் இறைவன், இறைவி பெயர்களை எழுதுக.
4. அபிராமி அந்தாதியில் உள்ள முதலாவது பாடல் எது?

## செயற்பாடு

1. அபிராமி அந்தாதிப் பாடல்களில் முதலாம் பாடலையும் எழுபத்தெட்டாம் எழுபத்தொன்பதாம் பாடல்களையும் மனனம் செய்து பாடிக் காட்டுக.

## பாடச்சுருக்கம்

- திருக்கடவூரில் வாழ்ந்த அபிராமிப்பட்டர் தேவி உபாசனையில் சிறந்தவர்.
- அவர் திருக்கடவூர் அபிராமி அம்மையை நாள்தோறும் வழிபடுவார்.
- பட்டர் தனது கண்களை மூடிக்கொண்டு அபிராமி அன்னையின் பக்தியிலும், அருள் ஒளியிலும் திளைத்திருப்பார்.
- அபிராமி அன்னை, தனது பக்தனைக் காக்க, அமாவாசைத் தினத்தைப் பௌர்ணமி தினமாக மாற்றினார்.
- அபிராமி அன்னையின் பக்தனை, பித்தன் என நினைத்தவர்கள் ஈற்றில் உண்மையை உணர்ந்து, அவரை வணங்கினர்.


இலவச விநியோகத்திற்காக

# 17 இந்துபோர்ட் சு.இராசரத்தினம்

இலங்கையில் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலப்பகுதியில் சைவம் வளர்த்த சான்றோர்களில் சு. இராசரத்தினம் அவர்கள் குறிப்பிடத்தக்கவராவார். ஆறுமுகநாவலரதும் அருணாசல உபாத்தியாரினதும் மரபினைப் பின்பற்றிச் சைவத் தமிழ்க் கல்விப் பாரம்பரியம் தழைத்தோங்க அரும்பணியாற்றியவர் ஆவார்.

சு. இராசரத்தினம் 1884 ஆம் ஆண்டு ஆடி மாதம் 04 ஆம் திகதி யாழ்ப்பாணத்தில் பிறந்தார். இவர் யாழ்ப்பாணம் மத்திய கல்லூரியில் ஆரம்பக் கல்வியையும் கல்கத்தா பல்கலைக்கழகத்தில் உயர்கல்வியையும் பயின்றார். கொழும்பு சட்டக்கல்லூரியில் பயின்று சட்டத்தரணியானார். இவர் குடியியல் சட்டத்துறையில் சிறந்த அறிஞராக விளங்கினார். யாழ்ப்பாண மாவட்ட நீதிமன்றத்தில் பதில் நீதியரசராகப் பல தடவை கடமை புரிந்தார். அத்தகைய உயர்ந்த பதவிகளையெல்லாம் ஒதுக்கிவிட்டுச் சைவத்தையும் தமிழையும் வளர்க்கத் தன்னை முழுமையாக அர்ப்பணித்தவர் சு . இராசரத்தினம் அவர்கள்.

ஐரோப்பியர் ஆட்சிக் காலத்தில் சைவக் கல்வி மரபு பெரிதும் பாதிப்படைந்திருந்தது. இந்த நிலையில் சைவக் கல்வி மரபையும் சமூகத்தையும் பாதுகாத்து மேன்மைப்படுத்தும் நோக்கில் சு. இராசரத்தினம் சேர். பொன். இராமநாதன் முதலானவர்களால் 1923 ஆம் ஆண்டு மார்கழி மாதம் சைவ வித்தியா விருத்திச் சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. அவர், அதன் முகாமையாளராகவும் செயலாளராகவும் இருந்து அதன் இலட்சியங்களை முன்னெடுத்துச் செல்வதில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார்.

அவர் சைவத் தமிழ்ப் பாடசாலைகளையும் தமிழ், ஆங்கிலம் கற்பிக்கும் இருமொழிப் பாடசாலைகளையும் யாழ்ப்பாணக் குடாநாட்டின் தீவுப்பகுதியிலும், வடமராட்சி, தென்மராட்சி, வலிகாமம், யாழ்ப்பாணம் முதலிய பகுதிகளிலும் வவுனியா, முல்லைத்தீவு முதலான வன்னிப் பிரதேசங்களிலும் சிலாபம், முந்தல் முதலான பிரதேசங்களிலும் பதுளை, நாவலப்பிட்டி முதலான மலைநாட்டுப் பிரதேசங்களிலும் சைவப் பாரம்பரியங்களைப் பேணும் வகையில் அதன் நடைமுறைகள் பேணப்பட்டன. 1958 ஆம் ஆண்டு சு. இராசரத்தினம் அவர்களின் மேற்பார்வையின் கீழ் சைவ வித்தியா விருத்திச் சங்கத்தின் பொறுப்பில் 187 அரசாங்க நன்கொடை பெறும் பாடசாலைகள் இருந்தன. இது சைவமக்களிலும் சைவசமய வளர்ச்சியின் மீதும் அவர் கொண்டிருந்த ஈடுபாட்டினையும் அர்ப்பணிப்பினையும் எடுத்துக் காட்டி நிற்கின்றது.

சைவ ஆசிரியர் பயிற்சிக் கலாசாலை ஒன்றினை உருவாக்க வேண்டிய தேவை அக்காலத்தில் சைவத் தமிழ்க் கல்வி வளர்ச்சிக்கு அவசியமானதாகக் காணப்பட்டது. அதற்கிணங்க 1928 ஆம் ஆண்டில் சு. இராசரத்தினம் அவர்களின் தனிப்பட்ட முயற்சியால் யாழ்ப்பாணம் திருநெல்வேலியில் சைவாசிரிய கலாசாலையொன்று உருவாக்கப்பட்டது. அக் கலாசாலையினூடாகச் சைவத் தமிழ்ப் புலமை, இடையறா முயற்சி முதலான நற்பண்புகளையுடைய நல்லாசிரியர் பலர் உருவாக்கப்பட்டனர். 1963 ஆம் ஆண்டு வரை 1500 க்கு மேற்பட்ட ஆசிரியர்களுக்குப் பயிற்சியை அளித்த இக்கலாசாலையின் பணி குறிப்பிடத்தக்கதொன்றாகும்.

சு.இராசரத்தினம் அவர்கள் கிறிஸ்தவ சூழலிலே அநாதரவாகக் காணப்பட்ட சைவப் பிள்ளைகளின் கல்வியிலும் போதிய கவனம் செலுத்தினார். சைவப் பிள்ளைகள் கிறிஸ்தவப் பாடசாலைகளில கல்வி கற்றாலும் அவர்கள் விபூதி தரித்துத் தமது சைவப் பண்பாட்டிற்கு அமைவாகப் போகலாம் என்பதைச் சட்டசபையில் தமது தனியாள் தீர்மானத்தின் மூலம் நடைமுறைக்குக் கொண்டு வந்தார்.

சைவக் கல்விப் பாரம்பரியத்தை விருத்தி செய்வதன் மூலம் சைவ சமயத்தவரின் சமுதாய வளர்ச்சிக்கு வித்திட்ட சு. இராசரத்தினம் அவர்கள், அநாதரவான பிள்ளைகளும், சமூகத்தில் பின்தங்கிய மக்களும் கல்வி கற்பதற்குரிய வாய்ப்புக்களையும் ஏற்படுத்திக் கொடுத்தார். அவர் 1930 இல் திருநெல்வேலியில் ஆண்களுக்கும் பெண்களுக்குமான இரு அநாதை விடுதிகளையும் பாடசாலைகளையும் உருவாக்கினார். அவை இன்றும் சிறப்புடன் இயங்கி வருகின்றன. சைவ வித்தியா விருத்திச் சங்கத்தின்



இலவச விநியோகத்திற்காக

கீழ் இயங்கிய பாடசாலைகளில் எல்லாம் அக்காலத்தில் பின்தங்கிய சமூகத்தவராகக் கருதப்பட்டவர்களின் பிள்ளைகளையெல்லாம் மேல்நிலை மக்களின் கடும் எதிர்ப்புக்களுக்கு மத்தியில்,மிகுந்த துணிவுடன் சேர்த்துக் கொண்டார். அதன் மூலம் பிற்பட்ட சமூகத்தவரின் சமூக, பொருளாதார, கல்வி வளர்ச்சியில் அவர் கொண்டிருந்த ஈடுபாட்டினை அறிய முடிகின்றது.

சு. இராசரத்தினம் அவர்கள், நாவலரைப் போல் சைவ சமயத்தின் முதல் நூல்களாகத் திருமுறை பேணப்படவேண்டும் என்பதிலும், அவற்றைப் பண்ணோடு பாடுதல் வேண்டும் என்பதிலும் அசையாத நம்பிக்கை கொண்டிருந்தார். அதனால், தேவாரத் திருமுறைகளைப் பண்ணோடு பாடிப் பயன்பெறவும் வழிகாட்டினார். இவர் 1954 இல் வித்தியாசாலையில் பண்ணிசை ஆசிரியர்களை நியமித்துப் பல ஆசிரிய மாணவர்கள் பண்ணிசையில் பயிற்சி பெற உதவினார். இதன் பயனாக, சைவப் பாடசாலைகளில் திருமுறைகளைப் பண்ணோடு பாடும் மரபும் பேணப்படலாயிற்று.

சு. இராசரத்தினம் அவர்கள் சுமார் 35 ஆண்டுகளாக மேற்கொண்ட தொண்டின் பயனாக சைவவித்தியா விருத்திச் சங்கம் சைவத் தமிழுலகுக்கு அரும்பணி புரிந்தது எனலாம். அவரது பணியின் பெருமையை இந்து போர்ட் சு. இராசரத்தினம் என்ற பெயரே உணர்த்தி நிற்கின்றது. ஈழத்துத் சைவத் தமிழ் மக்களுக்கு அளப்பருந் தொண்டாற்றிய இச் சைவப் பெருமகன் 1970 ஆம் ஆண்டு பங்குனி 12 ஆந் திகதி சிவபதமடைந்தார்.

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.**

1. சு.இராசரத்தினம் எப்போது எங்கே பிறந்தார்?
2. சு.இராசரத்தினம் அவர்களின் சைவத் தமிழ் பணிகளுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தவர்கள் யாவர்?
3. இலங்கையில் சைவம் வளர்த்த சான்றோர்களில் சு. இராசரத்தினம் அவர்களின் பங்களிப்பு எத்தகையது?
4. சு. இராசரத்தினம் அவர்களுக்கும் சைவ வித்தியா விருத்திச் சங்கத்திற்குமிடையிலான தொடர்பினைக் குறிப்பிடுக.

## செயற்பாடு

1. "இந்துபோட் சு .இராசரத்தினம் அவர்கள் செய்த பணிகள்," என்ற தலைப்பில் 5 நிமிடமளவில் வகுப்பறையில் உரை ஒன்றை நிகழ்த்துக.

### பாடச்சுருக்கம்

- இலங்கையில் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலப்பகுதியில் சைவத் தமிழ்க் கல்விப் பாரம்பரியம் தழைத்தோங்க அரும்பணியாற்றிய சான்றோர்களில் சு. இராசரத்தினம் அவர்கள் முக்கியமானவர்.
- சைவ வித்தியா விருத்திச் சங்கத்தை ஆரம்பித்து, அதன் முகாமையாளராகவும் செயலாளராகவும் இருந்து அதன் இலட்சியங்களை நிறைவேற்றியவர்.
- சைவத் தமிழ்ப் பாடசாலைகளையும் தமிழ், ஆங்கிலம் கற்பிக்கும் இருமொழிப் பாடசாலைகளையும் அமைத்து சமய, கல்விப் பணியாற்றினார்.
- சைவ மக்களின் சமூக வளர்ச்சியிலும் அக்கறை செலுத்தியவர்.

# 18 சேர்.பொன். இராமநாதன்



சைவத்தின் வளர்ச்சிக்குப் பணியாற்றிய சைவத்தமிழறிஞர் வரிசையில் சேர். பொன். இராமநாதனுக்கும் ஒரு சிறப்பிடம் உண்டு. அவர் பலதரப்பட்ட அறிவியல்களிலே புலமையும் புகழும் பெற்றவர். சமகால அரசியல், சட்டம் முதலியவற்றில் பிரபல்யம் பெற்றவர். அவர் சிறந்த தேசியவாதி. அதேவேளையில் சமயத் துறையிலும் சிறந்து விளங்கியவர். சைவ சமயத்துக்கும் பண்பாட்டிற்கும் தொண்டாற்றியவர். சைவசமய மரபுக்கேற்ப, சமய வெறியின்றிப் பரந்த நோக்குடைய சமரச ஞானியாகவும் விளங்கினார்.

இவர், பத்தொன்பதாம் நூற்றாண்டில் பெருஞ் செல்வந்தராகவும் சைவசமயத்தின் மீது பற்றும் பக்தியும் கொண்டவராகவும் வாழ்ந்த பொன்னம்பல முதலியாருக்கும் செல்லாச்சி அம்மையாருக்கும் மகனாக, 1851 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 16 ஆந் திகதி பிறந்தார். இவர், தமது இளமைக் கல்வியை கொழும்பு இராசதானிக் (றோயல்) கல்லூரியிலும், உயர் கல்வியைச் சென்னை இராணிக் கல்லூரியிலும் பயின்றார். பின் சட்டப்பயிற்சி பெற்றுச் சட்டத்தரணியானார். நீதி பரிபாலன நாயகமாகவும், தற்காலிக சட்டமா அதிபராகவும் கடமையாற்றிய அவர், பிரித்தானிய அரசாங்கத்தால் வழங்கப்படும் 'நைட்' பட்டத்தையும் பெற்றவராவார். 1892 ஆம் ஆண்டு இலங்கை அரசியலிலே சட்ட நிரூபண சபையின் முதல் தமிழ்ப்பிரதிநிதியாகப் பிரவேசித்துப் பல ஆண்டுகள் அரசியற்பணி புரிந்தார். 1892 இல் சைவ பரிபாலனசபை நிறுவப்படுவதற்குத் தூண்டுகோலாகவிருந்தார்.

சேர். பொன். இராமநாதன் அவர்கள் தமது கௌரவத்தையும் செல்வ வளத்தையும் அதிகாரத்தையும் பயன்படுத்தி, சைவத் தமிழ் மக்களது சமயம், கல்வி, ஆன்மீகம் போன்ற துறைகளின் வளர்ச்சிக்காக அயராது பாடுபட்டார். இளமைக் காலத்தில் சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்களது தொடர்பாலும், ஆறுமுகநாவலர் அவர்களது நட்பினாலும் சைவத் தமிழ்ப் பணிகளில் பெரும் நாட்டம் கொள்ளலானார்.

சைவப் பெண்களின் கல்வி வளர்ச்சியானது சைவத்தமிழ்ச் சமூகத்தின் மேம்பாட்டுக்கு அடிப்படையாய் அமையுமென்பதைக் கருத்திற்கொண்டு, 1913 இல் யாழ்ப்பாணம் மருதனா மடத்தில் பெருந்தொகையான பொருட் செலவில் கட்டப் பெற்ற இராமநாதன் மகளிர் கல்லூரியைத் திறந்து வைத்தார். இதே அடிப்படையில் சைவப் பாரம்பரியத்தைப் பேணுமுகமாக 1921 இல் யாழ்ப்பாணம் திருநெல்வேலியில் பரமேஸ்வரா ஆண்கள் கல்லூரியையும் திறந்து வைத்துக் கல்விப் பணி புரிந்தார். இக் கல்லூரிகளிலே தமிழ், ஆங்கிலம் ஆகிய மொழிகளோடு சங்கீதமும் கற்பிக்கப்பட்டன. "கற்றலின் பயன் கடவுளை வணங்குதல்" என்ற அடிப்படையில் பரமேஸ்வராக் கல்லூரியில் பரமேஸ்வரன் கோயில் ஒன்றையும் கட்டுவித்தார்.

பெரும் சட்ட வல்லுனராகவும் அரசியல் அறிஞராகவும் விளங்கிய சேர். பொன். இராமநாதன் அவர்களின் உள்ளத்தில் ஆன்மீக உணர்வே பெரிதும் குடி கொண்டிருந்தது. தஞ்சாவூர் அருட்பரானந்த சுவாமி என்னும் ஆன்மிகப் பெரியாரின் தொடர்பினால் சமயம், தத்துவம், யோகநெறி என்பவற்றைத் தெளிவாகக் கற்றுணர்ந்தார். அதனால், இராமநாதன் அவர்களின் வாழ்வின் போக்கும் நோக்கும் மாறுபட்டமைந்தன. அமெரிக்கா, ஐரோப்பா, அவுஸ்ரேலியா முதலான நாடுகளுக்குச் சென்று, தமது ஆன்மீகப் போதனைகளை வெளிப்படுத்திச் சைவ சமயத்தை பரவச் செய்தார். இந்தியாவில் நடைபெற்ற சைவசித்தாந்த மாநாடுகளுக்குத் தலைமைதாங்கிய பெருமையும் இவருக்குண்டு.


இலவச விநியோகத்திற்காக

கொழும்பு மாநகரில் சைவத்தின் பெருமையினை உணர்த்தும் கலைக்கூடமான பொன்னம்பலவாணேச்சரத்தைக் கற்றளியாகக்கட்டிய பெருமை சேர். பொன். இராமநாதன் அவர்களையே சாரும். பண்டைய சைவமரபினைப் பேணிக் கலை அழகோடு மிளிரும் இவ்வாலயம் இன்றும் தலைநகரில் தனிப் பெருஞ்சிறப்போடு, அவரது சைவப் பெரும்பணிக்குச் சான்றாய் விளங்குகிறது.

சேர். பொன். இராமநாதன் அவர்கள் கல்வி, சட்டத்துறை சார்ந்த நூல்களை மட்டுமன்றி, ஆன்மீகம் தொடர்பான நூல்களையும் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதியுள்ளார். அவற்றுள் திருக்குறட்பாயிரம், இராமநாத பாஷ்யம், ஔவைநாயகியின் ஆத்திசூடி, திருமந்திர உரைவிளக்கம், பகவத்கீதா தமிழ்மொழிபெயர்ப்பும் விருத்தியுரையும் போன்றவை குறிப்பிடத்தக்கன.

இலங்கை அரசியல் வரலாற்றில் தேசபிதாவாகப் போற்றப்படும் சேர். பொன். இராமநாதன் அவர்கள் அறம், பணிவு, ஆத்மீகஞானம் முதலான குணங்களோடு இந்து தர்மம் போதிக்கும் சமயப்பொறை உடையவராகவும் பிற சமயங்களை மதிக்கும் மேலான பண்புடைவராகவும் விளங்கினார். பௌத்த ஆலயங்களின் சொத்துரிமைச் சட்டம், முஸ்லீம்களின் திருமண உரிமைச்சட்டம் முதலான சட்டங்களைப் பிரித்தானிய அரசு ஏற்றுக் கொள்ளுமாறு நிறைவேற்றி உதவினார். சைவத் தமிழ்மகனான இராமநாதன் அவர்கள் தமது சமயத்தின் பெருமைகளை மதித்ததோடு ஏனைய சமயங்களின் சிறப்புக்கும் உதவிபுரிந்தமை அவரை ஒரு உண்மையான ஆன்மீகவாதியாக உணர்த்திற்று.

இத்தகைய சைவப் பெருமகன் 1930 ஆம் ஆண்டு சிவபதமடைந்தார். அவர் மறைந்த பின்பும் பொன்னம்பலவாணேஸ்வரர் ஆலயம், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், இராமநாதன் மகளிர் கல்லூரி என்பனவும் அவர் சு. இராசரெத்தினம் முதலியோர்களுடன் சேர்ந்து நிறுவிய சைவவித்தியா விருத்திச் சங்கமும் இன்றும் அவரது பெயரை நினைவு கூர்ந்து நிற்கின்றன.

### 01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. சேர். பொன். இராமநாதன் அவர்களிடம் காணப்பட்ட சிறப்பியல்புகளைக் குறிப்பிடுக.
2. அருட்பரானந்த சுவாமிகளின் தொடர்பினால், சேர். பொன். இராமநாதன் அவர்களது வாழ்விலேற்பட்ட மாற்றங்கள் எவை?
3. சேர். பொன். இராமநாதன் அவர்களின் சைவப் பணிக்குச் சான்றாதாரம் தருக.

### செயற்பாடு

1. இராமநாதனும் பொன்னம்பலவாணேச்சரமும் - என்ற தலைப்பில் 5 நிமிடமளவில் பேச்சொன்றை நிகழ்த்துக.
2. சேர். பொன். இராமநாதன் அவர்களின் சமயப்பணி, கல்விப்பணி, சமூகப்பணி என்னுந் தலைப்பில் தகவல்களைச் சேகரித்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- சேர். பொன். இராமநாதன் அவர்கள் சைவத்தின் வளர்ச்சிக்குப் பணியாற்றிய சைவத் தமிழறிஞர் ஆவார்.
- அவர் பல தரப்பட்ட அறிவியலில் புலமையும் புகழும் பெற்றவர். உ-ம் சமய, கல்விப் பணியாளர், சமயத்துறவி, சமரச ஞானி, சிறந்த தேசியவாதி, வழக்கறிஞர்



இலவச விநியோகத்திற்காக

# 19 முப்பொருள்கள்

உலகத்துப் பொருள்களொல்லாம் மூன்று பிரிவினுள் அடங்கும். அறிவிக்காமலே அறியும் பொருள். அறிவித்தால் அறிந்தும், அறிவிக்காவிடில் அறியமாட்டாத பொருள். அறிவித்தாலும் அறியமாட்டாத பொருள் என்பனவே அப்பிரிவுகளாகும். இம்மூன்றையும் சைவசித்தாந்தம் பதி, பசு, பாசம் என்று கூறுகின்றது. இம்மூன்றும் என்றுமுள்ள பொருள்கள். இவை வெவ்வேறு பிரிவைச் சேர்ந்த தனிப்பொருள்களேயாயினும் ஒற்றோடொன்று நெருங்கிய தொடர்புடையனவே. பதி வியாபகம்: பசு வியாப்பியம்: பாசம் வியாப்தி, இவ்வகையில் இவை தொடர்புடையன. (பாசம் - கட்டுவது. பசு - கட்டுண்டிருப்பது)

**பதி:** கடவுளுக்கு இருவித நிலைகள் கூறப்படுகின்றன. ஒன்று **சொரூபலட்சணம்** என்னும் சிறப்பியல்பு. இந்நிலையிலிருக்கும் போது கடவுளுக்குப் பெயர், குணம், குறி எதுவுமில்லை. திரிகரணங்களுக்கும் எட்டாத இந்நிலையிலுள்ள இறைவனுக்குப் பரமசிவம் என்று பெயர் கூறப்படும். இவ்வுயர்ந்த நிலையிலுள்ள இறைவன் ஆன்மாக்களுக்கு அருள்புரியும் நோக்கில், தானாகவே பல படிகள் இறங்கி வந்து, பல நிலையிலுள்ள கடவுளரை அதிட்டித்து நின்று, அவர்கள் மூலமாக ஐந்தொழில்களைச் செய்தருளுகின்றார். இதுவே, இரண்டாவது நிலையாகும், இது **தடத்தலட்சணம்** எனப்படும் பொது இயல்பு ஆகும். இந்த நிலையில் இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானாசக்தி என்பவற்றின் தொடர்பினால் அருட்டிருமேனிகளாகிய அருவத் திருமேனி, அருவுருவத் திருமேனி, உருவத் திருமேனி என்பன தோற்றுகின்றன. சிவமும் சக்தியும் மணியும் ஒளியும் போலவும், கனியும் சுவையும் போலவும் பிரிப்பின்றி இருப்பன.

தடத்தநிலையில் சிவபிரான் அளவிலாற்றலுடைமை, இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்குதல், இயற்கையுணர்வினனாதல், தன்வயத்தனாதல், முற்றுமுணர்தல், பேரருளுடைமை, தூயவுடம்பினனாதல், வரம்பிலின்பமுடைமை என்னும் எட்டுக் குணங்களுடையவராகின்றார். ஆன்மாக்களின் துன்பத்தை நீக்கி, இன்பமளிப்பதற்காகவே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல். அருளல் என்னும் ஐந்தொழில்கள் செய்யப்படுகின்றன. பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் என்னும் ஐந்தும் ஐந்தொழில் புரியும் திருமேனிகளாகும்.

**பசு:** பதியினைப் போலவே ஆன்மாக்களும் அநாதியானவை. எண்ணிக்கையற்றவை. பாசங்களோடு அவை தொடர்புபட்டிருக்குந் தன்மையால் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படும். மூவகையான்மாவும் கொடிய ஆணவத்தோடு அநாதியாகவே கட்டுண்டு வருந்துவன. ஆணவத்தின் வலிமையைக் கெடுத்தற்காக இறைவன் இந்த ஆன்மாக்களுக்கு மாயையினாலாகிய தனு, கரண, புவன, போகங்களைக் கொடுத்துள்ளான். அவற்றினால் அவை வினைசெய்யும். வினை செய்தலாலும் திருவருட்சக்தி பதிதலினாலும் ஆணவம் வலியிழந்து காணப்படும். அந்நிலையில், ஆன்மாக்கள் இறைவனைச் சேர்ந்து பேரானந்தம் பெறும். ஆன்மா பதியைச் சாரும் போது சத்தாயும், பாசங்களைச் சாரும் போது அசத்தாயும் இருப்பதால் 'சதசத்து' எனப்படும்.

**பாசம் :** ஆன்மாக்களைப் பந்தித்திருக்கும் பாசங்கள் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்றுமாகும். ஆன்மாக்களின் சுக துக்கங்களுக்கு இவை முறையே நிமித்த காரணம், முதற் காரணம், துணைக் காரணம் என உள்ளவை. ஆணவமானது, ஆன்மாவின் அறிவை மறைத்து மயக்குதல், பொருள்களை மறைப்பதோடு தன்னையும் மறைத்துக் கொள்ளுதல் முதலான அளவிறந்த ஆற்றலுடையது. இது ஆணவ மலத்தின் இயல்பாகும். ஞானிகளிடத்தில் ஆணவ மலம் வலியிழந்து கிடக்கும். சீவன்முத்தரது உடல் நீங்கும்போது ஆணவ மலமும் அவர்களை விட்டு நீங்கும்.

**கன்மமா**னது நல்வினை, தீவினை என இரண்டாகும். இது மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினாலும் செய்யப்படும். உயிரோடு தொடர்புடைய வினை **பசுவினை** என்றும் சிவத்தோடு தொடர்புடைய வினை **சிவவினை** என்றும் அவை தனித்தனி இரண்டாகும். பற்றற்ற வினை என்பது பயன் கருதாது செய்யும் செயலாகும். இது நல்வினையிலும் பன்மடங்கு சிறந்தது. நல்வினையாலாவது புண்ணியம்,


இலவச விநியோகத்திற்காக

தீவினையாலாவது பாவம். புண்ணியத்தின் பலன் இன்பம். பாவத்தின் பலன் துன்பம். இன்ப துன்பங்களை அனுபவித்தற்கு ஆன்மா மீண்டும் பிறத்தல் வேண்டும். பற்றற்ற வினைக்கு மோட்சமே பலனாகும். அவ்வினை செய்த ஆன்மா மீண்டும் பிறவி எடுக்காது. ஆன்மாக்கள் செய்த வினைகளின் தொகுதி **சஞ்சிதம்** (சஞ்சிதம் - சேர்க்கப்பட்டது) எனப்படும். இவ்வினைகள் பல பிறவிகளில் சிறிது சிறிதாக அனுபவிக்கப்படுகின்றன. அனுபவிக்கப்படும்போது செய்யப்படும் வினை **பிராரத்தம்** எனப்படும். பழ வினைப்பயனை அனுபவிக்கும்போது ஆன்மா புதிய வினையையும் செய்யும். அது **ஆகாமியம்** என்று பெயர்பெறும். அவற்றின் பயனை அனுபவிக்க ஆன்மா மீண்டும் பிறக்க வேண்டும். பிறவாமை வேண்டுமாயின், ஆன்மா இறைவழிபாட்டில் நின்று பற்றற்ற வினை செய்தல் வேண்டும்.

**மாயை** - மாயை முறையே அசுத்தமாயை, சுத்தமாயை, பிரகிருதிமாயை என மூன்றாகும். மாயையிலிருந்து ஆன்மாக்களுக்கு அவற்றின் வினைக்கேற்ப தனு, கரண, புவன, போகங்கள் உண்டாக்கப்படுகின்றன.

**மறுபிறப்பு**: அளவற்ற ஆன்மாக்கள் பிறந்து இறந்து உழன்று கொண்டே இருக்கின்றன. **"புல்லாகிப் பூடாய் .. எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"** என்று மாணிக்கவாசக சுவாமிகள் கூறியவாறு, முத்தியடையும் வரையிலும் மீண்டும் மீண்டும் பிறவி எடுக்கின்றன. ஆன்மாவானது அது செய்த வினைக்கேற்றவாறு முன்பெற்ற பிறப்பை அல்லது அதிலும் உயர்ந்த தாழ்ந்த பிறப்புக்களை மீண்டும் பெறுகிறது. மலங்களினின்றும் நீங்கி முத்தியடைய விரும்பும் ஆன்மா, அதற்கேற்ற சைவ சாதனங்களை (சைவ நாற்பாதங்களை)க் கைக்கொண்டொழுகுதல் வேண்டுமென்று சைவசித்தாந்த நூல்கள் கூறுகின்றன.

**முத்தி:** முத்தி என்பது விடுதலை எனப் பொருள்படும். சிவனொடு அத்துவிதப்படுதலால் உண்டாகும் ஆனந்தம் சிவானந்தமாகும். முத்தி நிலையில் முப்பொருள் இரண்டற்று நிற்றலுக்குச் சித்தாந்தசாத்திரங்கள் தாடலை போற் கூடல் எனக் குறிப்பிடும். தாள், தலை என்னும் இருவேறு சொற்கள் சேரும்போது, இரண்டாகும் தன்மையற்று, தாடலை என்றாகும். இங்கு கலப்பினால் ஒன்றாகியும் பொருண்மையால் இரண்டாகியும் நின்றவாறு சிவனும் சீவனும் பிரிப்பின்றி ஒன்றாகியும் இரண்டாகியும் நிற்கும். முத்தியடைந்த ஆன்மாக்களை சிவத்தினது அனுபவத்தைப் பெறும்.

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.**

1. முப்பொருட்களும் எவை?
2. கடவுளுக்குரிய இருவித நிலைகளும் யாவை?
3. உயிர் ஏன் சதசத்து எனப்படுகிறது?

## செயற்பாடு

1. பதி, பசு, பாசம் என்பவற்றை விளக்கும் திருவருட்பயன் பாடல்களைத் தேடித் தொகுத்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- பதி, பசு, பாசம் என்னும் மூன்றையும் சைவசித்தாந்தம் முப்பொருள்கள் எனக் குறிப்பிடும்.
- சொரூபலட்சணம், தடத்த லட்சணம் என்பன கடவுளுக்குரிய இருவித நிலைகள் ஆகும்.
- அருவத் திருமேனி, அருவுருவத் திருமேனி, உருவத் திருமேனி என்பன கடவுளின் மூன்று வகைத் திருமேனிகளாகும்.
- பசு பாசங்களோடு தொடர்புபட்டிருக்குந் தன்மையால் சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என மூவகைப்படும்.

# 20 திருவருட்பயன்

**(மனனம் செய்யப்பட வேண்டியவை)**

சைவ சித்தாந்தசாத்திர நூற்றொகுதியிலுள்ள பதினான்கு நூல்களில் உமாபதி சிவாசாரியார் இயற்றிய **சித்தாந்த அட்டகம்** என்னும் தனித் தொகுதியும் அடங்கும். திருவருட்பயன் சித்தாந்தக் கருத்துக்களை எளிமையாக எடுத்துரைப்பது;. சிவஞானபோதத்துக்குச் சார்பு நூலாகப் போற்றப்படுவது. இந்நூல், **திருவருளைப் பற்றியும் அதனது பயனைப் பற்றியும் விளக்கமாகக் கூறுவதனால், திருவருட்பயன் என்னும் பெயர் பெற்றது.** அது பத்து அதிகாரங்களைக் கொண்டது. ஓவ்வொரு அதிகாரமும் பத்துக்குறள் வெண்பாக்களை உடையது. முதல் ஐந்து அதிகாரங்களும் **பொது** எனவும், பின் ஐந்து அதிகாரங்களும் **சிறப்பு** எனவுங் கூறுவர். முன்னைய ஐந்தும் திருவருளைப் பற்றியும் பின்னைய ஐந்தும் அதன் பயனைப் பற்றியும் கூறுகின்றன.

திருவருட்பயனிலுள்ள முதல் ஐந்து அதிகாரங்களும் முறையே, திருவருளைக் கொடுக்கும் **பதியின் தன்மை**யையும், அத் திருவருளைப் பெறும் **உயிரின் தன்மை**யையும், திருவருளால் வலி அடங்கப்படும் **மலத்தின் தன்மை**யையும், **திருவருளின் தன்மை**யையும், அருள் வடிவினரான **குருவின் தன்மை**யையும் குறிப்பிடுகின்றது.

**காப்பு**

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

பொழிப்புரை: பிரணவ சொரூபராகிய விநாயகப் பெருமானை மெய்யன்போடு வழிபடின், அவர் திருவருளின் துணையினாலே ஞானங் கைகூடும்.

பத விளக்கம்: **நற்குஞ்சரம்** - அருள்பொழியும் திருமுகமாகிய யானைமுகத்தினை உடையவரும்; **கன்று** - என்றும் அழியா இளமையினை உடையவருமான விநாயகக் கடவுளை; **நண்ணில்** - ஒருவர் மனம், மொழி, மெய்களால் வழிபடுவாராயின்; **கலைஞானம்** - மெய்ப்பொருளாகிய ஞானசாத்திரம்; **கற்கும் சரக்கு அன்று** - வருந்திக் கற்கவேண்டிய பொருளல்ல.

## முதலாம் அதிகாரம்

### 1. பதிமுதுநிலை

மேலான இறைவனுடைய தன்மையை உணர்த்துவதால் இவ்வதிகாரம் பதிமுதுநிலை எனப்படும்.

**இறைவனது இயல்பு**

1. அகர உயிர்போல அறிவாகி எங்கும்
நிகரிலிறை நிற்கும் நிறைந்து.

பொழிப்புரை: அகர ஒலி எழுத்துக்களுக்கெல்லாம் உயிராய் நிற்பதுபோல, இறைவன் உயிர்க்குயிராய் நிற்பான்.

பத விளக்கம்: **அகரவுயிர்போல்** - அகரம் ஆகிய எழுத்து, ஏனைய எழுத்துக்களுக்கெல்லாம் முதலாகப் பொருந்தி, அவற்றின் வேறற நிற்பதுபோல; **நிகரில் இறை** - ஒப்பற்றவராகிய இறைவன்; **எங்கும் நிறைந்து** - உலகு உயிர் முழுவதும் நீக்கமற நிறைந்து; **அறிவாக**- ஞான உருவாய்; **நிற்கும்** - ஆதியும் அந்தமும் இன்றி நின்று அருள்செய்வார்.

**திருவருட்சத்தியின் தன்மை**

2. தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலான் எங்கள் பிரான்.

பொழிப்புரை: சிவபெருமான், ஆன்மாக்களை வீடுபேற்று அடையும் வண்ணம் செய்கின்ற திருவருட்சத்தியுடன் பிரிப்பின்றி ஒன்றாய் இருப்பவர்.

பத விளக்கம்: **தன்நிலைமை** - தம்முடைய நின்மலம் முதலாகவுள்ள ஒப்பற்ற நிலையை; **மன்உயிர்கள்** - நிலைபெற்ற ஆன்மாக்கள்; **சார** - பொருந்த; **தரும்** - கூட்டியருளுகின்ற; **சத்தி பின்னம் இலான்** - சிவன், திருவருட்சக்தியிலிருந்து பிரிக்கமுடியாத பூரணப்பொருள்; **எங்கள் பிரான்** - எமது இறைவன்.

**சிவத்தின் உயர்வு**

3. பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்பின்மை யான்.



இலவச விநியோகத்திற்காக

பொழிப்புரை: நிறை, நொய்மை, கருணை, கிடைத்தற்கருமை ஆகிய தன்மைகளால் இறைவனுடன் ஒப்பிடுவதற்கு யாருமற்றவர்ளு.

பத விளக்கம்: **பெருமைக்கும்** - மகத்துவத்துக்கும்; **நுண்மைக்கும்** - அறிதற்கருமைக்கும்; **பேர் அருட்கும்**- மிகுந்த கிருபைக்கும்; **பேற்றின் அருமைக்கும்** - பெறுதற்கருமைக்கும்; **ஒப்பின்மையான்** - இறைவன் ஒப்பில்லாதவர்.

### சிவத்தின் அருட்செயல்கள்

4. ஆக்கி யெவையு மளித்தா சுடனடங்கப்
   போக்குமவன் போகாப் புகல்.

பொழிப்புரை: பிரமாவைக் கொண்டு படைத்தலும், திருமாலைக் கொண்டு காத்தலுஞ் செய்வித்து எல்லாவற்றையும் சங்கரிப்பவராய் உள்ள முதல்வரே. எல்லாவற்றிற்கும் புகலிடமாவார்.

பத விளக்கம்: **எவையும் ஆக்கி** - எல்லா உயிர்களையுந் தோற்றுவித்து; **அளித்து** - காத்து; **ஆசுடனடங்கப் போக்கும் அவன்** - முடிவில் மாயா மலத்திலே எல்லாம் அடங்கச் சங்கரிக்கும் அவனே; **போகாப்புகல்** - எக்காலத்தும் ஆன்மாக்களுக்குப் புகலிடமாக உள்ளார்.

### அருட்செயலை நடத்துந் திருமேனிகள்

5. அருவும் உருவும் அறிஞர்க் கறிவாம்
   உருவும் உடையான் உளன்.

பொழிப்புரை: அருவும், உருவும், அருவருவுமாகவுள்ள ஒன்பது பேதமான திருமேனிகளை உடையவரே அறிவுக்கறிவாக விளங்கும் ஞானவடிவினராகிய சிவபெருமான்.

பத விளக்கம்: **அருவும்** - சிவம், சக்தி, நாதம், விந்து ஆகிய நான்கு அருவத்திருமேனிகளும்; **உருவும்** - மகேசுரன், உருத்திரன், மால், அயன் ஆகியநான்கு உருவத் திருமேனிகளும்; **அருவும் உருவும்** - சதாசிவன் என்னும் அருவுருவத்திருமேனியும்; **அறிஞர்க்கு** - அறிவால் மிக்கவர்களுக்கு; **அறிவாம் உருவும்** - ஞானவடிவமும்; **உடையான் உளன்** - உடையவராய் இருக்கிறார் சிவபெருமான்.

### அத்திருமேனிகளைத் தோற்றுவிப்பர் சிவனே

6. பல்லார் உயிருணரும் பான்மையென மேலொருவன்
   இல்லாதான் எங்கள் இறை.

பொழிப்புரை: ஆன்மாக்களுக்கு எல்லாம் அறிவித்தருள இறைவன் இருப்பது போல, இறைவனுக்கு அறிவிக்க மேலொருவர் இல்லை. இறைவனே பரம்பொருள் ஆவார்.

பத விளக்கம்: **பல் ஆர் உயிர்** - சகல ஆன்மாக்களும்; **உணரும் பான்மை என** - சிவபெருமான் கொடுத்தருளிய தனு, கரண, புவன போகங்களைக் கொண்டு அறிகின்ற தன்மைபோல; **மேலொருவன் இல்லா தான்** - தமக்கு அறிவிக்கின்ற ஒரு தலைவன் இல்லாதவர்; **எங்கள் இறை** - எங்கள் பரம்பொருளாகிய சிவபெருமான்.

### ஆன்மாவிற் சிவம் பிரகாசித்தல்

7. ஆனா அறிவா அகலா அடியவர்க்கு
   வானாடர் காணாத மன்.

பொழிப்புரை: தேவர்களால் எளிதில் அறிப்படாத இறைவன், தன்னை அன்புடன் வழிபடும் மெய்யடியார்களை விட்டு நீங்காது, அருள் செய்வார்.

பத விளக்கம்: **வானாடர் காணாத மன்** - தேவர்களால் அறிய இயலாத இறைவன்; **அடியவர்க்கு** - தன்னை அன்புடன் வணங்கும் மெய்யடியார்களுக்கு; **ஆனா அறிவாய்** - அவர்கள் அறிவின் கண் நீங்காத பேரறிவாக நின்று; **அகலான்** - அவர்களை விட்டு என்றும் நீங்கமாட்டார்.

### சிவத்தின் வியாபகம்

8. எங்கும் மெவையும் எரியுறுநீர் போலேகந்
   தங்குமவன் தானே தனி.

பொழிப்புரை: வெந்நீரில் உள்ள சூடு அதன் ஒவ்வொரு துளியிலும் வியாபித்திருப்பது போல, இறைவன் உலகத்தில் எல்லாவற்றிலும் கலந்திருப்பினும் அவற்றின் வேறாயும் நிற்பன்.

பத விளக்கம்: **எங்கும் எவையும்** - சித்து, சடம் ஆகிய எல்லாவற்றிலும்; **எரியுறு நீர்போல்** - வெந்நீரில் உள்ள சூடுபோல; **ஏகம் தங்கும்** - கருத்தா இரண்டறக் கலந்து நிற்பார்; **அவன் தானே தனி** - அங்ஙனம் கலந்திருப்பினும், அவற்றின் தன்மை சாராமல் தனித்து நிற்கும் இயல்பினன் இறைவன்.

### இறைவன் விருப்பு வெறுப்பு இல்லாதவர்

9. நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன்.

பொழிப்புரை: கடவுள் விருப்புவெறுப்பு இல்லாதவர்; தம் வழிநிற்பார்க்குப் பேரின்பமாகிய சுகத்தைக் கொடுப்பதால் சங்கரன் ஆகிறான்

பத விளக்கம்: **நலம் இலன் நண்ணார்க்கு** - தம்மை வழிபடாதவருக்குப் பேரின்பத்தைக் கொடாதவர்; **நண்ணினர்க்கு நல்லன்** - மெய்யன்போடு வழிபடுபவர்களுக்கு இன்பத்தைக் கொடுத்தருளுபவர்; **சலமிலன்** - வழிபடாமையினால் வெறுப்பேனும், வழிபடுவதனால் விருப்பேனும் இல்லாதவர்; **பேர் சங்கரன்** - ஆன்மாக்களுக்குச் சுகத்தைச் செய்பவராதலால், சங்கரன் என்னும் திருப்பெயரையுடையவர். **சம்** - சுகம்; **கரன்** - செய்பவர்.

### திருவருள் வழியில் ஆன்மாவைச் செலுத்துதல்

10. உன்னுமுள(து) ஐயம் இலதுணர்வாய் ஓவாது
மன்னுபவம் தீர்க்கு(ம்) மருந்து.

பொழிப்புரை: அறிவுக்கறிவாய் நின்று பிறவிப்பிணியைத் தீர்க்கும் இறைவனை வழிபடின் முத்தியின்பங் கிடைக்கும் என்பதில் எத்தகைய சந்தேகமும் இல்லை.

பத விளக்கம்: **உணர்வாய்** - ஞானவடிவாய் நின்று (உள்ளுணர்வாய்); **மன்னுபவம் தீர்க்கும் மருந்து** - நிலைபெற்றதாகிய பிறவிப்பிணியைத் தீர்க்கின்ற மருந்தாகவுள்ள இறைவனை; **ஓவாது உன்னும்** - இடைவிடாது அன்போடு வழிபடுங்கள்; **உளது** - அதனால், எங்குமில்லாததோர் இன்பமாகிய முத்தி நமக்கு உளதாகும்; **ஐயமிலது**- முத்தியின்பங் கிடைப்பதில் சந்தேகம் இல்லை.

### கடவுள் இயல்பு

கடவுள் ஒருவர் இருக்கிறார். அவர் அகர ஒலி ஏனைய எழுத்துக்களை இயக்குவது போல, உலகை இயக்குபவர். உயிர்களுக்கு அருள்புரியும் கருணையுள்ள அவர், தமது சிவமாந் தன்மையை உயிர்கள் சாரும் வண்ணம் உபகரித்தலைச் செய்யும் பராசக்தியோடு பிரிவறவுள்ளவர். பெரியதிற் பெரியவரான அவர், சிறியதிற் சிறியவர். பேரருளுடைய அவரை அன்பினாலன்றி அடைய இயலாது. ஆன்மாக்கள் ஈடேறும் வண்ணம் உடம்பு முதலானவற்றைப் படைத்துக் காத்து அழித்து அவ்வான் மாக்களுக்குப் புகலிடமாய் உள்ளவர். வடிவமில்லாத அவர், ஆன்மாக்கள் தம்மை வழிபட்டு உய்யும் வண்ணம், அவரவர்களின் பக்குவத்துக்கேற்ற வகையில் உருவம், அருவுருவம், அருவம் என்னும் திருமேனிகளை உடையவர். எல்லாவற்றையும் தாமே அறிந்து கொள்ளும் பேரறிவுடைய அவருக்கு மேலாக ஒருதலைவனும் இல்லை. பிரமா, திருமால் முதலாய தேவர்களாலும் காண் பதற்கரிய அவர், அடியார்கள் மனத்திலே அறிவு வடிவாக எழுந்தருளியிருப்பர். அவர் உயிர் களுக்கு அருள் புரிதற்பொருட்டு ஒன்றாய், வேறாய், உடனாய் நிற்பர், தம்மை வணங்கும் அன்பர்களுக்கு அருள்செய்கின்ற அவர் வணங்காதவர்களுக்கு அருள் செய்யாவிடினும், விருப்பு வெறுப்பு இல்லாதவராய் இருப்பார். உயிர்களின் பிறவிநோய்க்கு அவரே மருந்து. உயிர்களுக்கு அவரே கதி.

## இரண்டாம் அதிகாரம்

### 2. உயிரவை நிலை

பலவாய உயிர்களது தன்மையினைப் பற்றிக் கூறுவதனால், இது உயிரவை நிலை எனப்படும். இது பசுநிலை எனவுங் கூறப்படும்.

### ஆன்மாக்கள் உள்பொருள் அவை எண்ணலல்லாதன

1. பிறந்தநாள் மேலும் பிறக்குநாள் போலுந்
துறந்தோர் துறப்போர் தொகை.

பொழிப்புரை: உயிர்கள் முன்பு பிறந்து வாழ்ந்த நாட்களையும் இனிப் பிறந்து வாழப்போகின்ற நாட்களையும் அறுதியிட்டுச் சொல்ல இயலாதது போல இதுவரை மோட்சம் அடைந்தார் தொகையையும் இனி அடைய இருப்பார் தொகையையும் இவ்வளவு எனக் கணக்கிட்டுச் சொல்ல இயலாது.

பத விளக்கம்: துறந்தோர் தொகை - முத்தியடைந்த ஆன்மாக்கள் தொகை; பிறந்தநாள் போலும் - ஆன்மாக்கள் முன்பு பல பிறவிகளில் பிறந்து வாழ்ந்த நாட்களின் தொகைக்குச் சமமாம்; துறப்போர் தொகை - இதுவரை முத்தியடையாதிருக்கும் ஆன்மாக்கள் தொகை; மேல் பிறக்கும் நாள்போலும் - இனிப்பல பிறவிகளிற் பிறந்து கழிக்கவிருக்கும் நாட்களின் தொகைக்குச் சமமாம்.


இலவச விநியோகத்திற்காக

### மூவகைப்பட்ட உயிர்கள்

2. திரிமலத்தார் ஒன்றதனிற் சென்றார்கள் அன்றி
ஒருமலத்தார் ஆயும் உளர்.

பொழிப்புரை: உயிரினங்கள் மூவகைப்படும். ஆவை ஆணவம், கன்மம், மாயை என மூன்று மலங்களும் உள்ள சகலர், ஆணவம், கன்மம் என்னும் இரு மலமுள்ள பிரளயாகலர், ஆணவ மலமாத்திரமுள்ள விஞ்ஞானகலர் என மூன்றாம்.

பதவிளக்கம்: திரிமலர்த்தார் - ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையுடைய சகலராயும்; ஒன்று அதனிற் சென்றார்கள் - மாயா மலத்தை நீக்கி மற்ற இருமலமும் உடைய பிரளயாகலராயும்; அன்றி - இவர்களைத் தவிர; ஒரு மலத்தாராயும் - ஆணவமாகிய ஒரு மலத்தையேயுடைய விஞ்ஞானகலராயும்; உளர் - இப்படி மூவகைப்பட்ட ஆன்மாக்களாய் இருப்பார்கள்.

### மூவகை ஆன்மாக்களின் வேறுபாடு

3. மூன்றுதிறத்(து) உள்ளாரும் மூலமலத்(து) உள்ளார்கள்
தோன்றலர்தொத்(து) உள்ளார் துணை.

பொழிப்புரை: சகலர் என்பார் தாம் மலபந்தம் உள்ளவர்கள் என்பதை அறியமாட்டார். மலபந்தமுள்ளவர் - பெத்தான்மாக்கள்.

பத விளக்கம்: மூன்று திறம் - அம்மூவகைப்பட்ட ஆன்மாக்கள்; மூலமலம் - அனாதிமலம், ஆணவ மலம்; துணையுள்ளார் - மாயையைத் துணையாக உள்ள சகலர்; தொத்து - மலப் பிணிப்பு; தொத்துத் தோன்றலர் - மலத்தினால் தாம் பிணிக்கப்பட்டிருக்கின்ற நிலையை அறியாதவர்களாவர்; எனவே, விஞ்ஞானகலரும், பிரளயாகலரும் தமக்கு மலபந்தம் உள்ளதை அறிந்தவர்கள் என்பது பெறப்படும்.

### ஆன்மாக்கள் சுதந்திரமுடையன அல்ல

4. கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக்(கு) என்னோ செயல்.

பொழிப்புரை: ஆன்மாக்கள் பகல்வேளையில் (நனவிலே) கண்ட பொருள்களை (இரவில்) கனவில் கண்டு, கலக்கம் (அச்சம்) அடையும் இயல்புள்ளவை. எனவே, இப்படியாக மாறிக் காண்கின்ற வலியற்றதாகிய ஆன்மாக்களுக்குச் சுதந்திரமான செயல் ஏது உண்டு. இல்லை என்பது கருத்தாகும்.

பத விளக்கம்: நாளும் கண்டவற்றை - நாள்தோறும் பகல் வேளையில் (நனவிலே) கண்ட பொருள்களை; கனவிற் கலங்கியிடும் - கனவிலே மாறுபடக் காண்பதும் (மறப்பதும் உண்டு); திண்திறலுக்கு - இப்படியாக மாறிக் காண்கின்ற வலியற்றதாகிய ஆன்மாக்களுக்கு; செயல் என்னோ - சுதந்திரமான செயல் ஏது உண்டு. ஆற்றல் இல்லாத ஆன்மாவை, திண்டிறல் உள்ளதாகக் கூறியமை இகழ்ச்சிக் குறிப்புமொழி.

### ஆன்மாக்கள் அறிவிக்க அறிவன

5. பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்(கு)
அறிவென்ற பேர்நன் றற.

பொழிப்புரை: உயிர்கள் தாமாக ஒன்றையும் அறியாமல் ஐம்பொறிகளின் உதவியால் அறிவனவாதலால், அவற்றுக்கு அறிவு எனப் பெயர் சூட்டியுள்ளமை மிகவும் நல்லது. (பிழையானது என்பது கருத்து.)

பத விளக்கம்: பொறியின்றி - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளில் யாதாயினும் ஒன்றின் துணையில்லாமல்; ஒன்றும் புணராத புந்திக்கு - ஒரு விடயத்தை அறிந்து கொள்ளமாட்டாத ஆன்மாக்களுக்கு; அறிவு என்ற பேர் - அறிவு என வைத்த பெயர்; அற நன்று - மிகவும் நன்று; புந்தி - அறிவு; ஆகுபெயராய் ஆன்மாக்களை உணர்த்திற்று. தாமாக ஒன்றையும் அறியமாட்டாத ஆன்மாக்களுக்கு அறிவு என்ற பெயர் மிகவும் நன்று என்பது இகழ்ச்சிக்குறிப்பு.

### ஆன்மா அறிவுப் பொருள்

6. ஒளியும் இருளும் உலகும் அலர்கண்
தெளிவில் எனில் என் செய.

பொழிப்புரை: விளக்க விளங்கும் கண்போல, உணர்த்த உணரும் ஆன்மாவுக்கு, அறிவு உண்டு. (அறிவு உண்டெனவே இச்சை, தொழில் என்பனவும் உண்டென்பது கருத்து)

பத விளக்கம்: **ஒளியும்** - விளக்கத்தைத் தருவனவாகிய சூரியன், சந்திரன், நெருப்பு ஆகிய ஒளிப்பெருள்களும்; **இருளும்** - மயக்கத்தைத் தருவதாகிய இருளும்; **உலகும்** - உலகமும் அதில் உள்ள பொருள்களும்; **அலர்கண்**

**தெளிவு இல் எனில்** - விழித்திருக்கும் கண்ணிற்குக் காணுந்தன்மை இல்லையாயின்; **என்செய** - என்ன பயனைச் செய்ய வல்லன? (ஒரு பயனையும் செய்யமாட்டாது); **ஒளி** - சிவம்; **இருள்** - மலம்; **உலகம்** - மாயை.

### ஆன்மா சதசத்து

7. சத்தசத்தைச் சாரா(து) அசத்தறியா(து) அங்கணிவை
உய்த்தல்சத சத்தா முயிர்.

பொழிப்புரை: உயிர்கள் சார்ந்ததன் வண்ணமானவை. அவை சத்தையும் சார்ந்து நிற்கும்; அசத்தையும் சார்ந்து நிற்கும். ஆகவே ஆன்மா **சதசத்து** எனப்படும்.

பத விளக்கம்: **சத்து அசத்தைச் சாராது** - சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தைச் சேராது; **அசத்து அறியாது** - அசத்தாகிய பாசம் சடமாகையால், அது ஒன்றையும் அறியமாட்டாது; **அங்கண்** - அவ்விடத்தில்; **இவை** - இவை இரண்டையும்; **உய்த்தல்** - பொருந்தி அறிகிறது; **சதசத்தாம் உயிர்** - சதசத்தாகிய ஆன்மா.

### ஆன்மா தன்வயமில்லாதது

8. இருளில் இருளாகி எல்லிடத்தில் எல்லாம்
பொருள்கள் இலதோ புவி.

பொழிப்புரை: கண்ணாடி, படிகம், கண் என்பன இருளில் இருளாகியும், ஒளியில் ஒளிவிட்டும் விளங்குவன. அவற்றைப் போலவே ஆன்மாவும் ஆணவத்தோடு கூடும்போது அறியாமையும், திருவருளோடு சேரும்போது மெய்யறிவும் பெறும் இயல்பினது.

பத விளக்கம்: **இருளில் இருளாகி** - இருள் வந்து இறுத்தகாலத்து இருளாகியும்; **எல் இடத்தில் எல்லாம் பொருள்கள்** - ஒளிவந்து உற்றபோது ஒளிவிட்டு விளங்கியும் நிற்கும் பொருள்களை; **புவி இலதோ** - இவ்வுலகம் உடையதன்றோ? **எல்** - ஒளி.

### ஆன்மா சிவத்தைக் காணாமைக்கு காரணம்

9. ஊமன்கன் போல ஒளியும் மிகவிருளே
யாமன்கண் காணா தவை.

பொழிப்புரை: கண் சூரிய ஒளியாற் சூரியனைக் காண்பது போல, உயிர்கள் அருட்கண்ணால் இறைவனைக் காணும் தன்மை உள்ளவை. ஆன்மாவை மறைப்பது ஆணவ மலமாகும்.

பத விளக்கம்: **ஊமன் கண் போல** - கூகையின் கண்ணுக்குச் சூரிய ஒளி தெரியாதது போல; **மன்கண் காணாதவை** - இறைவன் அருளிச் செய்யும் ஞானத்தைக் கொண்டு காணாத ஆன்மாக்களுக்கு; **ஒளியும் மிக இருளேயாம்** - சிவமாகிய ஒளி அவ்வான்மாக்களுக்குத் தோன்றாது நிற்கும்.

### ஆன்மா அருளைப் பெறுவது எக்காலம்

10. அன்றளவும் ஆற்றுமுயிர் அந்தோ அருள்தெரிவ(து)
என்றள(வு) ஒன்றில்லா இடர்.

பொழிப்புரை: அநாதியாகவே அளவில்லாத துன்பங்களைத் தாங்கி நிற்கும் உயிர்கள், ஆணவம் நீங்கித் திருவருள் இன்பத்தில் இருப்பது எக்காலம்?

பத விளக்கம்: **அன்று அளவும்** - அநாதி தொடங்கியே; **அளவு ஒன்று இல்லா இடர்** - எண்ணிறந்த பிறப்பு இறப்புகள் ஏதுவாக வந்த துன்பங்களை; **ஆற்றும் உயிர்** - தாங்கி நிற்கும் உயிர்கள்; **அந்தோ** - ஐயோ; **அருள் தெரிவது என்று** - ஆணவமாகிய அஞ்ஞானம் நீங்கித் திருவருளாகிய மெய்ஞ்ஞான இன்பத்தில் திளைப்பது எக்காலம்? அந்தோ என்பது இரக்கக் குறிப்பு.

#### பலவாய உயிர்களின் தன்மை

ஆன்மாக்கள் எண்ணில்லாதன. அவை சகலர், பிரளயாகலர். விஞ்ஞானகலர் என்னும் மூவகையின. ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்கள் உள்ளவர் சகலர் எனப்படுவர். பிரளயாகலர் என்பார் ஆணவம், கன்மம் எனும் இரு மலங்கள் உள்ளவர். விஞ்ஞானகலருக்கு ஆணவம் மாத்திரம் உண்டு. இவர்களுக்கு விஞ்ஞானத்தால் கலை நீங்கும். மூவகை ஆன்மாக்களிலேயும் ஆணவம் பொருந்தியிருந்தபோதிலும், இவர்களுள் சகலர் தமக்கு ஆணவமலம் உண்டு என்பதையே அறியமாட்டார்கள். ஆன்மாவுக்கு சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து அவத்தைகள் உண்டு. ஆன்மா ஆணவ மலத்தால் பிணிக்கப்பட்டுள்ளதால் தானாக எதனையும் அறியாது. ஆன்மாவுக்கு இரங்கிய இறைவன் அதற்கு உடம்பு, உறுப்பு, உலக நுகர்பொருள் என்பனவற்றைக் கொடுத்தருளி அறிவிக்க, ஆன்மா அறியும். அறிவிக்க அறியுந் தன்மையுள்ளதென்பதால் ஆன்மா சடப்பொருள் அல்ல. அது சத்தையும் சாரும் அசத்தையும்சாரும். அதனால், அதற்குச் சதசத்து எனறும் பெயர். ஆணவத்தைச் சார்ந்திருந்த ஆன்மா உலகத்தையும் உலக இன்பங்களையும் மெய்யானவை எனப்பெரிதும் மதித்து நிற்கின்றது. அது சிவத்தைச் சார்ந்தபின் சிவமே மெய்யென்றும் எல்லாம் சிவமயம் என்றும் அறியும். அப்படி அறிந்து நிற்கும் நாள் ஆன்மாவுக்கு என்று வருமோ?



இலவச விநியோகத்திற்காக

## மூன்றாம் அதிகாரம்

### இருண்மல நிலை

ஆணவமலம் இருள்போல ஆன்மாவின் அறிவை மறைத்து நிற்கும். ஆணவ மலத்தின் தன்மையைக் கூறும் இவ்வதிகாரம் மாயை, கன்மம் ஆகிய ஏனைய மலங்களின் தன்மையையும் கூறும். ஆகவே இவ்வதிகாரத்துக்குப் பாசநிலை எனவும் பெயர் உண்டு.

#### ஆணவ மலத்தினது உண்மை

1. துன்றும் பவத்துயரும் இன்புந் துணைப்பொருளும்
இன்றென்ப(து) எவ்வாறு மில்.

பொழிப்புரை: பிறவித்துன்பமும் வீடுபேறும் இவற்றுக்குக் காரணமான மலங்களும் இறைவனும் இல்லாத பொருள்கள் எனக் கூறுவது பொருந்தாது.

பத விளக்கம்: **துன்றும் பவத்துயரும்** - தொன்றுதொட்டு இடைவிடாது வரும் பிறவித்துன்பமும், இன்பும் - வீடுபேறாகிய பேரின்பமும்; **துணைப்பொருளும்** - பிறவித் துன்பத்துக்குக் காரணமான மலங்களும், வீடுபேற்றுக்குக் காரணமான இறைவனும், **இன்று என்பது** - இல்பொருள்கள் எனச் சொல்லுவது; **எவ்வாறுமில்** - எவ்வாற்றானும் பொருத்தமானதல்ல; **காரணம்** - முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணம் என மூன்றாம்; **காரணம்** - துணை.

#### ஆணவமலம் இருள்போல மருள்வடிவிற்று

2. இருளான(து) அன்றி இலதெவையும் ஏகப்
பொருளாகி நிற்கும் பொருள்.

பொழிப்புரை: இருட்டானது கண்களை மறைத்து உலகப்பொருள்களைக் காணமுடியாமற் செய்வதுபோல ஆணவமலமும் உயிரறிவை மறைத்து உண்மையை அறியமுடியாமற் செய்யும்.

பத விளக்கம்: **எவையும்** - உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும்; **ஏகப்பொருளாகி** - அவற்றின் தன்மை தோன்றாதவண்ணம் ஒரே பொருளாக; **நிற்கும் பொருள்** - தோன்றச் செய்யும் பொருள்; **இருளானது அன்றி இலது** - இருளே அன்றி வேறு பொருள் இல்லை.

#### ஆணவமலம் இருளிலுங் கொடியது

3. ஒருபொருளும் காட்டா(து) இருளுருவங் காட்டும்
இருபொருளும் காட்டா(து) இது.

பொழிப்புரை: ஆணவமலம் இருளைப் போன்றதாயினும், அது இருளிலும் கொடியதாகும். இருளானது உலகிலுள்ள பிறபொருள்களைக் காட்டமாட்டாதாயினும், தன்னுடைய உருவத்தைக் காட்டும் தன்மையுடையது. ஆனால், இந்த ஆணவமலமானது அப்படியானதன்று. தன்னையும் காட்டாது; பிற பொருள்களையும் காட்டாது. ஆகவே, ஆணவமலம் இருளிலும் கொடியதாகும்.

பத விளக்கம்: **இருள்** - இருளானது; **ஒரு பொருளும் காட்டாது** - பிறபொருள்களைக் காட்டமாட்டாதாயினும்; **உருவம் காட்டும்** - தன்மையுடையது; **இது** - ஆனால், இந்த ஆணவமல இருளானது; **இருபொருளும் காட்டாது** - பிற பொருள்களையும் காட்டாது; தன்னையும் காட்டாது.

#### ஆணவமலம் அநாதியாய் ஆன்மாவோடுள்ளது

4. அன்றளவி உள்ளொளியோ(டு) ஆவி யிடையடங்கி
இன்றளவும் நின்ற(து) இருள்.

பொழிப்புரை: ஆணவம் அநாதியாகவே உயிரோடுள்ளதாய், உயிர்க்குயிராய இறைவனைச் சாராது, உயிர் சிவனடியைச் சேரும்வரை உயிரோடு உள்ளது.

பத விளக்கம்: **அன்று** - அநாதியே; **அளவி** - ஆன்மாவோடு கலந்துள்ளதாய்; - **உள்ளொளி** - உள் ஒளியோடு; **ஆவியிடை அடங்கி** - அவ்வான்மாவாகிய உயிர்க்கு உயிராகிய இறைவனும் அதனோடு நிற்க, அந்த இறைவனோடு சாராது ஆன்மாவையே சார்ந்து; **இருள்;** ஆணவ மலமானது; **இன்றளவும் நின்றது** - இன்று வரைக்கும் நீங்காது நிலைத்து நிற்கின்றது.

*ஆணவ மலம்* அநாதியே உள்ளது. ஆதலால், அது **மூலமலம்** எனப்படும். மாயை, கன்மம் ஆகியவை இடையில் வந்தவையாதலால் ஆகந்துகம் எனப்படும். அவை நீங்கிப் புணர்பவை. ஆணவம், இறைவனைச் சாராது என்பது முன்னரே கூறப்பட்டது. **உள் ஒளி** - உயிர்க்குயிர் ஆன்மநாயகன்; **இன்றளவும்** - ஆன்மா சிவனடி சேரும் வரை.

### ஆணவம் அனேக சக்தியுடையது

5. பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண்(டு) என்றுங்
கணவர்க்குந் தோன்றாத கற்பு.

பொழிப்புரை: எண்ணில்லாத ஆன்மாக்களைப் பொருந்தி நின்றும், ஆணவமாகிய பெண் தனது தலைவனாகிய ஆன்மாவுக்குத் தன்னைக் காட்டாமல் இருக்கும் நியமம் உண்டு.

பத விளக்கம்: **பலரைப் புணர்ந்தும்** - எண்ணில்லாத ஆன்மாக்களைப் பேதமறப் பொருந்திக் கலந்து நின்றும்; **இருட்பாவைக்கு** - ஆணவமலமாகிய பெண்ணுக்கு; **கணவர்க்கு என்றும் தோன்றாத கற்பு உண்டு** - தனது தலைவனாகிய ஆன்மாவுக்கும் தன்னைக் காட்டாமல் இருக்கும் நிலைமை உண்டு.

ஒவ்வோர் ஆன்மாவுக்கும் ஒவ்வோர் ஆணவம் என்பதும் இல்லை. ஓரே ஆணவம் பல சக்திகளையுடையதாய்ப் பல ஆன்மாக்களைப் பிடித்திருக்கும். அந்த ஆணவத்தைத் தலைவியாகவும், ஆன்மாக்களைத் தலைவர்களாகவும் உருவகஞ் செய்வது இப்பாட்டு. இருட்பாவை என்பது ஆணவ மலத்தையாகும்.

### அறியாமைக்குக் காரணம் ஆணவ மலம்

6. பன்மொழிகள் என்னுணரும் பான்மை தெரியாத
தன்மையிரு ளார்தந் தது.

பொழிப்புரை: ஆன்மா மெய்யுணர்வைப் பெறாமல் மயக்கத்தைப் பெற்றிருக்கும் தன்மையெல்லாம் இந்த ஆணவமல இருளே தந்தது.

பதவுரை விளக்கம்: **பன்மொழிகள் என்** - பற்பல காரணங்களைப் பற்றிப் பேசிப் பயன் என்ன; **உணரும் பான்மை தெரியாத தன்மை** - ஆன்மா மெய்யுணர்வை அறியாமல் நிற்கும் மயக்கம்; **இருளார் தந்தது** - இந்த ஆணவமல இருளே தந்தது. அஃறிணையாகிய இருளை, இருளார் என உயர்திணையாகக் கூறியது. அதன் இழிவு நோக்கி என்க.

### ஆணவம் ஆன்மாவின் குணமன்று

7. இருளின்றேல் துன்பேன் உயிரியல்பேல் போக்கும்
பொருளுண்டேல் ஒன்றாகப் போம்.

பொழிப்புரை: உயிர்கள் அடையும் துன்பத்துக்குக் காரணமான ஆணவம், உயிரின் குணமல்ல. அது உயிரின் குற்றம்.

பத விளக்கம்: **இருள் இன்றேல் துன்பு ஏன்** - ஆணவம் என்ற பொருள் இல்லையாயின் ஆன்மாவுக்குப் பிறவித்துன்பம் எப்படி உண்டாகும்? உண்டாகாது; **உயிர் இயல்பேல்** - இந்த ஆணவம் ஆன்மாவின் குணமாயின்; **போக்கும் பொருள் உண்டேல்** - ஆணவத்தை நீக்குவதற்கு ஒரு பொருள்கிட்டுமாயின்; **ஒன்றாகப்போம்** - ஆணவமலம் நீக்கும்போது உயிரும் உடன் கெடவேண்டும். (ஆனால், ஆன்மா அழியாப்பொருள். எனவே, ஆணவம் ஆன்மாவின் குணம் அல்ல; அது உயிரைப் பற்றியதொரு குற்றமாகும்.)

### ஆணவமலம் அநாதியே உள்ளது

8. ஆசாதி யேலணைவ காரணமென் முத்திநிலை
பேசா தகவும் பிணி.

பொழிப்புரை: இருண்மலப் பிணிப்பு ஆன்மாவுக்கு அநாதி. அது ஆதியாயின் அதற்குக் காரணம் வேண்டும். காரணம் இல்லையேல் முத்திக்காலத்திலும் ஆணவம் ஆன்மாவைப் பிணிக்கும்.

பத விளக்கம்: **ஆசு ஆதியேல்** - ஆணவம் உயிரை இடையில் சேர்த்ததாயின்; **அணைவ காரணம் என்** - அப்படி அது உயிரை இடையில் சேர்வதற்குக் காரணம் என்ன?; **முத்தி நிலை பிணி பேசாது அகவும்** - அன்றியும் ஆணவமலம் முத்தி நிலையிலும் ஆன்மாவைக் காரணமின்றிப் பற்றுதல் கூடும். இருள்மலப் பிணிப்பு அநாதியே இயல்பாய் அமைந்தது என்பதைச் சிவஞானபோதத்திலுள்ள பின்வரும் வெண்பாவால் அறியலாம்.



இலவச விநியோகத்திற்காக

"நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே."

**பேசாது அகவும் பிணி** என்பதைப் **பேசாது கவ்வும் பிணி** எனக் கொண்டு பொருள்கொள்ளல் பொருத்தமாகும் என்பாரும் உளர்.

**மாயை ஆணவத்தை வலிகெடச் செய்யும்**

**9. ஒன்று மிகினும் ஒளிகவரா தேலுள்ளம்
என்றும் அகலா திருள்.**

**பொழிப்புரை:** இறைவன் உயிருக்கு உடம்மை உபகரித்தமை, உயிர் ஆணவ மலத்தினின்றும் நீங்கி முத்தியடைவதற்கேயாம்.

**பத விளக்கம்:** **உள்ளம்** - ஆன்மாவானது; **ஒன்று மிகினும்** - மாயையால் ஆன உடம்பைப் பெற்றபொழுதுதினும்; **ஒளிகவராதேல்** - திருவருளால் மலத்தை நீக்குகின்ற ஞானத்தைப் பெறாதாயின்; **இருள் என்றும் அகலாது** - ஆணவமலம் ஆன்மாவைவிட்டு ஒரு காலமும் நீங்காது.

உயிரின் நிலை மூன்று என முன்னர் அறிந்தோம். அவை கேவலம், சகலம், முத்தி என்பன. கேவலநிலையில் உயிர் ஆணவமலத்தோடு நிற்கும். அந்நிலையில் உள்ள ஆன்மா ஆணவத்தை நீக்குவதற்காகவே இறைவன் மாயாகாரியமாகிய தனு, கரண, புவன, போகங்களை உபகரிதருளினார். இங்ஙனம் இவைகளைப்பெற்று நிற்கும் ஆன்ம நிலையே சகலம், இந்நிலையில் ஆணவத்தை நீக்க, ஆன்மாவானது ஞானத்தைப் பெறுதல் வேண்டும். இல்லையேல் ஆணவத்தை என்றுமே நீக்கிக்கொள்ள இயலாது. மலநீக்கம்பெற்ற ஆன்மாவின் நிலையே முத்திநிலையாகும்.

**மாயை கன்மம் என்பற்றின் இயல்பு**

**10. விடிவாம் அளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து.**

**பொழிப்புரை:** சிவமாகிய சூரியன் உதித்து ஒளி வரும் வரை, இருள்மல இரவிலே கன்மத்தின் விளைவான மாயை உயிர்களுக்கு ஒரு விளக்கு.

**பத விளக்கம்:** **மாயை வடிவாதி** - மாயையினால் கிடைத்த தனு, கரணம், புவனம், போகம் என்பன; **கன்மத்து வந்து** - ஆன்மாக்கள் முன்செய்த புண்ணியம் பாவம் என்பவற்றுக்குத் தகுந்தாற்போலத் தோன்றி; **விடிவாம் அளவும் விளக்கு அனைய** - ஆன்மாவானது, சிவனுடைய ஞானமாகிய ஒளி தோன்றி, ஆணவ இருள் நீங்கும் வரையும் அதனை நீக்க கருவிகளாகி நிற்கின்றன. விளக்கனைய - இருளைச் சிறிதே நீக்கவல்லதாகிய விளக்குகள் போல்வன; தனு -உடம்பு; கரணம் - மெய் (உடம்பு), வாய் முதலிய புறக்கருவிகளும், மனம் முதலாய அகக்கருவிகளும்; புவனம் - வசிக்கும் இவ்வுலகம்; போகம்- நுகரும் பொருள்கள்.

**ஆணவ மலத்தின் இயல்பு**

பாசங்களிற் கொடிய ஆணவமலம் பிறப்பு முதலாய துன்பங்களைத் தருவது, அது உயிரறிவை மறைத்து நின்று உண்மையை உணரவிடாமற் செய்து, திருவருள் மோசம் என்பன இல்லை என்பது. இருள் ஏனைய பொருள்களை மறைத்துத் தன்னையாவது காட்டும். ஆனால், ஆணவம் தன்னையுங் காட்டாமல் நின்று உயிரறிவை மறைக்கும். மெய்ஞ்ஞானத்தையுடைய இறைவனைச் சாராத ஆணவம் உயிரை அநாதியே பொருந்தி நிற்கும். அது காரியநிலையிற் பல சத்திகளையுடையதாய் எல்லா உயிர்களோடுங் கூடியதாய் இருந்தாலும், அதனைத் தனது நாயகர்களான உயிர்களும் காணமுடியாதபடி செய்யும் அளவுக்குக் கற்புடையது. உயிர் அறியுந் தன்மையுடையதாக இருந்தும் அதன் அறிவு விளங்காத வண்ணம் அதன் அறிவை மறைத்து நிற்பது ஆணவமே. ஆணவம் இன்றேல் பிறவித்துயரில்லை. பிறவியுண்டேல் ஆணவம் உண்டு. ஆணவம் உயிரின் குணம் என்றால், திருவருள் ஆணவ சத்தியை அழிக்கும் போது உயிரும் அழிதல் வேண்டும். ஆனால் உயிர் அழியாமையால் ஆணவம் உயிரின் குணமல்ல. அது ஒரு குற்றம். ஆகவே தான் உயிர் அதனை நீக்கக்கூடியதாக இருக்கிறது. ஆணவம் இடையில் வந்ததாகில் அதற்குக் காரணம் இல்லை. அது அநாதியாகவே உயிரோடு உள்ளது ஒளியும் இருளும் ஒரே இடத்தில் இருந்தாலும் ஒன்று மிகும்பொழுது மற்றது இருக்கமாட்டாது. ஒளிமிகுந்தபோது இருள் நீங்குவது போல, திருவருள் உயிரறிவைக் கவரும் போது ஆணவம் நீங்கிவிடும். திருவருள் உயிரில் மிகும்வரை மாயை விளக்குப் போல நின்று உயிரறிவை ஓரளவுக்கு விளக்கத் துணையாகும்.

## நான்காம் அதிகாரம்

### 4. அருளது நிலை

ஆணவத்தின் வலியை அடக்கும் திருவருளின் இயல்பு. திருவருளே, ''தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி'' என முன்னர் கூறப்பட்டது.

#### அருளினது உயர்வு

**1. அருளிற் பெரிய தகிலத்து வேண்டும்**
**பொருளல் தலையிலது போல்.**

**பொழிப்புரை:** ஒருவருக்குத் தாம் விரும்பியதொன்றைவிட மேலான பொருள் இல்லையாதல் போலத் திருவருளினை விட மேலான பொருள் இல்லை.

**பத விளக்கம்:** **அகிலத்து வேண்டும் பொருளில்** - உலகத்தில் ஒருவருக்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகிய ஏதாவது ஒரு பொருளிலும்; **தலை இலது போல்** - மேலானதாய ஒரு பொருள் இல்லை என்னும் தன்மை போல; **அருளின் பெரியது இல்லை** - திருவருளுக்கு மேலானதாய ஒருபொருளும் இல்லை; **வேண்டும் பொருள்** - ஒருவர் என்ன விலை கொடுத்தும் வாங்க விரும்பும் ஏதாவது ஒரு பொருள்.

#### திருவருளின் உபாரகத் தன்மை

**2. பெருக்க நுகரவினை பேரொளியாய் எங்கும்**
**அருக்கனென நிற்கும் அருள்**

**பொழிப்புரை:** சூரியன் உலக மக்களுக்குப் பொருள்களை ஈட்டவும், துய்க்கவும் நிமித்தமாய் நின்றது. அதுபோலத் திருவருள் உயிர்களெல்லாம் புண்ணிய பாவங்களை வளர்க்கவும் அவற்றின் பயனாகிய சுக துக்கங்களை அருந்தவும் காரணமாய் நின்றது. வினை பெருக்குங்கால் புண்ணிய பாவங்கள் எனவும், நுகருங்கால் சுகதுக்கங்கள் எனவும் கொள்ளுதல் பொருத்தமாகும்.

**பத விளக்கம்:** **அருக்கன் என** - சூரியனைப் போல, அருள் - திருவருளானது, வினைபெருக்க - புண்ணிய பாவங்களை வளர்க்கவும், வினைநுகர் - சுக துக்கங்களைத் துய்க்கவும், பேரொளியாய் - ஆன்மாவின் அறிவை விளக்கஞ் செய்யும் மேலான ஒளியாய், எங்கும் நிற்கும் எல்லா ஆன்மாக்களிடத்திலும் நிற்கும்.

#### அருளின்றி ஆன்மா அறிவைப் பெறாது

**3. ஊனறியா தொன்றும் உயிரறியா தொன்றுமிது**
**தானறியா தாரறிவார் தான்.**

**பொழிப்புரை:** அறிவில்லாத உடம்பு என்றுமே அறியாது. ஆணவப் பிணிப்புள்ள ஆன்மா ஒன்றையும் அறியாது. அருள் அறிந்து காட்டிய பின்பே ஆன்மா எதனையும் அறியும்.

**பத விளக்கம்:** **ஊன் என்றும் அறியாது** - உடல் ஒரு காலமும் எதனையும் அறியமாட்டாது; **உயிர் ஒன்றும் அறியாது** - ஆணவப் பிணிப்புள்ள ஆன்மா ஒன்றையும் தானாகவே அறியமாட்டாது; **இதுதான் அறியாது** - இத்திருவருள் அறிந்து அறிவிக்காமல்; **ஆர் அறிவார்** - உலகத்தில் அறிவினைப் பெறுவார் யார்? (ஒரு ஆன்மாவும் இல்லை) **காண்பார் ஆர் கண்ணுதலான் காட்டாக்காலே** என வரும் திருமுறையும் இதனையே கூறும்.

#### ஆன்மா அருளை உணராமை

**4. பாலாழி மீனாளும் பான்மைத் தருளுயிர்கள்**
**மாலாழி யாழும் ,மறித்து.**

**பொழிப்புரை:** திருப்பாற் கடலில் உள்ள மீன்கள் பாலைப் பருகாது, இழிந்த பிராணிகளை வலிந்து தேடி உண்பது போல, ஆன்மாவும் திருவருளில் இருந்தும் அதனையுணராது புலன்வழியே திரியும்.

**பத விளக்கம்:** **அருள் உயிர்கள்** - மேலாய அருளின் வசப்பட்ட ஆன்மாக்கள்; **மால் ஆழி மறித்து ஆழும் பான்மை** - அத்திருவருளை உணராமல் மயக்கமாகிய கடலிலே ஆழ்ந்து அழுந்துந் தன்மை; **பால் ஆழி மீன் ஆளும் பான்மைத்து** - திருப்பாற்கடலில் உள்ள மீன்கள் அப்பாலைப் பருகாது, சிறியதான பிராணிகளை வருந்தித் தேடி உண்ணும் தன்மையைப் போன்றது.



இலவச விநியோகத்திற்காக

### ஆன்மா அருளை அறியாமை

5. அணுகு துணையறியா ஆற்றோனில் ஐந்தின்
உணர்வை உணரா துயிர்.

பொழிப்புரை: ஆன்மாவின் உதவியால் தாம் அறிகின்றன என்பதை அறியாத ஐம்பொறிகள் போல, திருவருள் உணர்த்த, தான் உணர்வதை உயிர் உணர்ந்து கொள்வதில்லை. ஐம்பொறிகள் - மெய்,வாய், கண், மூக்கு, செவி

பத விளக்கம்: **அணுகு துணை அறியா ஆற்றோனில்** - தனக்குச் சமீபத்திலே துணையாக வருபவனை அறியாத வழிப்போக்கனைப் போலவும்; **ஐந்தின்** - தம்முடைய அறிவுக்குத் துணையாக நிற்கும் ஆன்மாவை அறியாத ஐம்பொறிகள் போலவும்; **உயிர் உணர்வை உணராது** - ஆன்மா தனக்குத் துணையாக நிற்கின்ற அருள் ஞானத்தை உணர்வதில்லை.

### அருளே நடத்தி வைப்பது என்பதை அறியாத நிலை

6. தரையை அறியாது தாமே திரிவார்
புரையை உணரா புவி.

பொழிப்புரை: பூமியைத் தமக்கு ஆதாரம் என்று அறியாத வழிப்போக்கர் போல, அருளைத் தமக்கு ஆதாரம் என ஆன்மாக்கள் உணரமாட்டாது.

பத விளக்கம்: தரையை அறியாது தாமே திரிவார் புரையை - நிலம் தமக்கு ஆதாரம் என்பதை அறியாமல் திரிபவரது குற்றத்தைப் போல; புவி - உயிர்கள்; புவி உணரா - திருவருளே தமக்கு ஆதாரம் என்பதை ஆன்மாக்கள் உணரமாட்டாது.

### அருளை இழந்தோரின் இழிவு

7. மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்தோர் ஞானந்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம்.

பொழிப்புரை: திருவருளைத் தேடின் அது எளிதிற் கிடைக்கும். அதனை அறியாதிருப்பவன் மலை, நிலம், ஆகாயம் என்பவற்றைத் தேடும் அறிவிலி போலாவான்.

பத விளக்கம்: **மலை கெடுத்தோர்** - மலையிலே நின்று மலையைத் தேடுபவரும்; **மண் கெடுத்தோர்** - நிலத்திலே நின்று நிலத்தைத் தேடுபவரும்; **வான் கெடுத்தோர்** - ஆகாயத்தைத் தேடுவோரும்; **ஞானந் தலை கெடுத்தோர்** - திருவருளிலே தங்கி நின்று அதைத்தேடுபவரும்; **தற்கேடர்தாம்** - தம்மைத் தாமே தேடும் அறிவில்லாதவர் ஆவார். **கெடுதல்** - இழத்தல்; **கெடுத்தோர்** - தேடுவோர்; **தற்கேடர்** - தம்மைத் தெரியாத ஆன்மாக்கள், மலை நிலம், ஆகாயம், தான் என்பவற்றைத் தேடுவோர் உலகில் இல்லை. இருப்பார்களே ஆனால், அவரைப் போல்பவரே அருளினை இழந்த பேதையர்.

### அருளை அறியாமை ஆன்மாவின் குறையே

8. வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்திருளாம்
கள்ளத் திறைவர் கடன்.

பொழிப்புரை: திருவருள் வெள்ளம்போலக் கரை புரண்டோடி நிற்கவும், அதனை நுகராமை உயிரின் குற்றமே. எங்கும் நல்ல நீர் நிறைந்திருக்கவும் அதனைப் பருகாது நா வரண்டு நிற்பவனும், எங்கும் இருளகன்ற பின்னும் கண்ணை விழித்துப் பாராதவனும் தங்குற்றம் உடையவர்களாவர்.

பத விளக்கம்: **கள்ளத்து இறைவர் கடன்** - அருளை அனுபவியாது பொய்யான வழியிலே தலைமை தாங்கி நிற்கும் ஆன்மாக்களுடைய தன்மை; **வெள்ளத்துள் நாவற்றி** - நிறைந்த நல்ல நீரிலே நின்றும், அதனைப் பருகாது நா வரண்டும்; **எங்கும் விடிந்தும் இருளாம்** - எவ்விடத்தும் இருள் நீக்கி விடிந்திருக்கவும் ஒளியைக் காணாது தடுமாறுந் தன்மை போலாகும்; **கள்ளத் தலைவர்** - வஞ்சகத் தலைவர், யான், எனது என்னும் அகங்காரம் மமகாரத்தோடு தலைமை வகிப்பர்.

### அருளை அறியும் முறைமை

9. பரப்பமைந்து கேண்மினிது பாற்கலன்மேற் பூனை
கரப்பருந்த நாடுங் கடன்.

பொழிப்புரை: பூனை பாலைப் பருகாது கரப்பான் பூச்சியைப் பிடிக்கத் தாவியதால் பாற்குடம் விழுந்து உடைவதோடு, பூச்சியும் அகப்படாது போய் பூனை வருந்துவது போல, நல்ல ஞானத்தை மன அமைதியோடு கேளாது, புலன்வழி மனத்தை விட்டு மக்கள் கெடுவர்.


இலவச விநியோகத்திற்காக

**பத விளக்கம்:** **இது பரப்பு அமைந்து இனிது கேண்மின்** - இந்த ஞானம் எனப்படும் அருளின் பெருமையைப் பரபரப்பில்லாது. மன அமைதியோடு மனங் கொள்வீராக; (அப்படிக் கொள்ளாவிட்டால்) **இது பாற்கலன் மேல் பூனை** - உறியில் உள்ள பாற்குடத்தின் மேல் உள்ள பூனையானது; **கரப்பருந்த நாடுங் கடன்** - கூரையில் ஊர்ந்து திரியும் கரப்பான் பூச்சியைத் தின்பதற்காகத் தாவியோடும் முறைமையினை ஒக்கும்.

### திருவருளை அறியாமை சிறுமை

**10. இற்றைவரை இயைந்தும் ஏதும் பழக்கம் இல்லா**
**வெற்றுயிர்க்கு வீடு மிகை.**

**பொழிப்புரை:** அநாதியே தொடங்கித் திருவருளோடு கலந்து நின்றும் ஆன்மாவானது அத்திருவருளை உணராது இன்றுவரை இருந்ததால் அதற்கு மேலாகிய வீட்டின்பம் பொருத்தமற்றது.

**பத விளக்கம்:** இற்றைவரை இயைந்தும் - அநாதியே தொடங்கி இன்றளவும் திருவருளோடு கலந்து நின்று; ஏதும் பழக்கம் இல்லா - அத்திருவருளைச் சிறிதேனும் உணரமாட்டாத; வெறும் உயிர்க்கு வீடு மிகை - பயன் கொள்ளாத ஆன்மாவுக்கு வீட்டின்பம் தகாது.

#### திருவருளின் தன்மை

ஒருவனுக்கு விருப்பமான பொருளிலும் மேலான பொருள் உலகில் இல்லாதமை போலத் திருவருளிலும் உயர்வான ஒரு பொருளும் இல்லை. திருவருள் என்பது சிவபெருமானின் பெருங்கருணை. அது சூரிய ஒளிபோல் எங்கும் வியாபித்து நின்று உயிர்கள் வினைகளைப் பெருக்கவும் அவற்றை நுகரவும் துணையாய் உள்ளது. என்றுமே எதனையும் அறியாதது உடல், உயிர் அறிவித்தால் அறியுமே அன்றித் தானாக எதனையுமறியாது. ஆகவே, உயிருக்குத் திருவருளே விளக்கச் செய்வது திருப்பாற் கடலிலுள்ள மீன்கள் பாலைப் பருகாது இழிந்த பிராணிகளைத் தேடுதல் போல் திருவருட் கடலில் உள்ள உயிர்கள் சிவபோகத்தை நுகராமல் உலக போகத்தில் அழுந்துகின்றன. தனக்குத் துணையாகச் செல்கின்ற ஒருவனையறியாத வழிப்போக்கனைப் போலவும், உயிரின் ஆதாரத்தை உணராத ஐம்பொறிகளைப் போலவும், திருவருளின் துணையறியாது உயிர் உள்ளது. தமக்கு ஆதாரமான மலை, மண், ஆகாயம் என்பவற்றை அறியாது தமக்குத் தாமே ஆதாரம் என்னும் அறிவிலிகள் போலத் திருவருளின் ஆதாரத்தை அறியாது இருக்கிறார்கள். நல்ல நீர்ப்பெருக்குக்குள்ளே இருந்து கொண்டும் நா வரட்சி யோடிருப்பதைப் போலவும் அருள் ஒளியில் இருந்தும் இறைவனைக் காணாது வஞ்சக மனத்தோடு உயிர்கள் உள்ளன. உயிராகிய பூனை பருகுதற்குரிய பால் திருவருளேயாம். திருவருள் பாவிக்கப் பெறாதவர்களுக்கு மோட்சம் இல்லை.

## ஐந்தாம் அதிகாரம்

## 5. அருளுரு நிலை

திருவருள் வெளிப்பட்டுப் பிரகாசிக்கின்ற அருள் வடிவம் ஆகிய குருவின் இயல்பு, ஞானமே வடிவாகிய குருவின் தன்மை ஞானம் என்பது பதி ஞானத்தை. அது மேலான சிவஞானமாகும். இப்பதிஞானம் ஞானசாரியர் என்னும் அருட்குருவினால் ஆன்மாவுக்கு விளைவிக்கப்படுவதாகும். அருவமாய் இருந்த திருவருள் இப்போது ஆன்மாவின் பரிபக்குவ நிலை கண்டு குருவாகிய உருவம் தாங்கி வந்து முத்திசாதனம் செய்வதைக் கூறுவது.

### அருளே குருவடிவாய் வருவது

**1. அறியாமை உண்ணின் றளித்ததே காணுங்**
**குறியாகி நீங்காத கோ.**

**பொழிப்புரை:** இதுவரையும் ஆன்மாவின் பந்த நிலையில் மறைந்து நின்று உபகரித்த திருவருளே ஆன்மாவின் பக்குவ நிலையில் குருவடிவாக எழுந்தருளிவந்து அருள் செய்கின்றது.

**பத விளக்கம்:** **காணுங் குறியாகி** - காணக் கூடியதாய குரு வடிவத்தை எடுத்து; **நீங்காத கோ** - உடனாய் நின்று ஆட்கொண்டருளும் திருவருள், **அறியாமை உள்நின்று அளித்ததே** - இதுவரையும் தோன்றாத் துணையாய்க் கலந்து நின்று, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் ஆகிய தொழில்களைச் செய்து காத்து வந்ததாம். அதுவே இப்பொழுது எஞ்சியதாய அருளலைச் செய்ய எழுந்தருளியுள்ளது.



இலவச விநியோகத்திற்காக

திருவருள் உள் நின்றுணர்த்தல், மான் மழு முதலாய தாங்கி நேரே அருள்செய்தல், குரு வடிவந்தாங்கி அருள்செய்தல் என மூவகை ஆன்ம பக்குவ விசேடம் நோக்கி குரு - பாசத்தை நீக்குபவர்.

**அருளே ஆணவ மலத்தைப் போக்கவல்லது**

2. அகத்துறு நோய்க்(கு) உள்ளினர் அன்றி அதனைச்
சகத்தவரும் காண்பரோ தான்.

பொழிப்புரை: வீட்டில் ஒருவருக்கு உள்ள நோயினை அவருடன் அங்கு உள்ளவர் அறிவர். அல்லாமல் உலகத்தில் உள்ள பிறர் அறிவார்களோ? (அறியமாட்டார்கள்). அது போல ஆன்மாவுக்குள்ள ஆணவ நோயை ஆன்மாவோடுள்ள திருவருளே அறியும். அருளே அந்த நோயை நீக்கும்.

பத விளக்கம்: **அகத்துறு நோய்க்கு** - வீட்டில் ஒருவருக்கு வந்த நோயை; **உள்ளினர் அன்றி** - அந்த வீட்டிலே உள்ளவர்கள் அறிவார்களே அல்லாமல்; **அதனை** - அந்த நோயை; **சகத்தவரும் காண்பரோ** - உலகத்தில் உள்ள பிறரெல்லாரும் அறிவார்களோ?

**ஒருவரின் ஞானகுருவைப் பிறர் அறியார்**

3. அருளா வகையால் அருள்புரிய வந்த
பொருளார் அறிவார் புவி.

பொழிப்புரை: அருளைக் கொடுக்கவந்த ஞானாசாரியரை, பக்குவம் வாய்ந்த அந்தச்சீடனைத் தவிரப் பிறர் அறியமாட்டார்.

பத விளக்கம்: **அருளா வகையால்** - படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் ஆகிய ஐந்தொழில்களை மறைந்து நின்று செய்தமை போல; **அருள்புரிய வந்தபொருள்** - அருளல் ஆகிய ஐந்தாவது தொழிலைச் செய்யவந்த குருவடிவத்தை; **புவியறிவார் ஆர்** - பூமியில் அறியத்தக்கவர் வேறு யார். (ஒருவருமில்லை)

**அருளை அறியாமைக்குக் காரணம் அறியாமையே**

4. பொய்யிருண்ட சிந்தைப் பொறியிலார் போதமா(ம்)
மெய்யிரண்டும் காணார் மிக.

பொழிப்புரை: திருவருள், அருளுருவான குருநாதர் என்னும் மெய்ப்பொருள் இரண்டின் திறத்தை அஞ்ஞானம் மிகுந்த உள்ளத்தினை உடையவர் தெளிவாக அறியமாட்டார்.

பத விளக்கம் : **பொய் இருண்ட சிந்தையார்** - நிலையில்லாத உலக இன்பத்திலே பற்றுடையவராய் ஆணவ மலத்தால் மறைத்த உணர்வினையும் உடையவராய்; **பொறியிலார்** - ஞானம் என்னும் செல்வத்தைப் பெறாதவர்; **போதமாம் மெய் இரண்டும்** - அறிவு மயமான (ஞானத்தின் திருவுருவான) அருளையும், அருளுருவான குருநாதர் என்னும் மெய்ப்பொருள் வடிவத்தையும் (ஆகிய உண்மைபொருள் இரண்டையும்), **மிகக் காணார்** - சிறிதேனும் அறியமாட்டார்.

**திருவருள் குருவாய் வருதலின் நோக்கம்**

5. பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணார் புவி.

பொழிப்புரை: பார்வை எனும் பழக்கப்பட்ட மிருகத்தைக் காட்டி, அவ்வினத்தைச் சேர்ந்த மிருகங்களைப் பிடிப்பவர் போல, ஆன்மாக்களை வயப்படுத்தத் திருவருள் குருவடிவாகிய போர்வையில் வந்தது என்பதைப் பக்குவமில்லாதவர் அறியமாட்டார்.

பத விளக்கம்: **பார்வை என** - பழக்கப்பட்ட அவ்வவ்வினத்து மிருகத்தின் துணைக்கொண்டு விலங்குகளைப் பிடித்தல் போல; **மாக்களை முன்பற்றிப் பிடித்தற்கு ஆம்** - நேர் நின்று மனிதரைத் தன் வயப்படுத்தி ஆட்கொள்ளும் பொருட்டாம் (மனித வடிவில் குருவடிவாகத் திருவருள் வருவது என்பதை); **புவி** - பக்குவமில்லாதவர்; **போர்வை எனக் காணார்** - அதைத் திருவருளானது போர்த்துக் கொண்டு வந்த குருவடிவம் என்பதை அறியமாட்டார்;

**பார்வை** - அவ்வவ்வினத்து மிருகம், பறவை என்பனவற்றைப் பிடித்தற்கு உறுதியாகப் பழக்கப்பட்ட மிருகம் அல்லது பறவை, மானைக்காட்டி மானைப் பிடித்தல் போலக்கொள்க.

**ஆட்கொள்ளுதல்** - பாசத்தை நீக்கி ஞானத்தைக் கொடுப்பது.

**குருவின்றி எப்பொருளும் அறியப்படா**

6. எமக்கென் எவனுக் கெவைதெரியும் அவ்வத்
தமக்கவனை வேண்டத் தவிர்.



இலவச விநியோகத்திற்காக

பொழிப்புரை: அருட்குரு இன்றி ஞானத்தை உள்ளபடி அறிந்துகொள்ள முடியாதாகையால், குருவின் உபயோகம் என்ன என்று கேட்பதை விட்டுவிடுவாயாக.

பத விளக்கம்: **எமக்கு என்** - குருவினால் எமக்கு வரும் பயன் என்ன எனில்; **எவனுக்கு எவை என் தெரியும்** - எவன் ஒருவனுக்கு சில நூற்பொருள் உள்ளபடி மலைவின்றித் தெரியுமோ; **அவ்வத் தமக்கு அவனை வேண்ட** - அந்த நூற்பொருள் விளங்க அவனைத் தமக்குக் குருவாக வேண்டி நிற்றலான்; **தவிர** - எமக்கு என் என்னும் கேள்வியை விட்டுவிடுவாயாக.

### நயன தீட்சை

7. விடநகுல மேவினுமெய்ப் பாவகனின் மீளும்
   கடனிலிருள் போவதிவன் கண்.

பொழிப்புரை: விடந் தீண்டப்பட்டவன் மேல் கீரி தாமே வந்து புரண்டாலும் அந்த விடம் நீங்காது. ஆனால், அந்தக் கீரியாகத் தன்னை பாவித்து விடமுற்றவனை ஒருமுறை மாந்திரிகன் நோக்க விடம் நீங்கிவிடுகிறது. அதுபோலவே, திருவருள் நேரே நின்றும் மலங்களைப் போக்காது. ஆனால், குருவானவர் பாவனையால் மலத்தை நீக்கிவிடுகின்றார்.

பத விளக்கம்: **விடம்** - ஒருவனை விடத் தீண்டினால் அந்த விடமானது; **நகுலம் மேவினும்** - கீரியைக் கொண்டு வந்து தடவினாலும் (அந்த விடம் நீங்காது); **பாவகனின் மீளும்** - ஆனால், கீரியாகத் தன்மை பாவனை செய்யும் மாந்திரிகனால் நீங்கும்; **கடனில்** - இந்த முறைமை போலவே; **இருள் போவது இவன்கண்** - மல இருள் உனக்கு நீங்குவது இக்குருவுடைய திருநோக்கினால் என்று அறிவாயாக.

### மூவகை ஆன்மாக்களுக்கும் அருளும் முறை

8. அகலத் தருமருளை யாக்கும் வினைநீக்கும்
   சகலர்க்கு வந்தருளும் தான்.

பொழிப்புரை: ஆணவம் மாத்திரமுள்ள விஞ்ஞானகலருக்கு உள் நின்று உணர்த்தியும், ஆணவம், கன்மம் என்னும் இரண்டு மலமுள்ள பிரளயாகலருக்கு நிராதரமாய் நின்று அருளை விளக்கியும், சகலராய மும்மலமுடையாருக்குக் குருவாய் எழுந்தருளித் தீட்சை வழங்கியும் அருள் செய்வார்.

பத விளக்கம்: **தான் வந்து சகலர்க்கும் அருளும்** - மூன்று மலங்களுக்குமுள்ள சகலருள் பக்குவான்மாக்களுக்குக் குரு வடிவாய் எழுந்தருளி வந்து மும்மலங்களையும் நீக்கியருளுவார்; **வினை நீக்கும்** - பிரளயாகலர் என்னும் இருமலமுடையாருக்கு முன்னிலையாய் எழுந்தருளி ஆணவம், கன்மம் என்பவற்றை நீக்கியருளுவார்; **அகலத்து அரும் அருளை ஆக்கும்** - விஞ்ஞானகலர் என்னும் ஆணவ மலம் ஒன்றுடையாருக்கு அவர் தம் அறிவிலே நின்று அருள் செய்து மலத்தை நீக்குவர்.

### இறைவனே குருவாய் வருவார்

9. ஆரறிவார் எல்லாம் அகன்ற நெறியருளும்
   பேரறிவான் வாராத பின்.

பொழிப்புரை: அத்துவாக்களை கடந்த வீட்டுநெறியினை அருளிச் செய்யும் தத்துவங்கடந்த இறைவன் குருவடிவாக வராவிட்டால் அறியவல்லவர் இல்லை.

பத விளக்கம்: **எல்லாம் அகன்ற நெறியருளும்** - மந்திரம், வர்ணம், பதம், தத்துவம், புவனம்., கலை ஆகிய ஆறு அத்துவாக்களைக் கடந்த மோட்ச நெறியை அருளுதலைச் செய்யும்; **எல்லாம் அகன்ற பேரறிவான்** - தத்துவங் கடந்த முற்றறிவினராகிய சிவபெருமான்; **வாராத பின்** - குரு மூர்த்தங் கொண்டு வராவிட்டால்; **அறிவார் ஆர்** - அதை அறிய வல்லவர் யாவர்; **அத்துவா** - வழி; **தத்துவம்** - உள்பொருள்.

### குருவே ஞானம் கொடுப்பவர்

10. ஞானம் இவனொழிய நண்ணியிடும் நற்கலனல்
    பானு ஒழியப் படின்.

பொழிப்புரை: சூரியகாந்தக்கல்லில் நெருப்புத் தோன்றிப் பஞ்சை எரிப்பதைப் பார்த்திருக்கிறோம். ஆனால், சூரிய ஒளி இல்லையெனில் அந்த சூரியகாந்தக்கல்லில் நெருப்புத் தோன்றாது. அதுபோலவே, அருள் வடிவினரான குரு இல்லாவிட்டால் ஆன்மாவிடம் ஞானம் தோன்றி மலத்தை எரிக்கமாட்டாது.

பத விளக்கம்: **பானு ஒழிய** - சூரிய ஒளி இல்லாமலே; **நற்கல் அனல்படின்**- குற்றமில்லாத சூரியகாந்தக்கல்லிலே நெருப்புத் தோன்றுமாயின்; **இவன் ஒழிய** - அருள் வடிவாகிய குரு அன்றி; **ஞானம் நண்ணியிடும்** - ஒருவருக்கு ஞானம் உண்டாதல் கூடும்.



இலவச விநியோகத்திற்காக

## குருவினது இயல்பு

குரு என்றால் பாசத்தை நீக்குபவர் என்று பொருள். ஆன்மாவின் பந்த நிலையிலே தோன்றாத் துணையாய் உள் நின்று நடத்தும் அருளே ஆன்மாவின் பக்குவ நிலையிலும் முத்தி நிலையிலும் உதவுவது. அருளே குருவாக வருவது. அருளுக்கே எமது மலநோய் நன்கு விளங்கும். அருளே குருவடிவாக எழுந்தருளுவதைப் பக்குவமில்லாத ஆன்மாக்கள் அறிவதில்லை. அதற்குக் காரணம் ஆணவம், அறியாமை என்பவையாகும். ஆனால், ஆணவம் வலிகுன்றிய பின்னர் ஆன்மாக்கள் திருவருளே குரு அருளாவதை அறிந்துகொள்வர். காட்டு மிருகங்களைப் பிடிக்கும் மக்கள் அம்மிருகங்களின் இனத்தில் பழக்கப்பட்ட மிருகங்களைக் கொண்டு அவைகளைப் பிடித்தல் போல, இறைவனும் எமக்குப் பழக்கமான மானிட வேடந் தாங்கிக் குருவடிவாக எழுந்தருளுவார். இறைவன் ஆன்மாக்கள் மேல் வைத்த பெருங் கருணையினாலேயே இவ்வாறு அருளிச் செய்கிறார். குருவின் அருளாளலன்றி, ஞான நூல்களை ஐயந்திரிபற அறிந்துகொள்ள இயலாது. அஞ்ஞானத்தை நீக்கும் குரு, மெய் ஞானத்தைக் கொடுத்தருளுவார். மூவகை ஆன்மாக்களுக்கும் பேரருள் செய்யும் இறைவன் விஞ்ஞானகலருக்கு அவர் அறிவில் உள் நின்றுணர்த்தியும் பிரளயாகலருக்கு முன்னிலையில் எழுந்தருளியும், சகலருக்குக் குருவடிவாக வந்தருளியும் ஆட்கொள்வார். பாம்பின் விடம் கீரியைத் தொடுவதால் நீங்காது. ஆனால், மாந்திரிகன் தன்னைக் கீரியாக நினைத்துப் பார்த்த அளவில் விடம் இறங்கும். அவ்வாறே, மலம் நமது அறிவால் நீங்காது. குருவருளால் நீங்கும். சூரியகாந்தக்கல்லில் சூரிய ஒளி பட்டுப் பஞ்சை எரிப்பது போல, குருநாதர் முன் மல இருள் நீங்கும். அவர் அருள் இன்றேல் வீடுபேறு இல்லை.

01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. பதிமுது நிலை என்பதன் பொருள் யாது?
2. ஆன்மா சதசத்து எனக் கூறப்படுவதேன்?
3. உயிரவை நிலை என்பதன் பொருள் யாது?
4. ஆணவம், இருள்மலம் எனக் கூறப்படுவதற்கான காரணம் யாது?
5. திருவருளின் இயல்பு யாது.
6. குருவின் இயல்புகள் யாவை.

## செயற்பாடு

1. திருவருட்பயனின் ஒவ்வொரு அதிகாரத்தின் தொகுப்பையும் எழுதிக் காட்சிப்படுத்துக.
2. திருவருட்பயனில் உள்ள ஒவ்வொரு அதிகாரத்துடன் தொடர்புபடுத்தி, முப்பொருள் என்ற பாடத்தைக் கற்று அதனை அட்டவணைப்படுத்தி காட்சிப்படுத்துக.

## பாடச்சுருக்கம்

- சைவ சித்தாந்த சாத்திர நூற்றொகுதியிலுள்ள பதினான்கு நூல்களில் உமாபதி சிவாசாரியார் இயற்றிய சித்தாந்த அட்டகம் என்னும் தனித் தொகுதியும் அடங்கும்.
- சித்தாந்த அட்டகத்தில் உள்ள திவருட்பயன் சித்தாந்தக் கருத்துக்களை எளிமையாகவும் அருமையாகவும் எடுத்துரைப்பது. இந்நூல் சிவஞானபோதத்துக்குச் சார்பு நூலாவும் உள்ளது.
- இந்நூல், திருவருளைப் பற்றியும் அதனது பயனைப் பற்றியும் விளக்கமாகக கூறுவதனால், திருவருட்பயன் என்னும் பெயர் பெற்றது.
- திருவருட்பயன் பத்து அதிகாரங்களைக் கொண்டது. ஒவ்வொரு அதிகாரமும் பத்துக் குறள் வெண்பாக்களை உடையது.
- திருவருட்பயனிலுள்ள முதல் ஐந்து அதிகாரங்களும் முறையே, பதியின் தன்மை, உயிரின் தன்மை, மலத்தின் தன்மை, திருவருளின் தன்மை, குருவின் தன்மை என்பவற்றைக் குறிப்பிடுகின்றன.



இலவச விநியோகத்திற்காக

# 21 குரு லிங்க சங்கம வழிபாடு

சைவ நெறி, ஆன்ம விடுதலைக்கான பல மார்க்கங்களைக் குறிப்பிடுகின்றது. அவற்றுள் குரு, லிங்க, சங்கம வழிபாடும் அடங்கும். குரு, லிங்க, சங்கமங்களை வழிபடுதல், போஷித்தல், மதிப்பளித்தல் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு இறைவன் அடியாரது வழிபாட்டை ஏற்று அருள் தந்தருள்வார். எனவே, நாம் குரு, சிவனடியார் முதலியோருக்குச் செய்யும் சேவையும், அளிக்கும் மதிப்பும் இறைவழிபாடு சார்ந்தவை என்பதையே இவ்வழிபாடு குறிப்பிடுகின்றது.

## 1. குரு வழிபாடு

சைவ சமய சாத்திரங்களைப் போதிப்பவர், சமயாசாரக் கிரியைகளைச் செய்பவர், ஆன்மீகத் துறையில் சந்தேகங்களைப் போக்கி நல்வழிப்படுத்தும் வழிகாட்டியாக விளங்குபவர் குரு ஆவார். குருவை மனிதரெனக் கருதாது, சிவன் எனவே கருதுதல் வேண்டும். குரு என்றால் அஞ்ஞானத்தைப் போக்குபவர் அல்லது பாசத்தை நீக்குபவர் என்பது பொருள்.

சிவபெருமான் எமது பிறவித்துன்பத்தை நீக்கவே, குருவாக எழுந்தருளுகின்றார். இதனைத் திருவருட் பயன் பாடல் தெளிவாக விளக்குகின்றது.

"பார்வைஎன மாக்களைமுன் பற்றிப்பிடித்தற்காம்
போர்வை எனக்காணார் புவி"

பழக்கப்பட்ட மிருகத்தின் உதவியுடன் அதே இனத்து மிருகத்தைப் பிடிப்பர். அதே போலச் சிவன் எம்மை ஆட்கொள்ள, மானிடத் திருமேனி தாங்கி வருகின்றார். சற்குருவானவர் இது நன்னெறி இது தீயநெறி என்று உணர்த்துபவர். எனவே, அவரை சிவன் எனக் கருதி மனம், வாக்கு, காயம் எனும் மூன்றினாலும் வழிபடல் வேண்டும். சகலர் குருவை வழிபடல் மேலானதாகும். திருமூலர், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், அப்பூதியடிகள் முதலியோர் குரு வழிபாட்டால் வீடுபேறு அடைந்தோராவர். குருவை உள்ளன்போடு வழிபடுவதுடன் சமயகுரவர், சந்தானகுரவர் முதலியோரது குருபூசைத் தினங்களைக் கொண்டாடுதலும் அவசியமாகும்.

## 2. லிங்க வழிபாடு

ஆன்மாக்களும் உலகமும் ஒடுங்குவதற்கும் தோன்றுவதற்கும் இடமாயுள்ளது லிங்கம் ஆகும். லி - ஒடுங்குதல், கம் - தோன்றுதல் எனவும் பொருள்படும். திருக்கோயில்களுள் காணப்படும் விக்கிரகங்களுள் சிவலிங்கமே முதன்மையானது. சிவலிங்கத்தின் அடிப்பாகத்தில் உடுக்குப் போன்ற பீடத்திற்கு ஆவுடையார் என்று பெயர். அதன் மேற்பாகத்தில் உருண்டு நீண்ட முனையற்ற தண்டு ஒன்று உண்டு. அதற்குப் பாணம் அல்லது லிங்கம் என்று பெயர்.

சிவலிங்கம் பரார்த்தலிங்கம், இட்ட லிங்கம் என இரு வகைப்படும். பரார்த்த லிங்கம், தாவரலிங்கம் எனவும் அழைக்கப்படும். இது சுயம்புலிங்கம், காணலிங்கம், தைவிகலிங்கம், ஆரிடலிங்கம், மானுடலிங்கம் என ஐந்து வகைப்படும்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நான்கு மார்க்கத்திலுள்ளவர்களும் சிவலிங்கத்தை அவரவர் பக்குவத்திற்கு ஏற்ப வழிபடுவர். நாயன்மாருள் சேரமான் பெருமாள், சாக்கிய நாயனார், கலிக்காமர், பூசலார் முதலானோர் இலிங்க வழிபாடு செய்து வீடுபேறு அடைந்தவர்களில் சிலராவர்.

## 3. சங்கம வழிபாடு

**சிவனடியார் திருக்கூட்டம் சங்கமம்** எனப்படும். சிவபெருமானிடம் மெய்யன்பு பூண்டொழுகுவோர் சிவனடியார் ஆவர். அவர்கள், சிவபெருமானை நினைத்தலிலும், அவரைப் பற்றிக் கேட்டலிலும், திருத்தொண்டு புரிவதிலும், அவரது புகழ்பாடுவதிலும், திருவைந்தெழுத்தை ஓதுவதிலும் இன்புறுவர். *அடியார்க்குரிய* பாவனை, செயல், வேடம் இவற்றையுடைய எவரும் சிவமாகக் கருதி வழிபடுவதற்குரியவராவர்.



இலவச விநியோகத்திற்காக

### சங்கம வழிபாட்டின் சிறப்பு

"அடியார் நடுவுளிருக்கும் அருளைப் புரியாய்" என்று மணிவாசகப் பெருமான் வேண்டுகின்றார் "ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனுங் கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே" என்கிறார் அப்பர் பெருமான். சிவனடியார் வழிபாடு எமது உள்ளத்திலுள்ள கீழ்த்தர எண்ணங்களை அகற்றி உயர்ந்த எண்ணங்களை உண்டாக்குகின்றது. உலகப்பற்றை நீக்கி, தெய்வப்பற்றை வளர்க்கின்றது. சிவனடியார்களுக்குச் செய்யும் திருத்தொண்டும் வழிபாடும் உள்ளத்தை விரைவில் தூய்மைப்படுத்தி, பக்தியையும் வைராக்கியத்தையும் வளர்க்க உதவுகின்றன.

நாயன்மாருள் திருநீலகண்டர், இயற்பகையார், சிறுத்தொண்டர், இளையான்குடிமாறனார் முதலியோர் சிவனடியார்களை வழிபட்டு வீடுபேறு பெற்றவர்களாவர்.

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. குரு என்பதன் பொருள் யாது?
2. சிவபெருமான் குருவாக எழுந்தருளுவதன் காரணம் யாது?
3. லிங்கம் என்பதன் பொருள் யாது?
4. சிவனடியார் திருக்கூட்டம் எப்பெயரால் அழைக்கப்படும்?

### செயற்பாடு

1. குரு, லிங்க, சங்கம வழிபாடுகளினால் முத்தி அடைந்த நாயன்மாரகளின் பெயர்களை அட்டவணைப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- குரு என்பவர் அஞ்ஞானத்தைப் போக்குபவர் அல்லது பாசத்தை நீக்குபவர் ஆவார்.
- சிவபெருமான் எமது பிறவித்துன்பத்தை நீக்கவே, குருவாக எழுந்தருளுகின்றார்.
- ஆன்மாக்களும் உலகமும் ஒடுங்குவதற்கும் தோன்றுவதற்கும் இடமாயுள்ளது லிங்கம் ஆகும்.
- சிவனடியார் திருக்கூட்டம் சங்கமம் எனப்படும்.


இலவச விநியோகத்திற்காக

# 22 நாட்டார் சமய வழிபாடு

எமது சமய வழிபாட்டு முறையினை இருவகையாகப் பாகுபடுத்தலாம். ஆகம நெறிக்குட்பட்ட கோயில்கள், விழாக்கள், சடங்குகள் முதலானவற்றைப் பேணுவது ஒருவகை. அவற்றுக்கு உட்படாது, பேணப்பட்டு வருகின்ற சமய ஒழுகலாறுகள் மற்றொரு வகையாகும். அவற்றுள் முதற் குறிப்பிட்டவற்றைப் "பெருநெறி" என்றும் பின்னையதைச் 'சிறு நெறி' என்றும் குறிப்பிடுவர். அந்தச் சிறுநெறியே கிராமிய தெய்வ வழிபாடு எனப்படுகின்றது. கிராமத்துப் பாரம்பரியங்களின் குறிகாட்டிகளாக், பாரம்பரியமாக நிலவி வரும் தெய்வங்கள், சடங்கு முறைகள், நம்பிக்கைகள், அவை சார்ந்த கலைகள் என்பவற்றை யதார்த்தமாக எடுத்துக் கூறுவதை, **'நாட்டார் சமயம்'** எனக் கொள்ளலாம்.

## (அ) நாட்டார் தெய்வங்கள்

நாட்டார் தெய்வங்களின் அம்மன், காளி, மாரி, பேச்சி முதலான பெண் தெய்வங்களும், வைரவர், ஐயனார், வதனமார், அண்ணமார், பெரியதம்பிரான், மதுரைவீரன் முதலான ஆண் தெய்வங்களும் வழிபடு தெய்வங்களாக உள்ளன.

நாட்டார் தெய்வங்களுக்கான ஆலயங்கள் அளவில் சிறியனவாக அல்லது மரநிழல், ஆற்றங்கரை, குளத்தங்கரை, மலையடிவாரம் முதலான இயற்கைச் சூழலில் அமைந்துள்ளன. இத்தெய்வங்களுக்குச் சடங்கு நடத்துபவர் **பூசாரி** என்று அழைக்கப்படுபவரார். நாட்டார் வழிபாட்டில் அம்மன், வைரவர் வழிபாடு பற்றியும் அவற்றுக்கு உரிய வழிபாட்டு முறைகள் பற்றியும் இங்கு கற்போம்.

## (ஆ) அம்மன் வழிபாடு

பெண் தெய்வ வழிபாட்டுடன் தொடர்புடைய அம்மன் வழிபாடு இலங்கையில் மிகப் பழங்காலந் தொட்டு நிலவி வருகின்றது. உலகத்தின் தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் சிவனுக்குத் துணையாக நின்று செயற்படுவதால் அம்மன் வழிபாடு முக்கியத்துவம் பெறுகின்றது. அம்மன் கண்ணகி அம்மன், பத்தினி அம்மன், மாரியம்மன், காளியம்மன், பேச்சியம்மன், கடல்நாச்சியம்மன், திரௌபதி முதலான பல நாமங்களால் போற்றப்படுகின்றாள்.

அம்மன் வழிபாடனாது பல்வேறு நோக்கங்களுக்காக வழிபடப் பெறுகின்றது. நோய்கள் வராதிருப்பதற்காகவும் காவல் தெய்வமாகவும் அம்மன் வணங்கப்படுகின்றாள். இயற்கை அழிவுகளில் இருந்தும் நோய்கள் துன்பங்களில் இருந்தும் மக்களை அம்மன் காப்பாற்றுவாள் என்னும் நம்பிக்கை கிராமிய மக்களிடம் காணப்படுகின்றது.

அம்மன் வழிபாடு யாழ்ப்பாணம், வன்னி, மட்டக்களப்பு, திருகோணமலை, சிலாபம், மலையகம் போன்ற இடங்களில் அதிகமாகக் காணப்படுகின்றது. அம்மன் ஆலயங்களில் நடைபெறும் திருவிழா, **சடங்கு** என அழைக்கப்படும். வன்னிப் பிரதேசத்தில் அம்மன் வழிபாட்டு முறைகள் பஞ்சாங்கம் பார்த்தல், பாக்குத்தெண்டல், ஊர்காவல் பண்ணுதல், கும்பம் வைத்தல், மடைப்பண்டமெடுத்தல், தடைவெட்டல், பரிகலம் அழைத்தல், வளர்ந்து நேருதல், பொங்கல், குளிர்த்தி பாடல், பரிகலம் வழிவிடுதல், மடைகலைத்தல் என்ற ஒழுங்கில் நடைபெறும்.

மட்டக்களப்புப் பிரதேசத்தில் அம்மன் சடங்கு ஊர்காவல் பண்ணுதல், கதவு திறத்தல் என்னும் நிகழ்வுகளுடன் ஆரம்பிக்கப்படுகின்றது. ஊர்சுற்றுதல், தெய்வம் ஆடுதல், கலியாணக்கால் வெட்டுதல், கலியாணச் சடங்கு, மடிப்பிச்சை எடுத்தல், வட்டுக் (நெல்) குற்றுதல், விநாயகப் பானை வைத்தல், குளிர்த்தி பாடல், தீ மிதிப்பு, கதவடைத்தல், எட்டாம் நாள் சடங்கு என்ற வகையில் இடம்பெறும். மலையகத்தில் முக்கியம் பெற்ற மாரியம்மன் வழிபாட்டில் கரகம் பாலித்தல், அடையாளம் காட்டுதல், குடி அழைத்தல், காப்புக் கட்டுதல் (நோறுபுக் கட்டுதல்), இடும்பன் பூசை முதலிய சடங்குகள் நடைபெறும். ஆலயத்தில் இருந்து கரகங்களை ஊர்வலமாக எடுத்துச் செல்வர். அது கரக ஊர்வலம் எனப்படும். இக்கரக ஊர்வலத்தில் கரகம் எடுத்து வரும்போது வேப்பிலைக் கொத்தை வீசி ஒயிலாட்டம் ஆடப்படும். பம்பை, உடுக்கு, தப்பு முதலியனவும் இசைக்கப்படும்.

அம்மன் சடங்கு ஆரம்பமானதும் ஊர் மக்கள் பயபக்தியுடன் நடந்து கொள்வர். வீடுகளில் மச்சம், மாமிசம் உண்பதையும் உணவினை வதக்குதல், தாளித்தல், பொரித்தல் போன்ற செயல்களையும் இடித்தல், வறுத்தல் போன்றவற்றையும் தவிர்த்துக் கொள்வர். ஏனெனில், அவற்றைச் செய்தால் அம்மனின் கோபத்துக்குள்ளாக வேண்டுமென்பது மக்களின் நம்பிக்கையாகும்.

### அம்மன் வழிபாட்டுடன் தொடர்புடைய நிகழ்கலைகள்

அம்மன் சடங்கு ஆரம்பமானதும் மக்கள் மத்தியில் மகிழ்ச்சி ஏற்படுகின்றது. அதனைக் கலைகள் மூலம் வெளிப்படுத்துகின்றனர். அவ்வாறு கலைகளை அளிக்கை செய்யும்போது, பாரம்பரிய பழக்கவழக்கங்கள், பண்பாடு


இலவச விநியோகத்திற்காக

என்பன அதனுள் இழையோடிக் காணப்படும். கிராமியச் சடங்குகளின்போது கும்மி, கோலாட்டம், வசந்தன் கூத்து, கரகாட்டம், காவடி முதலிய கலைநிகழ்வுகளும், உடுக்கை, தப்பு, பறை முதலான இசைக்கருவிகளும் இடம்பெறும். வட்டமாக வளைந்து நின்று பாட்டுப்பாடி, கைகளால் தட்டி ஓசை எழுப்பிப் பெண்களால் ஆடப்படுவது **கும்மி** எனப்படும். இரு கைகளிலுமுள்ள சிறு கோல்களைத் தட்டி ஓசை எழுப்பி, ஆடிப்பாடும் நிகழ்வு **கோலாட்டம்** என்றழைக்கப்படும். கும்மி, கோலாட்டம் என்பவற்றுக்கென குறிப்பிட்ட மெட்டில், கிராமியப்பாடல்கள் உள்ளன. பன்னிருவர் சேர்ந்து தொழில் சார்ந்த பாடல், தெய்வப் பாடல் முதலானவற்றைப் பாடிக் கோல்களை ஒன்றுடன் ஒன்று அடித்து இசைக்கேற்ப ஆடுதல் **வசந்தன் கூத்து** எனப்படும். இது வசந்தன் கோலாட்டம், வசந்தன் நாடகம், வசந்தன் பள்ளு, வசந்தன் சிந்து எனப் பல பெயர்களால் அழைக்கப்படும். மஞ்சள் நீர் அல்லது பால் என்பவற்றை குடத்திற்குள் எடுத்துத் தலையில் வைத்து, பக்தி சிரத்தையுடன் ஆடப்படுவது **கரகாட்டம்.** அது மாரியம்மனுக்காக ஆடப்படுவதாகும். நேர்த்தியின் பொருட்டு ஆடப்படுவது **காவடி**யாகும். காவடி ஆட்டமுறை, அமைப்பு என்பனவற்றின் அடிப்படையில் அன்னக் காவடி, புஷ்பக்காவடி, பறவைக்காவடி, பாற்காவடி, முள்ளுக்காவடி, தூக்குக்காவடி எனப் பலவகைப்படும்.

## (இ) வைரவர் வழிபாடு

வைரவர் தோற்றம் பற்றி ஆகமங்களும் புராணங்களும் குறிப்பிடுகின்றன. வைரவர், ஐந்து சிரசுகளை உடைய பிரமனின் ஆணவத்தை அடக்கும் பொருட்டு சிவனின் அம்சமாகத் தோன்றியவர் ஆவார். சிவபெருமானின் குழந்தையாதலால், இவர் சிவகுமாரர் எனப் போற்றித் துதிக்கப்படுகின்றார். வைரவருக்குரிய வழிபாடு ஆகமம் சார்ந்த முறைகளிலும் ஆகமம் சாராத முறைகளிலும் நடைபெறுகின்றது. ஆகமம் சார்ந்த வழிபாட்டுமுறைகளில் ஆலயத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு (சேத்திரபாலர்) வைரவருக்குரியதாகும். ஆகமம் சாராத முறைகளில் காவல் தெய்வமாகவும் வீட்டில் குலதெய்வமாகவும் போற்றுகின்றனர். வைரவருக்குரிய வழிபாட்டிடங்களாக ஆலயங்கள், மரத்தடி, ஆற்றங்கரையோரம், வீட்டுப்புறம் முதலானவை அமைந்துள்ளன.

வைரவர் வழிபாட்டின்போது இடம்பெறும் நிகழ்வு **வைரவர் சடங்கு** எனப்படும். வைரவருக்குப் பந்தல் அமைத்து, அவரது குறியீடாக சூலம், கருங்காலிப் பொல்லு என்பனவும் தென்னம்பாளையும் வைத்து, அவற்றிற்குத் திருநீறு, சந்தனம், குங்குமம் சாத்தி, வைரவருக்குப் பிடித்தமான ரொட்டி, வாழைப்பழம், கடலை என்பனவற்றைப் படைத்தும் வடைமாலை சாத்தியும் காவியம் பாடியும் அவரை வழிபடுகின்றனர். பொங்கலும், படையலும், வடைமாலை சாத்தலும் அவருக்குரிய பொதுவான வழிபாட்டு முறைகளாகும்.

மக்களால் எல்லா இடங்களிலும் வழிபடக்கூடிய சிறப்பினைக் கொண்ட வைரவர் வழிபாடு இலங்கையில், யாழ்ப்பாணம், மட்டக்களப்பு, திருகோணமலை, வவுனியா, முல்லைத்தீவு, மலையகம் போன்ற இடங்களிலும் இடம்பெறுகின்றது.

### வைரவர் வழிபாட்டுடன் தொடர்புடைய நிகழ்கலைகள்

கிராமிய மக்களால் அம்மன் வழிபாட்டில் நிகழ்த்தப்படும் காவடி, கரகம், கூத்து முதலான கலைகள் வைரவர் வழிபாட்டின் போதும் இடம்பெறுகின்றன. மேற்கூறிய வகையில் பிரதேசத்திற்குப் பிரதேசம் வேறுபட்ட வழிபாட்டு முறைகள், நிகழ்கலைகள் என்பன காணப்படுகின்றன.

01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. அம்மன் எவ்வெப் பெயர்களால் போற்றப்படுகின்றாரள்?
2. கிராமிய வழிபாட்டுடன் தொடர்புடைய கலைகள் யாவை?
3. கிராமிய மக்களின் வழிபாட்டில் வைரவர் எவ்வாறு வழிபடப்படுகின்றார் என்பதைச் சுருக்கமாக எழுதுக.

### செயற்பாடு

1. உங்கள் பிரதேசத்தில் நடைபெறும் அம்மன் சடங்கு, வைரவர் சடங்கு என்பவற்றை அவதானிக்குக. அவை பற்றிய ஆக்கமொன்றினைத் தயாரித்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- அம்மன் ஆலயங்களில் நடைபெறும் திருவிழா, சடங்கு என அழைக்கப்படும்.
- அம்மன், வைரவர் முதலிய தெய்வங்களுக்குரிய வழிபாடுகள், நிகழ்கலைகள் என்பன பிரதேசத்திற்குப் பிரதேசம் வேறுபட்டுக் காணப்படுகின்றன.
- வைரவர் வழிபாட்டின்போது இடம்பெறும் நிகழ்வு வைரவர் சடங்கு எனப்படும்.

# 23 ஈழத்துச் சைவமரபு

சைவ சமயம் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே சைவமக்களால் பின்பற்றப்பட்டு வருகின்றது. ஈழத்திலே சைவத்தின் தொன்மை, வரலாறு என்பவற்றைப் பல்வேறு சான்றாதாரங்கள் மூலம் அறியலாம். தொல்பொருட்கள், இதிகாசங்கள், புராணக்கதைகள், வாய்மொழி மரபுகள், பிறநாட்டார் எழுதிய குறிப்புகள், இலக்கியங்கள் முதலானவற்றின் மூலமும் இலங்கை சரித்திர ஆய்வில் ஈடுபட்ட மேனாட்டறிஞர்களதும், இலங்கை அறிஞர்களதும் கருத்துக்களாலும் இலங்கையில் வரலாற்றுக்கு முற்பட்ட காலம் முதலே சைவ சமயமே நிலைபெற்றிருந்தது என்பதற்கு ஆதாரங்களாக அமைகின்றன.

திருமூலர் ஈழத்தைச் "சிவபூமி" என்று குறிப்பிட்டதிலிருந்தும் ஈழத்தில் சைவ சமயத்தின் தொன்மையை அறிய முடிகின்றது. இலங்கையின் பூர்வீகக் குடிகளான இயக்கரும், நாகரும் சிவனை வழிபட்டனர்.அவ்வாறே, ஈழத்தின் புராதன ஈச்சரமான திருக்கேதீச்சரம் நாகர்களது பிரதான வழிபாட்டுத் தலமாக இருந்ததென்பதும் ஆய்வாளர் கருத்தாகும்.

இலங்கையில் வாழ்ந்ததாகக் கருதப்படும் மாதுவட்டா, விசுவகர்மா, மயன், குபேரன், இராவணன், மண்டோதரி, முதலியோர் சிவ வழிபாட்டினராக இதிகாசத்தில் சித்தரிக்கப்பட்டுள்ளனர். மயனின் மகளும் இராவணனின் மனைவியுமாகிய மண்டோதரி வழிபட்ட தலமாகத் திருக்கேதீச்சரம் விளங்குகின்றது. இலங்கை வேந்தனான இராவணன் சிறந்த சிவ பக்தியுடையவனாகப் போற்றப்படுகின்றான். இதனை, **"இராவணன் மேலது நீறு"** என சம்பந்தர் பாடியுள்ளார். இராவணனும் அவனது தாயும் வழிபட்ட தலமாகக் திருக்கோணேச்சரம் விளங்குகின்றது. இராவணன் தன் தாயின் அபரக்கிரியைகள் செய்வதற்காக அமைக்கப்பெற்றதே திருகோணமலையிலுள்ள கன்னியா தீர்த்தமெனத் தட்சண கைலாய புராணம் கூறுகின்றது.

இலங்கையில் வாழ்ந்த மக்களிடையே முருகவழிபாடு நிலைபெற்றிருந்தமையை, புத்தளப்பகுதியில் பொன்பரிப்பில் மேற்கொள்ளப்பட்ட புதைபொருளாய்வொன்று நிரூபித்துள்ளது. தமிழ்நாட்டில் ஆதிச்ச நல்லூரில் கிடைத்தவை போன்ற வேலாயுதங்களும், சேவற்சிலையும், காவடிச் செடில்களும், ஈழத்தின் மாதோட்டம், கந்தரோடை முதலிய இடங்களிலும் கண்டெடுக்கப்பட்டன. இவை ஈழத்தின் சைவ மரபை நிரூபிக்கின்றன.

விஜயன் இலங்கைக்கு வருவதற்கு முன்னரும், பின்னரும் இந்நாட்டிற் சைவம் செழிப்புற்றிருந்ததென வணக்கத்துக்குரிய வல்பொல இராகுல தேரர் எழுதிய **"இலங்கையில் பௌத்த வரலாறு"** எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார். திரு. ஜே .டபிள்யூ ரெனற் என்பவர் எழுதிய **"இலங்கைச் சரித்திரம்"** என்ற நூலில் இலங்கையில் ஆதியில் குடியேறியவர்கள் சைவர்களே எனக் கூறுகின்றார். உறுகுணைத் தேசிய பூங்காவில் கண்டெடுக்கப்பட்ட கி. மு. காலத்ததெனக் கணிக்கப்படும் கல்வெட்டொன்றில் **'சிவநகர்'** என்ற இடப் பெயர் குறிக்கப்பட்டிருந்தமையும் இதற்குச் சான்றாகின்றது.

யாழ்ப்பாண வைபவமாலை எனும் நூல் விஜயன் இலங்கைக்கு வந்து அரசாட்சியை ஏற்றதும் பழைய சிவாலயங்களைத் திருத்தினான் என்றும், பாதுகாப்புக்காக நாற்புறமும் நான்கு புதிய சிவாலயங்களை அமைத்தானென்றும் கூறப்படுவதால் அவையே பண்டைய ஈச்சரங்களெனவும் அறியப்படுகின்றது. இந்த வகையில் இலங்கையில் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் இருந்தே சைவ சமயம் நிலை பெற்றிருந்தது என்பது தெரிய வருகின்றது.

அநுராதபுரக் காலத்தில் (கி.மு. 4 - கி.பி. 10 ஆம் நூற்றாண்டு) சைவ சமயம் செல்வாக்குப் பெற்றிருந்தது. விஜயனுக்குப் பின் அநுராதபுரத்தை ஆண்ட பண்டு வாசுதேவன், அபயன், பண்டுகாபயன் முதலியோர் சைவர்களாகவே இருந்திருக்கின்றனர். கி.மு 145 - 101 வரையிலான காலத்தில் அநுராதபுரத்தை ஆண்ட எல்லாளன் என்னும் தமிழ் மன்னனது காலத்தில் சைவம் சிறப்புப் பெற்றிருந்தது என்பர்.

பொலனறுவைக் காலப்பகுதியில் (கி.பி. 11 - 13 ஆம் நூற்றாண்டு) முன்னரிலும் பார்க்க ஈழத்தின் பல பாகங்களிலும் சோழ மன்னர்களால் சிவாலயங்கள் கட்டப்பட்டன. பொலனறுவையில் மட்டும் பத்துச் சிவாலயங்கள் கட்டப்பட்டன. வானவன்மாதேவி ஈச்சரம் இராஜராஜனின் மனைவியின் பெயரால் கட்டப்பட்டது.


இலவச விநியோகத்திற்காக

இங்கு தினமும் ஆகம விதிப்படி பூசைகள் நடைபெற்று வந்தன. இதனைக் கல்வெட்டுச் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. இவை யாவற்றையும் அடிப்படையாகக் கொண்டு பார்க்கும் போது ஈழத்தில் புராதன காலம் முதலே சைவ சமயம் நிலவி வருகின்றது.

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. ஈழத்தின் சைவத்தின் தொன்மையை அறிய உதவும் சான்றாதாரங்களைக் குறிப்பிடுக.
2. ஈழத்தைச் "சிவபூமி" என்று குறிப்பிட்டவர் யார்?
3. இலங்கையில் வாழ்ந்த மக்களிடையே முருகவழிபாடு நிலைபெற்றிருந்தமைக்கான சான்றுகள் எவை?

## செயற்பாடு

1. "இலங்கை வேந்தனான இராவணன் சிறந்த சிவபக்தியுடையவன்" என்ற தலைப்பில் 5 நிமிடம் உரை நிகழ்த்துக.

### பாடச்சுருக்கம்

- சைவத்தின் தொன்மை, வரலாறு என்பவற்றை அறிய பல்வேறு சான்றாதாரங்கள் உள்ளன.
- இலங்கையில் வாழ்ந்த மக்களிடையே முருகவழிபாடு நிலைபெற்றிருந்தமைக்குப் புதைபொருட் சான்றுகள் உள்ளன.

# 24 ஈழத்துச் சைவ ஆலயங்கள்

## 1. பறாளை விநாயகர் ஆலயம்



### i. அறிமுகம்

இலங்கையில் விநாயகர் ஆலயங்கள் இல்லாத ஊரே இல்லை எனலாம். விநாயகர் பெரிய ஆலயங்களில் மட்டுமின்றி, ஆற்றங்கரை, குளக்கரை, மருத மரத்தடி, அரச மரத்தடி போன்ற இடங்களிலும் வீற்றிருந்து மக்களுக்கு அருள்புரிகின்றார்.

விநாயகப் பெருமானின் புராதன ஆலயங்கள் பலவற்றின் அழிபாடுகள் வன்னிப் பகுதிகளிலும், புராதன அநுராதபுரப் பகுதிகளிலும் பொலனறுவை, தெய்வந்துறை முதலான இடங்களிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. மேற்கூறியவற்றின் அடிப்படையில் நோக்கும்பொழுது, இலங்கை முழுவதிலும் விநாயகர் வழிபாடு நிலவி இருந்திருக்கலாம் என்ற முடிவுக்கு நாம் வரலாம்.

### ii. அமைவிடம்

இன்றும் புராதன பழமையோடும் சிறப்போடும் விளங்கும் ஆலயங்கள் பலவற்றை இலங்கையின் வடக்கு, கிழக்கு, மத்தி, மேற்கு முதலான பகுதிகளில் காணமுடியும். அவ்வகையில் இலங்கையிலுள்ள புராதன விநாயகர் ஆலயங்களில் ஒன்றான சுழிபுரம் பறாளை விநாயகர் ஆலயம் பற்றி இங்கு கற்போம். யாழ்ப்பாணத்தின் வடமேற்கே தொல்புரம், சோழியாபுரம் என்னுமிரு கிராமங்கள் உள்ளன. அவற்றில் சோழியாபுரமே பிற்காலத்தில் சுழிபுரம் என மருவி உள்ளதாகக் குறிப்பிடுவர். **'தொல்லுலகும் போற்றும் சுழிபுரம்'** என்னும் கிராமத்திலே வயல் சூழ்ந்த மருதநிலத்தில் கிழக்கு நோக்கிய சந்நிதியைக் கொண்டதாக, பறாளை விநாயகர் ஆலயம் அமைந்துள்ளது.

### iii. மரபுவழிச் செய்திகள்

இவ்வாலயம் சோழர் காலத்தில் வழிபாட்டுத் தலமாக இருந்திருக்க வேண்டுமென மரபுவழிச் செய்திகள் குறிப்பிடுகின்றன. மேலும், இவ்வாலயத்தில் இந்தியாவிலிருந்து வந்த வேதாரணிய சைவக் குருமார்களால் வழிபாடுகள் நடந்ததாகவும் சோழ தேசத்திலிருந்து வந்த எழுவர் தங்கள் பரிவாரங்களுடன் பறாளை விநாயகரைத் தரிசித்துச் சென்றதாகவும் சொல்லப்படுகின்றது. யாழ்ப்பாணத்தை ஆண்ட தமிழரசர் காலத்தில் இவ்வாலயம் சிறப்பான முறையில் கட்டப்பட்டது எனக் கூறுவர்.

### iv. மூர்த்தி, தலம், தீர்த்தம்

தமிழரசர் காலத்தில் சிறப்புப் பெற்றிருந்த பறாளை விநாயகர் ஆலயத்தை, போர்த்துக்கேயர் இடிக்கத் தொடங்கினர். அவ்வேளையில் காகம் ஒன்று வந்து, இடிப்பித்த அதிகாரியின் கண்ணைக் கொத்தி ஆலயத்தை இடிக்க விடாது செய்தது. அதனால், அங்குள்ள பிள்ளையார் **கண்ணைக் கொத்திக் காக்கைப் பிள்ளையார்** எனவும் அழைக்கப்படுகிறார். அந்த அற்புத வரலாற்றினைப் பறாளை விநாயகர் பள்ளின் ஊடாக அறியமுடியும். இவ்வாலயம் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் சிறப்புக்களையும் தன்னகத்தே கொண்டது.

பறாளை விநாயகர் மீது இவ்வாலயச் சூழலில் வாழும் மக்கள் பெரும் நம்பிக்கை கொண்டு வழிபாடியற்றுகின்றனர். தாம் எக்காரியத்தைச் செய்வதற்கு முன்பும் இவ்வாலயத்தை, தரிசனம் செய்கின்றனர். மக்கள் தங்கள் தமது வயல்களிலிருந்து பெறும் அறுவடையை முதலில் விநாயகருக்கே சமர்ப்பிக்கின்றனர்.

### v. நூல்கள்

பல்வேறு சிறப்புகளைக் கொண்ட இவ்வாலயத்தின் மீது நல்லூர் சின்னத்தம்பிப் புலவர் பறாளை விநாயகர் பள்ளு என்னும் பிரபந்தமொன்றைப் பாடியுள்ளார். அந்நூல் இத்தலத்தில் வீற்றிருந்து அருள்புரியும் பறாளை விநாயகரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பட்டதாகும். சிந்து, விருத்தம், கலிப்பா ஆகிய யாப்புகளால் அந்நூல் பாடப்பட்டுள்ளது.



இலவச விநியோகத்திற்காக

சீர்பரபு சிவனடியார் பக்தி யோடுஞ்
சிவநெறியைப் பேணுகின்ற தெய்வ ஊராம்
கார்மருவு சோலையில் குயில்கள் பாடக்
கருணைமரு கனருள்சேர் மயில்க ளாடும்
பேர்பரபு சுழிபுரத்துப் பறாளை மேவும்
பெரும்புகழ்சேர் ஈசுரவி நாய கர்மேல்
பார்பரபு ஊஞ்சலினது பண்ணிறி பாடப்
பறாளையுறை விநாயகர்தாள் பணிந்து வாழ்வாம்.

- பறாளை விநாயகர் ஊஞ்சல்

## 2. கொக்கட்டிச்சோலைத் தான்தோன்றீச்சரம்



### i. அமைவிடம்:

கிழக்கு மாகாணம் பண்டு தொட்டு சைவ சமயம் சிறப்புற்றுத் திகழ்கின்ற பிரதேசமாகும். மக்கள் சைவ சமயத்தின் மீது வைத்துள்ள பற்றும், தொன்மை வாய்ந்த பல ஆலயங்கள் அங்கு இருக்கின்றதுமே அதற்குக் காரணங்களாகும். அங்குள்ள கோயில்கள், திருப்படைக் கோயில்கள் அல்லது தேசத்துக் கோயில்கள் என்றோ வேறுபடுத்திக் கூறப்படுகின்றன. எனவே, அவ்வாறு அழைக்கப்படுகின்ற கோயில்கள் அப்பிரதேச மக்கள் அனைவருக்கும் பொதுவாக இருக்கின்ற முக்கியமான கோயில்கள் எனப் பொருள்படும்.

திருப்படைக்கோயில்களுள் ஒன்றான கொக்கட்டிச்சோலை தான்தோன்றீச்சரம் மட்டக்களப்புப் பிரதேசம் முழுவதற்குமான ஒரேயொரு சிவன் கோயிலாகவும் அப்பிரதேசத்தில் தேரோட்டம் நிகழும் ஒரேயொரு கோயிலாகவும் திகழ்கின்றது. இவ் ஆலயம், இலங்கையின் கிழக்கு மாகாணத்தில் மட்டக்களப்பு நகரிலிருந்து தெற்கே பதின்மூன்று கிலோமீற்றர் தொலைவிற் கொக்கட்டிச்சோலையில் அமைந்துள்ளது.

### ii. தலவரலாறு

மட்டக்களப்புப் பிரதேசத்தின் முக்கிய பிரதேசமாக மண்முனைப் பிரதேசம் விளங்குகின்றது. அக்காலத்தில் இப்பிரதேசத்தை உலகநாச்சி என்பவள் ஆட்சி செய்தாள் என்பர். அக்காலத்தில் அப்பிரதேசத்திலுள்ள காட்டில் விறகு வெட்டச் சென்ற வேடர்கள் கொக்கட்டி மரத்தை வெட்டிய போது அதிலிருந்து செந்நிறமான சாறு வடிந்தது. இதை இரத்தம் என்று எண்ணிய வேடர் தலைவன் திகடன் உலக நாச்சியிடம் சென்று சொல்ல; உலகநாச்சி தன் பரிவாரங்களுடன் குறித்த இடத்தைச் சென்று பார்த்தபோது, அந்த இடத்தில் ஒரு சிவலிங்கம் புதையுண்டு இருப்பதைக் கண்டு, அதனைப் பக்தியோடு எடுத்து, அவ்விடத்தில் சிறு கோயிலை அமைத்து அதனை வழிபாடடுக்குரிய இடமாக்கினாள். காலந்தோறும் அவ்வாலயம் புதுப்பிக்கப்பட்டு அது இன்றையநிலையை அடைந்தது. இவ்வாலயம் இயல்பாகத் தோன்றியதால், தான்தோன்றீச்சரம் என்னும் பெயரைப் பெற்றது.

இவ்வாறு சிறப்புப் பெற்றிருந்த இவ்வாலயத்தை, போர்த்துக்கீசர் அழிக்க வந்தனர். அவ்வேளையில், போர்த்துக்கீசத் தளபதி அசலிடோவுடன் ஆலயப் பூசகர் தர்க்கம் செய்தார். அவனது சவாலுக்கு விடையாக, அங்கிருந்த கல் நந்தி ஐயர் கொடுத்த புல்லைச் சாப்பிட்டு, சாணம் போட்டது. அதனைக் கண்ட தளபதி கோயிலை அழிக்காமல் சென்றான் என்று கூறப்படுகின்றது. இந்தத் தலத்தின் சிறப்பை அறிந்த குளக்கோட்டன் தான்தோன்றீசரருக்குக் கோயில் எழுப்பினான் எனவும் கூறப்படுகின்றது.

தான்தோன்றீச்சரக் கோயிலின் இறைவன் பெயர் தான்தோன்றீச்சரர். இறைவி பெயர் பார்வதி அம்மையார். தல விருட்சம் கொக்கட்டி மரம். இயற்கையாகத் தோன்றிய சிவலிங்கத்தை அவ்விடத்திலே வைத்துக் கோயில் அமைக்கப்பட்டதால் கருவறையில் உள்ள அந்த இலிங்கம் வெளியே அடியார்களுக்குத் தெரிவதில்லை. எனவே, அச்சிவலிங்கத்துக்கு மேலே உமாமகேஸ்வரர் விக்கிரகம் ஒன்று தாபிக்கப்பட்டுள்ளது.

### iii. பூசைகளும் விழாக்களும்

இக்கோயிலின் பூசைகள் செய்பவர்கள் சங்கமர் என்னும் சைவக் குருமார் ஆவர். சங்கமம் என்பது சிவனடியார்களைக் குறிக்கும். எனவே, நம் நாட்டு வழக்கப்படி அவர்களைச் சிவனடியார்களாகிய பூசகர்கள் என்று



இலவச விநியோகத்திற்காக

கூறலாம். அவர்களுடைய பூசை முறை ஆகம விதிக்கமைந்த பிற சைவக்கோயில்களில் நடைபெறுகின்ற பூசை முறையிலிருந்து சற்று வேறுபட்டது. வீரசைவப் பிரிவைச் சேர்ந்த அவர்கள் பின்பற்றும் நெறி வீராகம நெறியாகும். அது வீராகமத்தை அடிப்படையாகக் கொண்டது.

தான்தோன்றீச்சர ஆலயத்திலே தினந்தோறும் மூன்று காலப் பூசை நடைபெற்று வருகின்றது. தைப்பொங்கல், தைப்பூசம், மாசிமகம், வருடப்பிறப்பு, திருக்கார்த்திகை, திருவெம்பாவை முதலிய நாள்களில் விசேட பூசைகளும் திருவிழாக்களும் நடைபெறும். சிவராத்திரி, கந்தசஷ்டி, விநாயக சஷ்டி முதலிய விரதங்களுக்காக இங்கு பெருந் தொகையான அடியார்கள் கூடுகின்றனர்.

அக்கோயிலின் மகோற்சவம் ஆவணி மாதத்து அமாவாசைக்குப் பின் சந்திரனின் முதற் பிறை தோன்றும் நாளிற் கொடியேற்றத்தோடு ஆரம்பமாகின்றது. அதற்குப் பின்னர் பௌர்ணமிக்குப் பின் வருகின்ற முதலாவது ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் தேர்த் திருவிழாவும் அடுத்த நாளாகிய திங்கள் அன்று தீர்த்தத் திருவிழாவும் நடைபெறும். அங்கு எல்லாமாகப் பதினைந்து நாள்களுக்குத் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. தேர்த் திருவிழாவே அக் கோயிலில் மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றது. அதனால், அப்பிரதேச மக்கள் மகோற்சவம் முழுவதையுந் **'தேரோட்டம்'** என்றே கூறி இன்புறுவர். சித்திரத்தேர் என்னும் பெரிய தேரிற் சிவனும் அம்மனும், பிள்ளையார் என்னுஞ் சிறிய தேரில் விநாயகரும், முருகனும் தேர்த்திருவிழாவின்போது எழுந்தருளுகின்றனர். தீர்த்த நாளன்று அதிகாலையில் வேட்டைத் திருவிழா நடைபெறும். இது ஆன்மாக்களின் ஈடேற்றத்திற்குத் தடையாயுள்ள மலங்களை இறைவன் அழிக்கும் பாவனையில் அமைகின்றது. அந்தத் திருவிழாவினை அடுத்துக் கோயிற் பரிபாலகர்களையும் தொண்டூழியக்காரரையும் திருவிழாவிற் பங்கு கொண்டோரையும் கௌரவித்து சீர்வரிசையாகக் 'குடுக்கை கூறுதல்' என்னும் நிகழ்ச்சி இடம் பெறும். அதனைப் பற்றிய விபரங்கள் மட்டக்களப்பு மான்மியத்திற் 'பங்கு கூறுங் கல்வெட்டு' திருப்படைக் களஞ்சியம் எனும் பகுதிகளில் காணலாம்.

### iv. கோயிற் பரிபாலனம்

ஏனைய சைவக் கோயில்களைப் போலன்றி அக் கோயிலின் பரிபாலனம் சற்று வேறுபட்டது. வண்ணக்கர் மூவர் கூட்டாகப் பரிபாலனத்துக்கு பொறுப்பாக இருக்கின்றனர். அவர்கள் காலிங்கமகுடி, உலகிப் போடிகுடி, படையாண்டகுடி என மூன்று குடிகளைச் சேர்ந்தவர்கள். பதவி பெறுபவர் ஆயுள் முழுவதும் அப்பதவியை வகிப்பார். அவர்களில் காலிங்கா குடியைச் சேர்ந்தவர் தலைமைப் பதவிக்கும், உலகிப்போடிக் குடியைச் சேர்ந்தவர் பொருளாளராகவும், படையாண்டகுடியைச் சேர்ந்தவர் செயலாளராகவும் நியமிக்கப்படுவார்கள். அப்பதவிகள் தாய்வழி உரிமை மூலம் பொறுப்பு மாற்றம் செய்யப்படும்.

## 3. ஒட்டுசுட்டான் தான்தோன்றீச்சரம்

### i. அமைவிடம்

இலங்கைத் தீவில் பழங்காலந் தொட்டு சிறப்புப் பெற்றுவந்த தான்தோன்றியீச்சரங்கள் இரண்டு. அவற்றுள் ஒன்று மட்டக்களப்பு பிரதேசத்தில் அமைந்துள்ள கொக்கட்டிச்சோலைத் தான்தோன்றீச்சரமாகும். மற்றையது வன்னிப் பெருநிலப் பரப்பில் முல்லைத்தீவு மாவட்டத்தில் அமைந்துள்ள ஒட்டுசுட்டான் தான்தோன்றீச்சரமாகும். இவ்வாலயம் மாங்குளத்திலிருந்து முல்லைத்தீவுக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் சுமார் இருபது கிலோமீற்றர் தொலைவில் அமைந்துள்ளது.

### ii. தல வரலாறு

யாழ்ப்பாணத்திலுள்ள இடைக்காடு என்னுமிடத்தைச் சேர்ந்த வீரபத்திரன் என்ற சைவ வேளாளர் தம் பிள்ளைகள் இருவருடன் வன்னிக்குச் சென்று குடியேறி தொழில் புரிந்து வந்தார். இவர் ஒட்டுசுட்டானில் காடுவெட்டி குரக்கன் பயிரிட்டு வந்தார். அவ்விடத்தை இன்றும் இடைக்காடு என்றே அழைப்பர். குரக்கன் கதிர்களை அறுவடை செய்த பின்னர் அதன் அடியில் உள்ள வேருடன் சேர்ந்த ஒட்டுக்களைத் தீயிட்டு எரித்தார். அப்பொழுது ஒரு குறித்த இடத்திலுள்ள ஒட்டுக்கள் எரியாது காணப்பட்டன. அவ்விடத்தை அவர் அதிசயத்துடன் பார்த்தார். சிவபெருமானின் திருவருளால் கொன்றை மரத்தின் அடியிற் சிவலிங்கத்தின் உருவில் அமைந்த கல் ஒன்று அவருக்குத் தென்பட்டது. அதனை அவர் வழிபாடு செய்யத்தொடங்கினார். அதுவே, ஒட்டு ட்டான் தான்தோன்றீச்சரர் எனக் காரணப் பெயராக அமைந்துவிட்டது.

### iii. மூர்த்திச் சிறப்பு

தானாகவே தோன்றிய இலிங்கம் என்பது சுயம்பு இலிங்கம் எனப்படும். சிற்பியால் செதுக்கப்படும் இலிங்கத்துக்கு உருத்திரபாகம், விஷ்ணுபாகம், பிரமபாகம் என மூன்று பிரிவுகளைக் கொண்ட சிவலிங்கம் வேறாகவும் ஆவுடையார்



இலவச விநியோகத்திற்காக

என்பது வேறாகவும் இருக்கும். சுயம்பு இலிங்கத்துக்கு இந்த வரையறைகள் இல்லை. ஆவுடையார் பகுதியும் இல்லை, இது இல்லாதிருத்தல் தவறு எனக் கருதிய கோயில் நிர்வாகி இந்தியாவிலிருந்த சிற்பி ஒருவரைக் கொண்டு, ஆவுடையார் பகுதியைச் செய்வித்தார். மேலும் இயற்கையாக அமைந்த இந்த இலிங்கத்தை மூடி அழகுபடுத்துவதற்குப் பொற்கவசம் ஒன்றையும் செய்வித்தார். எனினும், அவை ஒன்றும் தனக்குத் தேவையில்லை என்பதைத் தான்தோனறீச்சரர் தமது அருட்குறிப்பால் வெளிப்படுத்தினார். இதன் மூலமும் இம் மூர்த்தியின் சிறப்பு வெளிப்படுத்தப்படுகின்றது. மூடுவதற்காகக் கொண்டுவரப்பட்ட பொற்கவசம் இன்னமும் ஆலயத்தில் உண்டு. மேலும், இக்கோயிலுக்கு இயற்கையாகவும், செயற்கையாகவும் உண்டாகின்ற அனர்த்தங்களினால் பாதிக்கப்படாமல் இருப்பதும் இம் மூர்த்தியின் சிறப்பையும் அருளாற்றலையும் எடுத்துக் காட்டுகின்றது.

இக்கோயிலின் சிறப்பை அறிந்த வன்னியை ஆண்ட சிற்றரசன் ஒருவன் முதலில் இதற்குக் கோயில் கட்டுவித்தான். பல பெரிய கோயில்களைக் கட்டுவதில் ஈடுபட்ட குளக்கோட்டு மன்னனும் இக் கோயிலுக்குத் திருப்பணி செய்வித்தான். இக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவன் பெயர் ஒட்டுசுட்டான் தான்தோன்றியீச்சரர். எரித்த குரக்கன் ஒட்டு வேகவில்லை என்பதனால் **வேகாவனமுடையார்** என்னும் காரணப் பெயரும் இவருக்கு வழங்குகின்றது. இறைவி பெயர் **பூலோக நாயகி** இக் கோயிலின் தல விருட்சம் கொன்றைமரம் ஆகும்.

### iv. தலச் சிறப்பு

ஆரம்ப காலத்தில் இத் தலம் அடர்ந்த காட்டுப் பகுதியில் அமைந்திருந்ததால் இங்கு மக்கள் அதிகம் வாழவில்லை. இந்தத் தலத்தின் மகிமை காரணமாக மக்கள் இங்கு குடியிருக்கத் தொடங்கினர். இவ்வாறு குடியேறியவர்கட்கு வசதி செய்து கொடுக்குமுகமாக ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அங்கு குளம் ஒன்று கட்டுவதற்கு முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இறைவன் சித்தத்தால் அக்காட்டுப் பகுதியில் முத்தையன்கட்டுக்குளம் கண்டுபிடிக்கப்பட்டது. இதனைத் திருத்தி அப்பிரதேசத்தைச் செழிப்பாக்கியமையும் அத்தலத்தின் சிறப்பாகும்.

### v. தீர்த்தச் சிறப்பு

இத் தலத்திற்கு இயற்கையாய் அமைந்த தீர்த்தக்குளம் ஒன்று உள்ளது. தீராத நோய் உள்ளவர்கள் நேர்த்திவைத்து இத் தீர்த்தக் குளத்தில் நீராடிய பின்னர் நோய் தீரும் என்பது ஐதீகம். இதன் மூலம் இந்தத் தீர்த்தத்தின் மகிமையை உணர முடிகின்றது. மேலும், இத் தீர்த்தக் குளத்தை அசுத்தப்படுத்த எண்ணுபவர்கள் இறைவனின் சீற்றத்துக்கு ஆளானதுமுண்டு. இற்றைக்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் கோயிலுக்கு பூசை செய்யும் பூசகர் இருவர் தீர்த்தக் குளத்தை அசுத்தப்படுத்தினர். அதனைத் தற்செயலாகக் கண்ட பூசகர் அவர்களிடம் அசுத்தப்படுத்த வேண்டாம் எனக் கூறினார். இருந்தும் அவர்கள் அதனைப் பொருட்படுத்தவில்லை. அதனால், அவர்கள் இருவரும் குளத்திலிருந்து உயிருடன் மீளவில்லை. இதன் மூலம் தீர்த்தத்தின் மகிமையையும் மூர்த்தியின் சிறப்பையும் அறிந்து கொள்ள முடியும்.

### vi. பூசைகளும் விழாக்களும்

இவ்வாலயத்தில் நாள்தோறும் மூன்று காலப் பூசைகள் கிரமமாக நடைபெறுகின்றன. விசேட தினங்களில் அவற்றுக்குரிய பூசைகள் ஒழுங்காக நடைபெறுகின்றன. இங்கு மகோற்சவம் ஆனி மாதத்தில் வருகின்ற அமாவாசையோடு ஆரம்பித்து, பதினாறு நாட்களுக்கு நடைபெறும். பதின்மூன்றாம் நாளில் நடைபெறும் வேட்டைத் திருவிழா மிகவும் சிறப்பானது. தீராத நோய்களாற் பீடிக்கப்பட்டவர்கள் தம் நோய் தீருவதற்காக வேட்டைத் திருவிழா அன்று வேடனாக வருவதாக நேர்த்திக் கடன் செய்வார்கள். இவர்கள் வாகை மர இலை குழைகளாற் குடையும் வாகைக் குழையால் அல்லது தென்னோலையால் செய்த தொப்பியும் அணிந்து, உடல் முழுவதும் கரிபூசி வேடர்கள் போலக் கோலஞ் செய்வார்கள். தடி ஒன்றின் நுனியிற் குழை கட்டி அதனைக் கையில் வைத்துக் கொள்வார்கள். இவ் வேடர்களுக்குத் தலைவன் ஒருவன் இருப்பான். இது பரம்பரை பரம்பரையாகக் கிடைக்கின்ற ஒரு பதவியாகும். தலைவன் தேன் நிறைந்த சுரைக்குடுவை ஒன்றினை அரையிலே கட்டியிருப்பான்.

இந்தத் திருவிழாவுக்குச் சுவாமி மட்டுமே எழுந்தருளுவார். அவர் பெரிய வேடன் போல மேலே வீற்றிருக்க, வேட்டுவப் படை அணி சூழ்ந்து வர, திருவிழா பவனி வருதல் கண்கொள்ளாக் காட்சியாகும். வீதி வலம் வந்து கோயில் வாயிலை அடையும்பொழுது, அக் கோயிலின் இறைவி சுவாமியுடன் கோபித்துக் கொண்டு வாயிற் கதவைப் பூட்டிக் கொள்ளுவார். அவ்வேளையில் கோயில் மணியகாரர் அவர்களுடைய பிணக்கை விசாரித்துத் தீர்த்து வைக்கும் பாங்கில் நிகழ்ச்சி ஒன்று நடைபெறும். இவ்வாறு பிணக்குத் தீர்க்கப்பட்டுச் சுவாமி கோயிலின் உள்ளே சென்ற பின்னர், வேடுவர் ஒருவர் பின் ஒருவராக அணிவகுத்து நிற்பர். அப்போது வேட்டுவத் தலைவனின் கட்டளைக்கு அமைந்து அவர்கள் நிலத்தில் வீழ்ந்து வணங்குவர். பின்னர் அவர்கள் கோயிலை வலம் வந்து, தீர்த்தக்குளத்திற்குச் சென்று வேட்டுவ உடைகளைக் களைந்து தீர்த்தமாடுவர். இத்தகைய வேடமிடுபவர்கள்


இலவச விநியோகத்திற்காக

விரதமிருந்து இந்த நேர்த்திக்கடனைச் செய்தல் நியதி அதனால் நோய் தீரும் என்பது அவர்களது நம்பிக்கை. இதனால் வேட்டைத் திருவிழாவில் வேடுபவர்களாகப் பங்குபற்றுவோரின் தொகையும் அதிகரிக்கின்றது. மகோற்சவப் பிற்பகுதியில் பதினைந்தாம் நாள் தேர்த்திருவிழாவும் பதினாறாம் நாள் தீர்த்தத் திருவிழாவும் நடைபெறும். இவற்றைச் சிறப்பாக மேற்கொள்ள நெல் வயல்களினதும் தென்னந் தோட்டங்களினதும் வருவாய் பயன்படுத்தப்படுகின்றது. இவை பண்டைக்கால மன்னர்களாலும் மக்களாலும் நன்கொடையாக வழங்கப்பட்டவையாகும்.

### vii. நூல்கள்

ஒட்டுசுட்டான் தான்தோன்றீச்சரர் ஆசிரியர் விருத்தம் என்னும் நூல் கொக்குவில் கு.சு.சபாரத்தின முதலியாரால் 1883 இல் இயற்றப்பட்டது. இக் கோயிலுக்கு ஊஞ்சற் பதிகம் சுதுமலையைச் சேர்ந்த பண்டிதர் ஆ.சி. நாகலிங்கம் என்பவரால் பாடப்பட்டுள்ளது. வேட்டைத் திருவிழா அன்று இறைவனுக்கும் இறைவிக்கும் இடையலான பிணக்கை விசாரித்துத் தீர்த்து வைப்பது போன்று அமைந்த வசன கவிதை ஒன்றும் நூல் உருவில் உள்ளது. கோயில் மணியகாரரே அவர்களுடைய வழக்கை விசாரிக்கும் நடுநிலையாளர் போன்ற பாவனையில் இக் கவிதை அப்போது அவரால் படிக்கப்படும். இறைவனும், இறைவியும் நேராக ஒருவர் மீது ஒருவர் குற்றம் கூறாமல், தம் குறையை மணியகாரருக்கு முறையிடுவது போன்று இக் கவிதைகள் அமைந்துள்ளன. இது வேறு எந்தக் கோயிலிலும் இல்லாத ஒரு நிகழ்ச்சியாகும்.

## 4. நயினை நாகபூஷணி அம்மன் ஆலயம்

### i. அமைவிடம்

யாழ்ப்பாணக் குடாநாட்டின் தென்மேற்காகப் பல தீவுக் கூட்டங்கள் உள்ளன. அவற்றில் ஒன்றே நயினாதீவாகும். இது நான்கு மைல் சுற்றளவு கொண்ட சிறிய தீவாகும். இங்கு அமைந்துள்ள ஆலயம் நயினை நாகபூஷணி அம்மன் ஆலயமாகும். வரலாற்றுக் காலம் தொடக்கம் இவ்வாலயம் தமிழ்நாட்டுடன் மிகுந்த தொடர்புடையதாக இருந்து வந்துள்ளது.



இவ்வாலயத்தைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு இத் தீவகம் நாகதீவு, மணிபல்லவம், பிராமணத்தீவு போன்ற சிறப்புப் பெயர்களைப் பெற்றுள்ளது. மணிமேகலை என்னும் காவியத்தில் கூறப்படும் மணிபல்லவம் நயினாதீவாகவே இருக்க வேண்டும் என ஆராய்ச்சியாளர் கருதுகின்றது. இவ்வாலயத்தில் குடிகொண்டிருக்கும் இறைவியை நாகபூஷணி, நாகம்மாள், நாகேஸ்வரி எனப் பல நாமங்களால் அழைத்துப் போற்றுவர். பொதுவாக இந்துக்கள் புகழ்மிக்க சக்திபீடங்கள் அறுபத்து நான்கு என்பர். அவற்றினுள் நயினை நாகபூஷணி அம்மன் ஆலயமும் ஒன்றாகும்.

### ii. கர்ண பரம்பரைக் கதை

இவ்வாலயத்தின் தோற்றம் பற்றிப் பல்வேறு கர்ண பரம்பரைக் கதைகள் கூறப்படுகின்றன. அவற்றினுள் இரண்டினை இங்கு நோக்கலாம். ஈழத்தின் வடபகுதியில் விஜயன் ஈழநாட்டிற்கு வருவதற்கு முன்னரே இயக்கர், நாகர் என்னும் இரு இனத்தவர் வாழ்ந்து வந்தனர் என்பர். சிவபக்தர்களான அவர்கள் சிவனை முழுமுதற் பொருளாகக் கொண்டு வழிபடுபவர்கள். ஆயினும், அவ்வப்போது தமது வழிபாட்டின் தேவை நோக்கிப் பல ஆலயங்களைக் கட்டினர். அவற்றினுள் ஒன்றே நயினை நாகபூஷணி அம்மன் ஆலயம் ஆகும்.

முற்காலத்திலே நயினை அம்பிகையை, நாகம் ஒன்று இத்தீவகத்தின் வடக்கே உள்ள புளியந்தீவிலிருந்து நாடோறும் பூக்கள் கொண்டு வந்து, பூசித்து வந்தது. ஒருநாள் பூக்கொண்டு வரும் வழியில் கருடனொன்று அதனைக் கண்டு கொல்ல முயன்றது. நாகம் அதனை கண்டு அச்சம்கொண்டு, கடலிலிருந்த கல்லொன்றுடன் சுற்றிக் கொண்டது. கருடன் பிறிதொரு கல்லில் அமர்ந்து கொண்டு, நாகத்தைக் கொல்லத் தருணம் பார்த்துக் கொண்டிருந்தது.

அச்சமயம் மரக்கலம் ஒன்றிலே அங்கு வந்த வணிகன் ஒருவன் இக்காட்சியை கண்டு, நாகத்தின் மீது அனுதாபம் கொண்டான். அவன் கருடனிடம் நீ நாகத்தினைக் கொல்ல வேண்டாம் என வேண்டிக் கொண்டான். கருடனோ "உனது செல்வங்கள் யாவற்றையும் என்முன் வைத்தால் நான் நாகத்தினைக் கொல்ல மாட்டேன்" என்று கூற வணிகனும் அவ்வாறே செய்தான். உடனே கருடன் அவ்விடத்தை விட்டுப் பறந்து சென்றது.



இலவச விநியோகத்திற்காக

அன்றிரவு அவனது அறையில் பேரொளி ஒன்று தோன்றிற்று. அவ்வொளி எதுவாய் இருக்கலாம் என நெருங்கிப் பார்த்தபொழுது அது விலைமதிப்பற்ற நவரத்தினங்களில் இருந்து தெறித்த ஒளி எனத் தெரிந்து கொண்டான். இது நயினை அம்பிகையின் திருவருட் செயல் என நினைத்து அம்பிகையைப் பூசிக்கும் பொருட்டு, நாகதீபத்துக்கு வந்து, தரிசித்து, அங்கு அம்பிகைக்குப் பெரும் கோயிலைக் கட்டினான்.

### iii. மூர்த்தி, தலம், தீர்த்தம்

இவ்வாலயம் இருநிலை விமானங்கள், மண்டபங்கள் என்பவற்றைக் கொண்டுள்ளது. கிழக்கு, தெற்கு வாசல்களில் முறையே, ஒவ்வொரு இராஜகோபுரங்கள், நவக்கிரகங்கள், பரிபாலக தெய்வங்கள், சூரியன், சந்திரன் முதலான அம்சங்களையும் உள்ளடக்கிய அமைப்பை உடையது. இவ்வாலயத்தின் மூல மூர்த்தியாக ஐந்து தலை நாகமும் அம்பாளும் இணைந்த தோற்றம் கருவறையில் உள்ளது. இவ்வாலயத்தின் தலவிருட்சம் வன்னிமரமாகும். இதன் தீர்த்தக்கேணி ஆலயத்தின் மேற்கில் அமைந்துள்ள **சித்தாமிர்த புட்கரணி** தீர்த்தமாகும்.

இவ்வாலயத்தில் நான்கு கால நித்திய பூசைகள் கிரமமாக நடைபெறுகின்றன. ஆனி மாதப்பூரணையைத் தீர்த்த நாளாகக் கொண்டு மகோற்சவம் ஆரம்பிக்கப்படுகின்றது. 1966 ஆம் ஆண்டுவரை பத்து நாட்களும் நடைபெற்றன. பின்னர் பதினைந்து நாட்கள் நடைபெறுகின்றன. இம் மகோற்சவத்தில் தேர்த்திருவிழாவும் தெப்பத்திருவிழாவும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை ஆகும். நாட்டின் பல்வேறு இடங்களில் இருந்தும் மெய்யடியார்கள் இவ்விழாக்களின் பொழுது அம்பாளைத் தரிசிப்பதற்காக வருகை தருவர். ஆனிமாதப் பூரணை நிலவொளியில் அலைகடல் மத்தியில் தெப்பத்தில் எழுந்தருளி, அம்மன் காட்சி கொடுப்பது அடியார்களின் மனதை விட்டு நீங்காத அற்புதக் காட்சியாகும். இவ்வாலயத்துச் சித்திரத் தேரில் அமைந்துள்ள நுண்ணிய சிற்ப வேலைப்பாடுகள் மனதைக் கவருவனவாகும்.

### iv. நூல்கள்

இவ்வாலயத்தின் மீது மெய்யடியார்கள் பலர் பிரபந்தங்கள் பாடியுள்ளனர். வண்ணை அமரசிங்கப் புலவர் நயினை நாகபூஷணி அம்மன் ஊஞ்சல் பாடலையும், அராலி முத்துக்குமாரப் புலவர் நயினை நாகேஸ்வரியம்மை பதிகத்தையும், நயினை வரகவி, நாகமணிப்புலவர் நயினைதீவு நீரோட்ட யமக அந்தாதியையும் பாடியுள்ளனர்.

## 5. நல்லூர்க் கந்தசுவாமி ஆலயம்



### i. அமைவிடம்

நல்லூர் என்பது ஒரு சிறிய நகரம். அது ஈழநாட்டின் வடபகுதியில் யாழ்ப்பாண மாவட்டத்தில் உள்ளது. முற்காலத்தில் இலங்கையின் வடபகுதியைத் தமிழ் மன்னர்கள் ஆட்சி புரிந்தனர். அக்காலத்தில் யாழ்ப்பாண இராச்சியத்திற்கு நல்லூர் என்னும் நகரமே இராசதானியாக இருந்தது. ஈழத்தின் வடபுலத்தில் புகழ்வாய்ந்த முருகன் ஆலயமாக விளங்குவது நல்லூர் ஆகும். நல்லூரில் நடுநாயகமாய் அமைந்த கந்தசுவாமி கோயிலைச் சூழ கிழக்கில் வெயிலுகந்த பிள்ளையார் கோயிலும், தெற்கில் கைலாசநாதர் கோயிலும், மேற்கில் வீரமாகாளியம் மன் கோயிலும், வடக்கில் சட்டநாதர் கோயிலும் அமைந்துள்ளன.

### ii. கர்ண பரம்பரைக் கதை

இவ்வாலயம் தமிழுக்கும் சைவத்திற்கும் அருந் தொண்டாற்றிய யாழ்ப்பாணத்தரசர்களது நேரடிப் பரிபாலனத்தில் இருந்து வந்ததும், அவர்களது முக்கிய வணக்கத்தலங்களில் ஒன்றாக இருந்ததும் நல்லூர்க் கந்தசுவாமி கோயிலாகும். இக்கோயில் ஆரியச் சக்கரவர்த்தியின் முதலமைச்சராக விளங்கிய புவனேகபாகு என்பவனால் கட்டப்பட்டதென்பர். இன்னொரு சாரார் யாழ்ப்பாண அரசைக் கைப்பற்றியாண்ட செண்பகப்பெருமாள் என்னும் புவனேகவாகுவினால் 1454 ஆம் ஆண்டு கட்டப்பட்டதென்பர். ஆனால், புவனேகவாகு என்பவரது பெயர் இவ்வாலய மகோற்சவங்களில் ஆலயக் கட்டியத்தில் கூறப்பட்டு வரும் வழக்கம் இன்றும் இருந்து வருவது குறிப்பிடத்தக்கது.

யாழ்ப்பாண அரச வீழ்ச்சியுடன் சைவ ஆலயங்கள் பல போர்த்துக்கேயரினால் இடித்தழித்துத் தரைமட்டமாக்கப்பட்டன. அப்படியாக அழிக்கப்பட்ட சைவக்கோயில்களுள் மகோன்னத நிலையிலிருந்த நல்லூர்க் கந்தசுவாமி கோயிலும் ஒன்றாகும். இந்த நல்லூர்க் கோயிலை அந்நியரால் அழிக்கமுடிந்ததே தவிர, அவனடியாரது

அகக்கோயில் வழிபாட்டை அவர்களால் அழிக்கவோ, அசைக்கவோ முடியவில்லை. எனினும், முருகப்பெருமானுக்குப் பழைய கோவிலுக்கு அண்மையில் 1734 ஆம் ஆண்டு புதிய சிறு மடாலயம் அமைத்தனர். அக்கால ஒல்லாந்தர் ஆட்சியில் சிறாப்பராக இருந்த இரகுநாதமாப்பாண முதலியார் தனது செல்வாக்கைப்பயன்படுத்தி, இம்மடாலயத்தைக் கற்களாலும், செங்கற்களாலும் கட்டுவித்து ஓட்டினால் வேயப்பட்ட கோயில் ஆக்கினார்

### iii. மூர்த்திச் சிறப்பு

அவ்வாலயம், இப்பொழுது மிகச் சிறந்த கோபுரமும், சுற்றுமதிலுங் கொண்ட அழகிய கோயிலாகக் காட்சியளிக்கின்றது. அவ்வாலயத்தின் மூலஸ்தானத்தில், முருகப்பெருமான் திருவுருவம் வைக்கப்படவில்லை. அதற்குப் பதிலாகக் கலியுக வரதனாகிய கந்தனின் கரத்தில் இருக்கும் அழகிய வேல் வைக்கப்பட்டுள்ளது.

### iv. பூசைகளும் விழாக்களும்

இன்று இவ்வாலயத்தில் நாள்தோறும் ஆறுகாலப் பூசைகள் நேரம் தவறாமல் குறித்த நேரப்படி நடைபெற்று வருகின்றன. சிறப்பு விழாக்களும் இதே ஒழுங்கில் நடைபெற்று வருகின்றன. ஒவ்வொரு மாதப் பிறப்பிற்கும் திருவனந்தற் பூசைக்கு முன்னதாகப் பூந்தோட்டத் திருமஞ்சக் கிணற்றில் தீர்த்தமும் நடைபெறுவது இவ்வாலய வழக்கமாகும். இங்கு மாதந்தோறும் கார்த்திகை உற்சவம் சிறப்பாக நடைபெறுவதுடன் சஷ்டிதோறும் செல்வமுத்துக்குமாரசுவாமிக்குத் திருமஞ்சனமும் நடைபெறும்.

இவ்வாலயத்தில் ஆவணிமாத அமாவாசையன்று தீர்த்தமும், முதல் நாள் தேர்த்திருவிழாவும் நடைபெறும். இக்காலத்தில் இங்கு வரும் பக்தர்கள் கூட்டம் பல்லாயிரமாக இருக்கும். தேர்த்திருவிழாவன்று மாலை தேர்முட்டியில் சண்முகப்பெருமாளுக்குப் பச்சை சாத்துதல் நடைபெறும். அர்ச்சனையும், அப்பொலிவோடு பெருமான் ஆலயத்திற்குத் திரும்பும் கோலமும் நெஞ்சை நெகிழவைப்பதாகும். பச்சை சாத்தி எழுந்தருளுவதன் நோக்கம் எல்லாச் சீவராசிகளுக்கும் எல்லா அநுக்கிரகங்களையும் செய்யும் கருத்தாவாகிய சதாசிவமூர்த்தியாக உள்ளவர் தானே என்பதையும், வேண்டுவர் வேண்டுவன ஈயும் தன்மையும் தனக்கே உள்ளது என்பதையும் காட்டி, எல்லா நலன்களையும் பெற்று, உய்ய வாருங்கள் என்று அருள் செய்யும் குறிப்பை உணர்த்துவதாகும்.

கோயிலின் கிழக்கு வாயிலைச் சிறந்த சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த ஐந்தடுக்குக் கோபுரமும், அதன் இருமருங்குமுள்ள அழகிய மணிக்கோபுரங்களும் ஆலயத்துக்கு அணி செய்கின்றன. தெற்கு வீதியில் இன்னொரு கோபுரம் அழகு செய்கிறது. இதற்கு நேராகத் தெற்குப்புற வெளிவீதிக்குத் தெற்கே அழகிய தீர்த்தக்கேணியும், தண்டாயுதபாணி கோயிலும் இருக்கின்றன. இத்திருக்கேணியிற்றான் மகோற்சவ காலத் தீர்த்தம் நடைபெறுகின்றது.

இத்தலத்தில், ஈழத்தில் நடமாடும் கோயில்களாக விளங்கிய யாழ்ப்பாணச் சித்தர் பரம்பரையில் வந்த செல்லப்பாச்சுவாமி, யோகர்சுவாமி போன்ற ஞானவான்கள் வந்து தரிசனஞ் செய்து நடமாடி இருக்கின்றனர்.

## 6. மண்டூர் முருகன் ஆலயம்

இலங்கையிலுள்ள சிறப்பு வாய்ந்த முருகன் ஆலயங்களுள் மண்டூர் முருகன் ஆலயமும் ஒன்றாகும்.



### i. அமைவிடம்

மட்டக்களப்பு நகரிலிருந்து தென்மேற்கே இருபத்தி நான்கு மைல் தொலைவில் மட்டக்களப்பு வாவிக்கு மேற்கே அமைந்துள்ளது. மண்டூர் முருகன் ஆலயம் இயற்கை எழில் கொஞ்சும் அமைதியான இடத்தில், மூன்று புறமும் மட்டக்களப்பு வாவியினால் சூழப்பட்டு, காடும் கழனியும் கொண்ட மருத நில வளம் கொழிக்கும் இயற்கைச் சூழலில் அமைந்துள்ளது.

### ii. ஆலய அமைப்பு

மண்டூர் முருகன் ஆலயத்தில், மூலவருக்குரிய ஆலயம் தென்திசை நோக்கியதாக அமைந்துள்ளது. பிரதான ஆலயத்தினைச் சூழ, உள்வீதியில் விநாயகர், வைரவர், நாகதம்பிரான், குமாரதம்பிரான் ஆலயங்களும், வெளிவீதியில் மூலவருக்குரிய ஆலயத்தின் இருமருங்கும் வலது பக்கத்தில் வள்ளியம்மன் ஆலயமும் இடது பக்கத்தில் தெய்வானையம்மன் ஆலயமும் அமைக்கப்பட்டுள்ளன.



இலவச விநியோகத்திற்காக

### iii. ஆலய வரலாறு

இவ்வாலயம் உருவானது தொடர்பாக, சீர்பாததேவியின் வரன்முறைக் கல்வெட்டு பின்வருமாறு குறிப்பிடுகின்றது. “சோழநாட்டு மன்னனின் மனைவி சீர்பாததேவி வீரமுனையை விட்டு, சிங்க நகருக்குச் செல்லும்போது தான் வழிபட்டு வந்த தங்க வேலை, தனது குல மக்களிடம் கையளித்துச் சென்றாள். சிறிது காலத்தின்பின் அவர்களிடையே ஏற்பட்ட முரண்பாடு காரணமாக, அவர்களில் சிந்தன் என்பவன் அவ்வேலினை எடுத்துக் கொண்டு வடக்கு நோக்கி வெகு தொலைவு சென்று, அங்கிருந்த தில்லை மரமொன்றில் பதித்து வைத்துவிட்டு, தனது உறவினர்களுடன் துறைநீலாவணையில் வாழ்ந்து வந்தான். சில நாட் கழிந்த பின், வேலினை எடுக்கும் முயற்சியில் ஈடுபட்டான். இறுதியில், தான் வைத்த இடத்தில் கொத்துப் பந்தலின் கீழ் அவ்வேல் இருப்பதைக் கண்டான். நாதனை வேடுவர் எனும் வேடர் குலத்தவர்களே அக்கொத்துப் பந்தலை அமைத்தவர்களாவர். பின்னர், சிந்தன் துறைநீலாவணை, குறுமண்வெளி ஆகிய இடங்களில் வாழ்ந்ததன் இனத்தவர்களுடன் அயற் கிராமங்களாகிய பெரிய கல்லாறு, கோட்டைக் கல்லாறு ஆகிய இடங்களில் வாழ்ந்த மக்களுடனும் சேர்ந்து, ‘தில்லை மண்டூர் முருகன்’ என நாமம் சூட்டி, ஆலயமாக அமைத்தான்.” சிந்தனின் வழி வந்தவர்களே, இவ்வாலயத்தின் பெரிய கப்புகனாராகக் கடமையாற்றுகின்றார்.

### iv. மூர்த்தி, தல, தீர்த்தச் சிறப்பு

இவ்வாலயம் மூர்த்தி, தல, தீர்த்தச் சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டது. மண்டூர் முருகன் ஆலயக் கர்ப்பக்கிருகத்தில், தங்கவேல் வடிவமாக முருகப் பெருமான் வீற்றிருந்து அருள் புரிகின்றார். இங்கு எப்போழுதும் கர்ப்பக்கிருகம் திரைச்சீலையால் மூடப்பட்டிருக்கும். இவ்வாலயத்தை, போர்த்துக்கேயர் அழிக்க வந்த போது, குழவிகள், தேனீக்கள் அவர்களைக் கொட்டி விரட்டின. முருகனின் இத்தகைய அருட் சிறப்புகள் பலவுள.

இவ்வாலயம் மட்டக்களப்புப் பிரதேசத்தில் உள்ள திருப்படைக்கோயில்களுள் ஒன்றாகும். இவ்வாலயத்தின் கோயில் அமைப்பு, பூசை வழிபாட்டு முறைகள் ஆகிய ஒற்றுமைகளின் நிமித்தம் மண்டூர்த் தலம், சின்னக் கதிர்காமம் என அழைக்கப்படுகின்றது. அவ்வாறே, இத்தலத்தில் அருள் வழங்கும் வேலாயுதமானது, ஆரம்பத்தில் தில்லை மரத்தில் வைத்து வழிபடப்பட்டதாலும் இப்பதி **தில்லை மண்டூர்** என வழங்கப்படுகின்றது.

மண்டூர் முருகன் ஆலய சுவாமி தீர்த்தமாடுவதற்கு இத்தலத்திற்குப் பின்புறமாக சுமார் அரை மைல் தொலைவில் மூங்கிலாற்றின் சங்கமம் உள்ளது. இத்தீர்த்தம் அடியார்களின் நோய், துன்பம், கவலைகளை நீக்கும் சிறப்பினை உடையதாகும்.

### v. ஆலயத்தின் பூசை முறை

இவ்வாலயத்தில் வாய்கட்டிச் செய்யும் பூசை செய்யும் மரபு உள்ளது. இது மௌன பூசை எனப்படும். இங்கு பூசை செய்யும் பூசகர், கப்புகனார் (கற்பகனார்) என அழைக்கப்படுவார். திரை திறந்து பூசை செய்யும் வழக்கமும் இங்கு இல்லை. கப்புகனார் அமுதுக் காவினைத் தூக்கிக் கொண்டு அமைதியாக நடந்து செல்லும் காட்சி பார்ப்போர்க்குப் பரவசம் ஊட்டுவதாக இருக்கும். பூசை முடிந்த பின்னர் கப்புகனார் வெளியே வந்து திரை முன் நின்று பூசையை ஏற்றருளுமாறு சங்கு முழங்க, மணியோசை ஒலிக்க கையெடுத்துக் கும்பிட்டு வேண்டுதல் செய்யும் காட்சி நம் மனதையும் உருக்கி மெய்மறக்கச் செய்துவிடும்.

### vi. விழாக்களும் மகோற்சவங்களும்

இவ்வாலய உற்சவம் ஆடிமாதப் பூரணை கழித்த பத்தாவது நாள் தொடங்கும். தொடர்ந்து இருபது நாட்கள் திருவிழாக்கள் நடைபெற்று இருபத்தோராம் நாளான ஆவணி மாதப் பூரணையன்று தீர்த்தோற்சவம் நடைபெறும். திருவிழாக் காலத்தில் வேடர் குடியில் உள்ளோருள் ஒருவர், வாய்க்குச் சீலை கட்டி, வில்லம்பு கைக்கொண்டு, புஷ்பக விமானத்தில் முன்னே பின் முதுகு காட்டாமல், வைத்தகண் வாங்காமல், அடிமேல் அடிவைத்து, சுவாமியைக் காவல் செய்யும் பாவனையில் வீதிவலமாக நடந்து வரும் காட்சி இன்றும் நடைமுறையில் உள்ளது. வேடர்களுக்கும் இவ்வாலயத்திற்குமுள்ள தொடர்பை இந்நிகழ்ச்சி குறிப்பிடுகின்றது. திருவிழாக்காலத்தில் ஆராத்திப் பெண்கள் மயங்கிவிழுவதும், கப்புகனார் தீர்த்தம் தெளித்து, திருநீறு இட்டு மயக்கந் தெளியச் செய்வதும் தீர்த்தமாடும் வேளையில் கப்புகனார் அறிவிழப்பதும் அவரைக் கைத்தாங்கலாகக் கொண்டு வந்து, சபாமண்டபத்துள் வைத்து, மயக்கந் தெளிவிப்பதும் இவ்வாலயத்தில் இடம்பெறும் அற்புதக் காட்சிகளாகும். உற்சவ காலங்களில் அடியார்கள் தங்குவதற்காக, ஆலயத்தைச் சுற்றிவர பல மடங்கள் உள்ளன. உற்சவ காலங்களில் ஏராளமான பக்தர்கள் காவடி எடுத்தும், பெண்கள் தீச்சட்டி எடுத்தும் தத்தம் நேர்த்திக் கடன்களை நிறைவேற்றுகின்றனர்.

இத் திருத்தலத்தில் மகோற்சவத்தைத் தவிர, கந்தசஷ்டி விரதம், திருக்கார்த்திகை என்பன மிகவும் சிறப்பான முறையில் இடம் பெறுகின்றன.

## vii. ஆலய நிருவாகம்

மண்டூர். குருமண்வெளி, துறைநீலாவணை, பெரியகல்லாறு, கோட்டைகல்லாறு அகிய ஐந்து கிராமத்தவர்களும் தேசத்து வன்னிமையுடன் இணைந்து, இவ் ஆலயத்தின் உற்சவங்களை நடத்தி வருகின்றனர்.

## viii. நூல்கள்

பல அற்புதங்களை நிகழ்சி. ஆடியர்களின் துயர்தீர்த்தருளும் மண்டூர் முருகன் மீது பல பெரியோர் பாடல்கள் பாடியுள்ளனர். அவற்றுள் வித்துவான் வைத்திலிங்க தேசிகர், பண்டிதர் முருகேசபிள்ளை, புலவர்மணி ஏ. பெரியதம்பிப்பிள்ளை, விநாசித்தம்பி ஆகியோர் பாடிய மண்டூர்ப் பதிகம், மண்டூர் இரட்டைமணிமாலை, மண்டூர் வடிவேலன் குறள், மண்டூர் முருகன் காவடிப்பாட்டு என்பனவும் மண்டூர்க்கவிஞர் மு. சோமசுந்தரம்பிள்ளை அவர்களது திருமண்டூர் முருகமாலை, திருமண்டூர் அந்தாதி, சைவப்புலவர் எஸ். தில்லைநாதன் அவர்கனது மண்டூர் முருகன் திருவிருத்தமாலை என்பன அவற்றுட் சிலவாகும்.

# 7. வல்லிபுர ஆழ்வார் ஆலயம்



வல்லிபுர ஆழ்வார் ஆலயம் பருத்தித்துறையிலிருந்து செம்பியன்பற்றுக்குச் செல்லும் வீதியில் ஆறு கிலோமீற்றர் தொலைவில் அமைந்துள்ளது.

## i. ஆலயவரலாறு

இவ்வாலயத்தின் வரலாற்றினை, பின்வரும் கதைமூலம் அறிந்து கொள்ளலாம். பாரத நாட்டிலே செல்வச் செழிப்புள்ள குடும்பத்தில் பிறந்த இலவல்லி நாகதோசத்தினால் புத்திரப் பேறற்று வருந்தினாள். அவள் புத்திரப் பேறு வேண்டி, சிவனை நோக்கித் தவஞ்செய்தாள். அவளின் தவத்தில் மகிழ்ந்த, சிவன் அவள் முன் தோன்றி, “நீ ஈழ நாட்டில் பிறப்பாய். அங்கு திருமால் உன்னை ஆட்கொண்டு குழந்தைப் பேற்றினைத் தந்தருள்வார்” எனக் கூறி மறைந்தார்.

இலவல்லி இலங்கையின் வடபகுதியில் பருத்தித்துறைப் பகுதியில் அமைந்த வல்லிபுரம் என்னுமிடத்தில் செல்வப் பெருக்கும் கடவுள் பக்தியும் நிறைந்த குடும்பத்தில் பிறந்தாள். அவள் திருமணமாகியும் பிள்ளைப் பேறின்றி வருந்தி, திருமாலை நினைத்து வழிபட்டு வந்தாள். அக்காலப் பகுதியில் விஷ்ணு மீனாகத் தோன்றி வங்கக்கடலில் மீனவர்கட்கு பெருந்தொல்லை கொடுத்து வந்தார். இலவல்லி, இயற்கையை இரசிக்க விரும்பியவளாய், கற்கோவளத்தை அடைந்து கடலில் விளையாடினாள். பின்னர், படகிலேறி கடலில் சிறிது தூரம் சென்றாள். அவ்வேளை மீனொன்று படகிலிருந்த அவள் மடியில் பாய்வதும், மீண்டும் கடலில் குதிப்பதுமாய் விளையாடி வந்தது. இலவல்லியின் மடியில் பாய்ந்த மீன் அவளுக்கு அழகிய குழந்தையாகவும் சங்கு, சக்கரம் முதலியவற்றைக் கொண்டதாகவும் காட்சியளித்தது. அதனால் இலவல்லி, தன் பூர்வீக பலனை நினைத்து மகிழ்ச்சியுற்றாள். இறுதியில் அம்மீன் சக்கர வடிவத்தை இலவல்லிக்கு அளித்து விட்டு மறைந்தருளியது. இலவல்லி தன் முன்னே மச்சமாய், மகவுமாய்க் காட்சியளித்த மாயவனருளிய சக்கர வடிவத்தை வல்லிபுரத்துக்குக் கொண்டுவந்து ஆலயம் அமைத்து, அதனை நிறுவி வழிபட்டு வந்தாள். இலவல்லியின் ஆழ்ந்த பக்தியின் அடிப்படையில் கட்டப்பட்டமையால், இவ்வாலயத்துக்கு **வல்லிபுர ஆழ்வார் ஆலயம்** என வழங்கப்பட்டது.

## ii. மூர்த்திச் சிறப்பு

திருமால் ஆலயங்களிலே, மூலமூர்த்தி நின்ற கோலத்திலும், கிடந்த கோலத்திலும் அமைந்திருப்பதைக் காணலாம். ஆனால், வல்லிபுர ஆழ்வார் ஆலயத்தின் மூலமூர்த்தி விஷ்ணுவின் சக்கரமான சுதர்சனமாகும். அது. பஞ்சலோகத்தாலானதாகும். சக்கரத்தை மூலஸ்தானத்தில் தாபித்து வழிபடும் ஒரேயொரு ஆலயம் வல்லிபுர ஆழ்வார் ஆலயமாகும். இவ்வாலயத்தின் வசந்த மண்டபத்திலுள்ள பஞ்சலோகத்திலான சக்கராயுதம் என்னும் சக்கரத்தாழ்வார். விழாக்காலங்களில் வீதியுலா வருவார். இவரைச் சுதர்சனமூர்த்தி எனவும் அழைப்பர்.

## iii . ஆலய அமைப்பு

வல்லிபுர ஆழ்வார் ஆலயத்தின் நான்கு திசைகளிலும் நான்கு திருவாசல்கள் உள்ளன. கிழக்கு வாசலில் இராஜகோபுரமும் தென்மேற்கில் விநாயகர் ஆலயமும் அமைந்துள்ளன. மகா மண்டபத்திற்குத் தெற்கு நோக்கி பூமாதேவி, ஸ்ரீதேவி சமேதரராக விஷ்ணு வீற்றிருக்கின்றார். கொடிக்கம்பத்தின் வடக்கே நவக்கிரகம் உள்ளது.



இலவச விநியோகத்திற்காக

வடக்கு வாசலின் மேற்குப் புறமாக நாச்சியார் கோயிலும், தென்மேற்கிலுள்ள விநாயகருக்கு இடப்பக்கமாக நாகதம்பிரான் ஆலயமும் அமைந்துள்ளன. கிழக்கு வாசலின் வடக்குத் திசையில் மணிக் கூட்டுக்கோபுரம் காணப்படுகின்றது. இதன் வடகிழக்குப் புறமாக மேற்கு நோக்கிய வண்ணம் ஆஞ்சநேயர் வீற்றிருக்கின்றார்.

### iv . பூசை, திருவிழாக்கள்

இவ்வாலயத்தில் தினமும் ஆறுகாலப்பூசை நடைபெறுகின்றது. புரட்டாதி மாதத்தில் வரும் அமாவாசையன்று ஆரம்பமாகும் மகோற்சவமானது, தொடர்ந்து பதினேழு நாட்களுக்கு நடைபெறும். மகோற்சவத்தின் ஒன்பதாம் நாளில் வெண்ணெய்த் திருவிழாவும், பதினோராம் நாளில் பாம்புத் திருவிழாவும், பன்னிரெண்டாம் நாளில் கம்சன் திருவிழாவும், பதின்மூன்றாம் நாளில் வேட்டைத் திருவிழாவும், பதினைந்தாம் நாளில் தேர்த்திருவிழாவும் மிகச் சிறப்பான திருவிழாக்களாகும். மகோற்சவத்தின் பதினாறாம் நாளில் தீர்த்தத் திருவிழா சமுத்திரத்தில் நடைபெறும். இதனைச் சமுத்திரத் தீர்த்தம் என்றும் **பட்டுத்தீர்த்தம்** என்றும் அழைப்பர். இறுதித் தீர்த்த விழா மகோற்சவத்தின் பதினேழாம் நாளில் நடைறெும். அன்று ஆலயத்தின் மேற்கேயுள்ள கேணியில் தீர்த்தோற்சவம் நடைபெறும். இதனைக் கேணித்தீர்த்தம் என்றழைப்பர்.

### v . நூல்கள், பிரபந்தங்கள்

இவ்வாலயத்தின் வரலாற்றைத் தட்சிணகைலாய புராணம், தட்சிணகைலாய மான்மியம், யாழ்ப்பாண வைபவமாலை என்பவற்றில் காணலாம். இவற்றுடன் சிங்கள மொழியிலெழுந்த சந்தேச காவியங்களிலும் இவ்வாலய வரலாறு பாடப்பட்டுள்ளது. அவற்றுள் கோகுல சந்தேச (குயில் விடுதூது) குறிப்பிடத்தக்கது. சக்கரத்தாழ்வாரின் திருவருளை வேண்டிப் புலவர்கள் வல்லிபுரத் திருவந்தாதி, குருக்கட்டுத் திருவந்தாதி, கருடன் தூது, வல்லிபுரநாதர் பதிகம், சிங்கை நகர்ப்பதிகம் முதலான பிரபந்தங்களைப் பாடியுள்ளனர்.

### 01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. பறாளை விநாயகர் வேறு எப்பெயர்களால் அழைக்கப்படுகிறார்? அதற்கான காரணத்தை எழுதுக.
2. இத்தலத்தின் மீது பாடப்பட்ட பள்ளு நூல் எது? அதன் ஆசிரியரின் பெயர் யாது?
3. நயினை நாகபூஷணி அம்மனின் மறு பெயர்கள் இரண்டு தருக.
4. இலங்கையிலுள்ள முருகன் ஆலயங்கள் இரண்டின் பெயர்களைத் தருக.
5. வல்லிபுர ஆழ்வார் ஆலயத்தின் அமைவிடத்தினைக் குறிப்பிடுக.

## செயற்பாடு

1. உங்கள் ஊரில் உள்ள விநாயகர் ஆலயம் ஒன்றுக்குச் செல்க. அவ்வாலயம் தொடர்பான பல்வேறு விடயங்களைச் சேகரித்து, காட்சிப்படுத்துக.
2. இலங்கையிலுள்ள சைவ ஆலயங்களையும், அவற்றின் அமைவிடங்களையும் எழுதி, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
3. தரப்பட்ட ஆலயங்களுடன் தொடர்புடைய கதைகளை எழுதி, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- **'தொல்லுலகும் போற்றும் சுழிபுரம்'** என்னும் கிராமத்திலே வயல் சூழ்ந்த மருதநிலத்தில் கிழக்கு நோக்கிய சந்நிதியைக் கொண்டதாக, பறாளை விநாயகர் ஆலயம் அமைந்துள்ளது.
- இலங்கையில் தான்தோன்றீச்சரங்கள் இரண்டு உள்ளன. அவை மட்டக்களப்புக் கொக்கட்டிச்சோலையிலும் ஒட்டுசுட்டானிலும் அமைந்துள்ளன.
- வல்லிபுர ஆழ்வார் ஆலயத்தின் மூலமூர்த்தியாக சுதர்சனமுர்த்தி உள்ளார்.
- இலங்கையிலுள்ள சிறப்பு வாய்ந்த முருகன் ஆலயங்களில் நல்லூர்க் கந்தசாமி ஆலயம், மண்டூர் முருகன் ஆலயம் என்பன அடங்கும்.
- நயினை நாகபூஷணி அம்மன் ஆலயம் சக்தி ஆலயங்களில் ஒன்றாகும்.

# 25 ஈழத்துச் சமய இலக்கியங்கள்

ஈழத்து அறிஞர்களால் எழுதப்பட்ட இலக்கியங்களில் சமய இலக்கியங்கள் முக்கியமானவை. அவற்றுள் விரதங்கள், தலங்கள் என்பவற்றின் மகிமைகளைக் கூறும் புராணங்கள் பற்றி இங்கு பார்ப்போம்.

**(அ) விரத மகிமை கூறும் புராணங்கள்**

ஒல்லாந்தர் காலத்திற் சமய உண்மைகளை விளக்கும் சைவ சமயம் சார்பான புராணங்கள் பல எழுந்தன. அவற்றுள் சிவராத்திரி புராணம், ஏகாதசிப் புராணம் என்பவை குறிப்பிடத்தக்கவை. அவை இரண்டும் காசியிலிருந்து வந்து சுன்னாகத்தில் குடியேறிய வேதியர் குலத்திற் பிறந்த வரதபண்டிதர் என்பவரால் இயற்றப்பட்டவையாகும். வரதபண்டிதர் கி.பி 18 ஆம் நூற்றாண்டில் இந்நூல்களை இயற்றினாரென்பர். ஒல்லாந்தர் காலத்தில் நிலவிய சமயச் சுதந்திரத்தின் வெளிப்பாட்டையும், அக்காலத்தில் தனிமனிதர்கள் ஈழத்தில் சைவமரபைக் காத்தளித்து நிலைநிறுத்திய தன்மையையும் அவரது பணிமூலம் நாம் அறியமுடிகின்றது.

**சிவராத்திரி புராணம்**

சிவனுக்குரிய முக்கிய விரதங்கள் பல உள்ளன. அவற்றுள், சிறந்த விரதமாகிய சிவராத்திரி விரதத்தின் வரலாறு, மகிமை, நோற்கும் முறை என்பன சிவராத்திரி புராணத்தில் கூறப்பட்டுள்ளன. இவற்றை சூதமுனிவர் மற்றைய முனிவர்களுக்கு விளக்குவதாக இந்நூல் அமைந்துள்ளது. சிவராத்திரி விரதத்தாற் பயனடைந்த பலரின் கதைகள் நூலில் இடம் பெற்றுள்ளன. வரதபண்டிதர் வடநூல்களிலுள்ள சிவராத்திரி மான்மியத்தைத் திரட்டி, ஒரு புராணமாகப் பாடியுள்ளார். அவரால் இயற்றப்பட்ட நூல்களுள் இது அளவிற் பெரியது; சொற்சுவை, பொருட்சுவை மிக்கது. காப்புச் செய்யுள் உட்பட எழுநூற்றுப் பதினைந்து செய்யுள்களையும் ஒன்பது சருக்கங்களையும் இந்நூல் கொண்டுள்ளது.

**ஏகாதசிப் புராணம்**

இது விஷ்ணுவுக்குரிய சிறந்த விரதமாகிய ஏகாதசி விரதத்தைப் பற்றிக் கூறும் புராணமாகும். ஏகாதசி விரதத்தின் மான்மியத்தை விரித்துக் கூறுவதால், **ஏகாதசிப்புராணம்** என்னும் பெயர் இந்நூலுக்கு வழங்கப்படுகின்றது. இப்புராணத்தில் ஏகாதசி விரத கால நிர்ணயம், விரத மகிமை, விரதம் அனுட்டித்தோர் சரித்திரம் என்பன கூறப்பட்டுள்ளன. அத்துடன், ஏகாதசிப் புராணம் கடவுள் வாழ்த்து, பாயிரம், ஆகியவற்றையடுத்து, காலநிர்ணயச் சருக்கம், உருக்குமாங்கதச் சருக்கம், வீமேகாதசிச் சருக்கம் என்பன கொண்டமைந்துள்ளது. மூன்று சருக்கங்களையும் இருநூற்றி ஐம்பத்தெட்டுச் செய்யுள்களையும் கொண்டுள்ள இந்நூல் சொற்பொருள் வன்மையும், கவித்திறனும் மிக்கதாகும்.

**(ஆ) தலமகிமை கூறும் புராணங்கள்**

புராண வகைகளுள் தல புராணங்களும் அடங்கும். தல புராணம் என்பது குறித்த தலத்திலுள்ள மூர்த்தி, தல, தீர்த்த விசேடங்களை எடுத்துக் கூறும் நூலாகும். இலங்கையில் எழுந்த தலமகிமை கூறும் தல புராணங்களுள் திருக்கரைசைப் புராணமும் ஒன்றாகும்.

திருக்கரைசைப் புராணம் .திருகோணமலைக்கு அருகில், மகாவலி கங்கைக் கரையில் அமைந்துள்ள கரைசை என்ற இடத்தில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானின் புகழை விரித்துக் கூறும் நூலாகும். கரைசையம்பதி '**அகத்தியத் தாபனம்**' எனவும் அழைக்கப்படுகின்றது. அகத்தியர் இத்தலத்தை தாபித்தாரென, திருக்கரைசைப் புராணம் குறிப்பிடுகின்றது. இந்நூலினை இயற்றியவர் பற்றித் தெரியாதாகையால், அவர் செய்த நூலின் பெயரால் அவரைக் கரைசைப் புலவர் என்று காரணப் பெயரால் அழைப்பர்.

இந்நூல் பாயிரத்துடன் இலங்கைச் சருக்கம், கங்கைச் சருக்கம், தாபனச் சருக்கம், பூசைச் சருக்கம் என்னும் சருக்கங்களையும் கொண்டதாக அமைந்துள்ளது. அவ்வகையில் திருக்கரைசைப் புராணம் சிறந்த தலபுராணமாக விளங்குகின்றது.

**பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.**

1. சைவசமயம் தொடர்கான புராணங்கள் 2 தருக?
2. ஏகாதசி விரதம் எக்கடவுளுக்குரியது?
3. தலபுராணங்கள் எவை பற்றி கூறுகின்றன.

**செயற்பாடு**

1. வரத பண்டிதர் இயற்றிய சிவராத்திரி புராணம், ஏகாதசி புராணம் என்பவற்றை ஆசிரியரின் உதவியோடு தேடி அறிக. அவற்றிலுள்ள முக்கிய விடயங்களை எழுதி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
2. திருக்கரைசைப் புராணம் தொடர்பான விடயங்களைத் தேடித் தொகுத்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

**பாடச்சுருக்கம்**

- ஒல்லாந்தர் காலத்தில் ஈழத்தில் சைவ மரபைக் காத்தளித்து நிலைநிறுத்தியவர்களில் வரதபண்டிதர் குறிப்பிடத்தக்கவர்.
- தல புராணம் என்பது குறித்த தலத்திலுள்ள மூர்த்தி, தல, தீர்த்த விசேடங்களை எடுத்துக் கூறும் நூலாகும்.
- இலங்கையில் எழுந்த தலமகிமை கூறும் தல புராணங்களுள் திருக்கரைசைப் புராணமும் ஒன்றாகும்.


இலவச விநியோகத்திற்காக

# 26 சைவ வித்யா விருத்திச் சங்கம்

ஈழத்தில் ஐரோப்பியர் ஆட்சிக்காலத்தில் நலிவுற்றிருந்த சைவத் தமிழ், கல்விப் பாரம்பரியத்தைப் பேணிப் பாதுகாத்து, அதன் வளர்ச்சிக்குப் பணியாற்றிய நிறுவனங்கள் பல உள்ளன. அவற்றுள் சைவ பரிபாலன சபை, சைவ வித்யா விருத்திச் சங்கம், கொழும்பு விவேகானந்த சபை என்பன குறிப்பிடத்தக்கன. இவற்றுள் சைவ வித்யா விருத்திச் சங்கத்தினதும் அதன் பணிகள் பற்றியும் இங்கு கற்போம்.

ஈழத்தில் ஐரோப்பியர் ஆட்சிக்காலத்தில் நலிவுற்றிருந்த சைவத் தமிழ், கல்விப் பாரம்பரியத்தைப் பேணிப் பாதுகாப்பதை நோக்கமாகக் கொண்டு, 1923 ஆம் ஆண்டு 29 ஆந் திகதி சைவ வித்யா விருத்திச் சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. சேர். பொன். இராமநாதன், இந்துபோர்ட். சு. இராசரெத்தினம் ஆகியோரே சைவ வித்யா விருத்திச் சங்கத்தின் ஆரம்ப கர்த்தாக்களாவர்.

சைவ வித்யா விருத்திச் சங்கம் தமது நோக்கத்தை நிறைவு செய்வதன் பொருட்டு, பின்வரும் பணிகளை ஆரம்பித்தன.

- சைவப் பாடசாலைகளை அமைத்தல்
- சைவப் பிள்ளைகளின் கல்விக்கு ஊக்கமளித்தல்
- சைவ ஆசிரியர்களைப் பயிற்றுவித்தல்
- சைவப் பண்பாட்டினைப் பேணிப் பாதுகாத்தல்
- சைவ சமயப் பரீட்சைகளை நடாத்துதல்

இச்சங்கம் இலங்கையின் பல பாகங்களிலும், அதாவது, யாழ்ப்பாணத்தில் வலிகாமம், வடமராட்சி, தென்மராட்சி என்னுமிடங்களிலும் புத்தளம், வவுனியா, முல்லைத்தீவு, சிலாபம், பதுளை, நாவலப்பிட்டி, கண்டி, கலகா ஆகிய இடங்களிலும் சைவத் தமிழ்ப் பாடசாலைகளை நிறுவியது இவற்றுடன், தனிப்பட்ட முகாமையாளர்களால் சங்கத்துக்கு ஒப்படைக்கும் பாடசாலைகளைப் பொறுப்பேற்று நடத்துதல், சைவப் பாடசாலைகளுக்கு வேண்டிய உதவிகளை வழங்குதல், சைவப் பிள்ளைகள் சைவப் பாடசாலைகளில் படிப்பதற்கு வசதியளித்து, அவ்வியக்கத்துக்கு உற்சாகம் ஊட்டல் முதலான பணிகளையும் இச்சங்கம் மேற்கொண்டது. இவ்வாறு சைவப் பிள்ளைகளின் கல்விக்கு ஊக்கமளித்தமை என்பன சைவ வித்யா விருத்திச் சங்கம் செய்த பெரிய சமூகத் தொண்டாகும்.

சைவ வித்யா விருத்திச் சங்கம் சைவத் தமிழ்ப் புலமையை வளர்க்கும் நோக்குடன் சைவாசிரிய பயிற்சிக் கலாசாலையைத் திருநெல்வேலியில் அமைத்தது. இவற்றுடன், நான்கு கைத்தொழில் நிலையங்களை நிறுவி, பொருளாதார மேம்பாட்டிற்கு உதவிபுரிந்தமை, விபூதி தரிக்கும் பண்பாட்டை சைவ மக்களிடையே வளர்த்தமை, சைவ அநாதை விடுதிகள் நிறுவியமை, தமிழ், இலக்கியம், சங்கீதம், நாடகம் வளர ஆவனசெய்தமை என்பன சைவ வித்யா விருத்திச் சங்கம் செய்த குறிப்பிடத்தக்க பணிகளாகும்.

சைவ வித்யா விருத்திச் சங்கத்தின் 1950 ஆம் ஆண்டறிக்கையின்படி, இச்சபையின் நிருவாகத்தின் கீழ் 120 பாடசாலைகளும் 24000 மாணவர்களும் 800 ஆசிரியர்களும் இருந்தனர். யாழ்ப்பாணம் சைவாசிரிய கலாசாலையுடன், ஏழு ஆங்கில வித்தியாசாலைகள், நூற்றியேழு தமிழ் வித்தியாசாலைகள், இரு ஆண், பெண் விடுதிகள், நான்கு கைத்தொழில் நிலையங்கள் என்பனவற்றையும் நிருவகித்து இச் சங்கம் பெரும்பணியாற்றியுள்ளது.

01. பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. ஈழத்தில் ஐரோப்பியர் ஆட்சிக்காலத்தில் சைவத் தமிழ், கல்விப் பணியாற்றிய நிறுவனங்கள் மூன்றினைத் தருக.

2. உமது வித்யா விருத்திச் சங்கம் தமது நோக்கத்தை நிறைவு செய்வதன் பொருட்டு, மேற்கொண்ட பணிகளைக் குறிப்பிடுக.

3. இலங்கையில் சைவ வித்யா விருத்திச் சங்கத்தால் நிறுவப்பட்ட, சைவத் தமிழ்ப் பாடசாலைகளைக் குறிப்பிடுக.

**செயற்பாடு**

1. சைவ வித்யா விருத்திச் சங்கம் தொடர்பான மேலதிக விபரங்களைத் தொகுத்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

2. உமது பிரதேசங்களிலுள்ள சைவத் தமிழ், கல்விப் பணியாற்றுகின்ற நிறுவனங்கள் அல்லது சங்கங்கள் தொடர்பான மேலதிக விபரங்களைத் தேடித் தொகுத்து, வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

## பாடச்சுருக்கம்

- ஈழத்தில் ஐரோப்பியர் ஆட்சிக்காலத்தில் நலிவுற்றிருந்த சைவத் தமிழ், கல்விப் பாரம்பரியத்தைப் பேணிப் பாதுகாப்பதற்காக சைவ வித்யா விருத்திச் சங்கம் ஆரம்பிக்கப்பட்டது.
- சேர். பொன். இராமநாதன், இந்துபோர்ட். சு. இராசரெத்தினம் ஆகியோர் சைவ வித்யா விருத்திச் சங்கத்தின் ஆரம்ப கர்த்தாக்களாவர்.


இலவச விநியோகத்திற்காக

# 27 சமயமும் சூழலும்

சமயமும் சூழலும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை. சூழல் இன்றிச் சமயம் நிலைத்து நிற்க முடியாது. அவ்வாறே, சமயம் இன்றி சூழல் தனித்து இயங்கவும் முடியாது. முற்காலத்தில் சூழல் பற்றிய அறிவு வாழ்க்கை நடைமுறைகளோடு நன்கு இயைவுபடுத்தப்பட்டிருந்தது. அதனால், பருவமாற்றங்கள் உணரப்பட்டன. உணவு, உடை, மொழி என்பவற்றினூடாக அவை குழந்தைகளுக்குப் பயிற்றப்பட்டன. விழாக்கள், வழிபாடுகள் ஊடாக அவை மரபாகப் பேணப்பட்டன.

சமயத்துக்கும் சூழலுக்கும் நிலைக்களனாக விளங்குபவை ஆலயங்களாகும். ஆலயம் ஒரு சமூக நிறுவனம் என்ற வகையில் அதன் சமூகத்தை நோக்கிய பணிகள் பலவுள. ஆலயம் இளைஞர்களை மையமாகக்கொண்டு, சமூகத்தில் ஒற்றுமையையும் நல்லொழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் வளர்க்கும் முயற்சிகளிலும் சமயத்தைச் சமுதாயத்தில் நிலைநிறுத்திக் காட்டும் செயற்பாடுகளிலும் ஈடுபட முன்வரவேண்டும். அவ்வகையில், சமய, சமூகத் தொண்டுகளான பூசை, வழிபாடு, கூட்டுப் பிரார்த்தனை, ஆலயத் தொண்டுகளில் ஈடுபடுதல், சிரமதானம், சமூகசேவைகள், சமுதாயத்தை முன்னேற்றும் பணிகள் முதலான தன்னலமற்ற சேவைகளில் பங்கேற்றல், தலயாத்திரை மேற்கொள்ளல் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

நாம் செய்யும் தொண்டுகள், சமூக சேவைகள் என்பன ஆண்டவனுக்குச் செய்யும் வழிபாடாகும். 'மக்கள் சேவையே மகேசன் சேவை' என்ற கூற்றும் இதனையே வலியுறுத்துகின்றது. இதனை மனதார ஏற்றுக்கொண்டு செயற்படும் பக்குவத்தை எமது மதத்தின் ஆணிவேராக்கி, சமயத்துடன் சமூகத்தையும் அதன் சூழலையும் கட்டியெழுப்ப வேண்டும். எமது சமயத்தில் சமூகசேவைச் செயற்பாடுகள் பலவற்றை உருவாக்கி, சமய நிறுவனங்களும் மக்களும் அவற்றில் ஈடுபடுவதை ஊக்குவிக்க வேண்டும். நால்வர் காட்டிய வழியில் நாமும் எமது சமயத்தையும் சூழலையும் வளர்க்க ஒன்றிணைந்து செயற்பட வேண்டும். இதனையே, நாயன்மாருள் நாவுக்கரசரும் மேற்கொண்டார். அவர் உழவாரப்படையை ஏந்தி, ஆலயத்திலுள்ள புல்லையும், முள்ளையும் களைந்தெடுத்து, சூழலில் தூய்மையை ஏற்படுத்தினார். அதனைத் தெய்வத்தொண்டாகச் செய்தார். அப்பணியின் மூலம் தம்மிடமிருந்த அகங்காரத்தைத் துடைத்துத் தள்ளினார்.

நாவுக்கரசரைப் போன்று, ஸ்ரீஇராமகிருஷ்ணரும் சூழலில் தூய்மையை ஏற்படுத்தியவர். அவர் நள்ளிரவில் சேரிப்பகுதிகளுக்குச் சென்று, தம் தலைமுடியினால் சேரியைத் துப்பரவு செய்தார். இவ்வாறு சமூகப்பணியைத் தெய்வப்பணியாகச் செய்யும் போது, உலக நலன் நிறைவு பெறுவதுடன் அவர்களுக்கு மனப்பக்குவமும் ஏற்படுகின்றது.

கூட்டுப் பிரார்த்தனையை ஆலயங்களிலும் பாடசாலைகளிலும் நடாத்துவது அவசியம். இதன் மூலம் சிறுவர்கள், இளைஞர்கள், பெரியோர்கள் அனைவரும் ஈடுபட வாய்ப்பு ஏற்படும்.

பிரதேச ரீதியாக சமய அமைப்புக்களை, ஏற்படுத்துவதன் மூலம் சமயத்தையும் சூழலையும் வளர்ச்சியடையச் செய்ய முடியும். இந்து இளைஞர் மன்றம் போன்றவற்றை ஆரம்பித்து, அதன் மூலம் சூழலில் இடம்பெறும் இன்ப துன்பங்களில் ஈடுபடுவதுடன், பொதுவிழாக்கள், சமயவிழாக்கள் என்பவற்றை முன்னின்று நடாத்தவும் வாய்ப்பு ஏற்படும்.

பிரசித்தி பெற்ற தலங்களுக்குத் தலயாத்திரைகள் மேற்கொள்ளல் சிறப்பான செயற்பாடாகும். ஆலயங்களில் திருவிழாக்கள் தொடங்கிவிட்டால், ஊர் முழுவதுமே புனிதமாகிவிடும். அவ்வாறு தலயாத்திரை மேற்கொள்ளும் போது நன்கு திட்டமிட்டு ஒழுங்குபடச் செல்வதன் மூலம் சமயத்தையும் சூழலையும் ஒன்றிணைக்கலாம். அதனூடாக சமூகத்தில் ஒற்றுமை, புரிந்துணர்வு என்பனவும் சமய நம்பிக்கையும் வளர்ச்சி அடையும். தலங்களிலே பேணிப் பாதுகாத்து வைத்திருக்கும் பாரம்பரிய உரிமைச் சின்னங்களையும் தல மகிமைகளையும், சிறப்புக்களையும் அறிந்து கொள்ளவும் வாய்ப்பு ஏற்படும்.



இலவச விநியோகத்திற்காக

சிரமதானத்தின் மூலம் சூழல் நன்மை பெறுகின்றது. ஆலயங்களின் சுற்றுச் சூழலைத் துப்பரவு செய்தல் முக்கியமான ஒரு பணியாகும். அதன் மூலம் பொறுப்புணர்வு, ஒற்றுமை என்பன விருத்தியடையும். நல்ல சைவசமயி சூழலுக்கு இசைவான மனிதனாகவும் இருப்பான் என்பதை வெளிப்படுத்தக்கூடிய செயற்பாடுகளை நாம் முன்னெடுத்தல் வேண்டும். எமது சமயமரபில் சமயப்பணியுடன் சமூகப்பணியும் இரண்டறக் கலந்து நிற்கின்றன. சமயப் பணியாற்றும் நிறுவனங்கள் தங்கள் பணிகளை சமூக நலப் பணியிலும் ஈடுபடுத்திக் கொள்ள வேண்டியது காலத்தின் கட்டாயமாகும்.

**பின்வரும் வினாக்களுக்கு விடை தருக**

1. சமயத்துக்கும் சூழலுக்கும் நிலைக்களனாக உள்ளவை யாவை?
2. மக்கள் சேவையே மகேசன் சேவை என்ற சொற்றொடர் யாருக்கு செய்யும் வழிபாடாக கருதப்படுகின்றது?
3. சூழலில் தூய்மையை ஏற்படுத்திய இருவரின் பெயர்களைக் குறிப்பிடுக?

## செயற்பாடு

1. 'மக்கள் சேவையே மகேசன் சேவை' என்னும் தலைப்பில் 5 நிமிடம் உரை நிகழ்த்துக.

2. சமயமும் சூழலும் ஒன்றையொன்று வளர்த்துச் செல்லக்கூடிய செயற்பாடுகளைத் திட்டமிடுக. அவற்றை உங்களின் நாளாந்த வாழ்வில் நடைமுறைப்படுத்துக.

3. நீங்கள் சமூகப் பணியைச் சரிவர நிறைவேற்றியதனால் பெற்ற நன்மைகளை வகுப்பறையில் எடுத்து கூறி அவற்றை அட்டவணைப்படுத்தி காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- நாம் செய்யும் தொண்டுகள், சமூக சேவைகள் என்பன ஆண்டவனுக்குச் செய்யும் வழிபாடாகும்.
- நாம் செய்யக்கூடிய சமய சமூகத் தொண்டுகள் பல உள்ளன. அவற்றைச் செய்ய முன்வரவேண்டும்.
- நாவுக்கரசர் உழவாரத் தொண்டின் ஊடாக சமய, சமூகப் பணி புரிந்தார்.



இலவச விநியோகத்திற்காக

## சைவ நெறி தரம் - 10 - பாடத்திட்டம்

1.0 அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் வகையில், சமய ஒழுகலாறுகளை, இறை சிந்தனையுடன் கடைப்பிடிப்பர்.

1.1 கடவுள் உள்பொருள் என்பதையும், எல்லாச் செயல்களுக்கும் அவரே காரணம் என்பதையும் ஏற்று, தத்துவ நோக்கில் விளக்குவர்.

- **கடவுள்**
  - கடவுளின் தத்துவத்தை சைவசித்தாந்த நூல்கள் ஊடாக விளக்குதல்
  - கடவுளின் இயல்புகளை எடுத்துக்காட்டுகள் மூலம் முன்வைத்தல் (திருமுறைகள், தோத்திரப் பாடல்கள்)

1.2 நாளாந்தக் கடமைகளிலும், ஏனைய செயற்பாடுகளிலும் இறை சிந்தனையுடன் ஈடுபடுவர்.

- **வீட்டில் சமயம்**
  - வீட்டில் சமய அனுட்டானங்களையும், வழிபாடுகளையும் கடைப்பிடித்தல்
  - விசேட தினங்களில் (பண்டிகைகள், விரதங்கள்), பின்பற்ற வேண்டிய நடைமுறைகளைத் தொகுத்துக் கூறுதல்.
- **பாடசாலையில் சமயம்**
  - பாடசாலையில் நாயன்மார், சைவப்பெரியார் குருபூசைகளைக் கொண்டாடுதல்: அவை பற்றி விபரித்தல்
- **கோயிலும் சமயமும்**
  - கோயில் வழிபாட்டு முறைகளை அறிதலும், பின்பற்றலும்
- **கோயிலின் அமைப்புப் பற்றி விபரித்தல்**
  - கோயிலிலுள்ள வெவ்வேறு விக்கிரகங்களை இனங்கண்டு விளக்குதல்
  - கோயிற் கிரியைகளில் நித்திய, நைமித்திய, காமிக கிரிகைகள் பற்றி சுருக்க விளக்கம் பெறல்.
  - பிரம்மோற்சவம் பற்றி அறிதலும், ஆலயத்துக்கும் சமூகத்துக்குமிடையே உள்ள உறவுகளை இனங்காணலும், அவற்றைக் கடைப்பிடித்தலும்.

1.3 வாழ்வின் பல்வேறு கட்டங்களிலும் சமய ஒழுகலாறுகளையும், வழக்காறுகளையும் பின்பற்றுவர்.

- **சமய விழுமியங்கள்**
  - தனி மனிதனின் உளவிருத்திக்கு அடிப்படையாக உள்ள, மனித நேயத்தை வாழ்வில் கடைப்பிடித்தல்.
  - நற்பண்புகளைக் கடைப்பிடித்தல்
  - தியாக மனப்பாங்கு, ஏழை எளியவர்களுக்கு இரங்குதல்/உதவுதல்
  - பிறரில் நிறை காணல்
  - பிறரை நேசித்தல், பிறரின் கஷ்டங்களுக்காகப் பிரார்த்தித்தல்
  - உலகம் தழுவிய அன்பு

    ("யாதும் ஊரே: யாவருங் கேளீர்..."

    "எல்லாரும் இன்புற்றிருப்ப...."

    "இன்பமே சூழ்க, எல்லோரும் வாழ்க")

1.4 வாழ்வியல் சடங்குகளையும், அவற்றின் முக்கியத்துவங்களையும் இனங்கண்டு, அவற்றை முறைப்படி கடைப்பிடிப்பர்.

- தொழில் அடிப்படையிலான சடங்குகளை அவதானித்தல்: அவை பற்றி விபரித்தல்

- **வாழ்வியல் சடங்குகள்**
  - ஏர்மங்கலம்
  - முளைப்பாலிகை
  - பொலிச்சடங்கு
  - ஆயுதபூசை
  - விரதங்கள், அவற்றின் சமய, சமூக முக்கியத்துவம் என்பவற்றை விளங்கி, விரதங்களை அனுட்டித்தல்.
- **விரதங்கள்**

| | |
|---|---|
| மாத விரதங்கள் : | தைப்பூசம் |
| | மாசிமகம் |
| | பங்குனி உத்தரம் |
| | பங்குனித் திங்கள் |
| கடவுளுக்குரிய விரதங்கள் : | பெருங்கதை விரதம் |
| | திருவாதிரை விரதம் |
| | திருப்பாவை |
| | கந்தசஷ்டி விரதம் |
| | கேதார கௌரி விரதம் |


இலவச விநியோகத்திற்காக

- பண்டிகைகள் உணர்த்தும் முக்கிய பண்புகளைக் கடைப்பிடித்தல்

- **பண்டிகைகள்**
  - தைப்பொங்கல்
    நன்றி மறவாமை
    கொடுத்துண்ணும் பண்பு
  - சித்திரை வருடப்பிறப்பு
    பெற்றோர், பெரியோருக்கு வணக்கம் செலுத்தல்
    உறவு விருத்தி
    கொடுத்துண்ணும் பண்பு
    மகிழ்ச்சி உணர்வு

2.0 சமய நம்பிக்கையே பக்தியின் அடிப்படை என்பதை உணர்ந்து, அவற்றைப் பின்பற்றுவர்.
- தீவிர பக்தியூடாகவும் இறைவனை அடையாளாம் என்பதை விளக்குதல்
- தீவிர பக்தியாளர்களை இறைவன் தம்முடைய ஆணைக்குட்படுத்தி, அவர்களை முதன்மைப்படுத்துவார் என்பதைக் கதையூடாக விபரித்தல்

- சண்டேஸ்வர நாயனார்

3.0 திருமுறைப்பாடல்கள், பாசுரங்கள், தோத்திரப் பாடல்கள் ஆகியவற்றின் முக்கியத்துவத்தை இனங்கண்டு, அவற்றைத் தேவையான இடங்களில் கடைப்பிடிப்பர்.

3.1 திருமுறைகளையும், பாசுரங்களையும், தோத்திரப் பாடல்களையும் இனம்காண்பர்: பண்ணோடும் பக்தியோடும் பாடுவர்.
- பிழையறப் பாடுதல்: பண்ணோடு பாடுதல், பக்தியை வெளிப்படுத்தும் வகையில் பாடுதல்.
- பொருள் கூறுதல்
- பொழிப்புரை எழுதுதல்
- சந்தர்ப்பம் கூறுதல்
- அருஞ் சொற்களை விளக்குதல்

திருமுறைப் பாடல்கள் (மனனத்திற்குரியவை)

**1. திருஞானசம்பந்த நாயனார் தேவாரம்**
(அ) சிறையாரும் மடக்கிளியே...
(ஆ) இடரினும் தளரினும்....
(இ) வேயுறுதோளி பங்கன்....

**2. திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்**
(அ) திருவே என் செல்வமே....
(ஆ) "திருக்கோயில் இல்லாத...."
(இ) "சங்கநிதி பதும நிதி...."

**3. சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்**
(அ) "கோலமால் வரை..."
(ஆ) "ஆலந்தானுகந்து..."
(இ) "மூவரென இருவரென..."

**4. மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகம்**
(அ) "ஆதியும் அந்தமும்..."
(ஆ) "தந்துன்றன்னை..."
(இ) "மாறிநின்று.."

**5. திருவிசைப்பா**
(அ) "நீறணி பவளக்குன்றே..."

**6. திருப்பல்லாண்டு**
(அ) "தாதையைத் தாளற..."

**7. திருமூலர் திருமந்திரம்**
(அ) "சிவ சிவ என்கிலர்.."

**8. மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை (கபில தேவ நாயனார்)**
(அ) "விநாயகனே..."

**9. பெரிய புராணம்**
(அ) "ஆதியாய் நடுவுமாகி..."

**10. திருப்புகழ்**
(அ) "பாதிமதி நதி..."

3.2 திருமுறைகளின் வைப்பு முறைகளையும், நாலாயிர திவ்விய பிரபந்தத்தின் தொகுப்பு முறைகளையும், தோத்திரப் பாடங்களின் தனித்துவத்தையும் விளக்குவர்.

- திருமுறைகளும் தோத்திரப் பாடல்களும்
- பன்னிரு திருமுறைகள் எவையெனவும், அவற்றின் ஆசிரியர்களையும் விபரித்தல்.
- திருமுறைகளைத் தொகுத்தவர், தொகுப்பித்தவர் பற்றிக் குறிப்பிடல்
- நாலாயிர திவ்விய பிரபந்தத்தின் தொகுப்பு பற்றி விளக்கல்
- தோத்திரப் பாடல்கள், அவற்றின் தனித்துவத் தன்மைகளை எடுத்துக் கூறல்.



இலவச விநியோகத்திற்காக

3.3 திருமுறைகளில் காணப்படும் புராண, இதிகாசக் கதைகளையம் நாட்டார் வழக்காறுகளையம் இனங்காண்பதுடன், அவற்றிலே முன் வைக்கப்பட்டுள்ள அறிவுரைகளை - கருத்துக்களை வாழ்க்கையில் கடைப்பிடிப்பர்.

3.4 பெரிய புராணத்திலிருந்து தெரிவு செய்யப்பட்ட பாடல்களை அடிப்படையாகக் கொண்டு, சமய உணர்வுகளை விருத்தி செய்வர்.

- **சமய இலக்கியம்**

  பெரிய புராணம் (தடுத்தாற் கொண்ட புராணம்)

- கதைச் சுருக்கத்தைக் கூறுதல்
- அறப்பண்புகள், தத்துவக் கருத்துக்களை இனங்கண்டு விளக்குதல்
- வகுத்தும் தொகுத்தும் கூறுதல்
- இரசனை உணர்வை வளர்த்தல்
- புராண படனஞ் செய்து வழிப்படுத்துதல்

4.0 சமய வழிபாட்டு முறைகளை விதிப்படி பேணுவர்.

4.1 ஆலயக் கிரியைகளின் தத்துவ நோக்கினை விளக்கமாக விபரிப்பர்.

- **ஆலயக் கிரியைகள்**

- நித்திய, காமிகக் கிரியைகள், அவற்றின் தத்துவங்களை விளக்குதல்
- நைமித்திய கிரியைகளை விளக்குதல்
- மகோற்சவங்களின் ஒழுங்குமுறை, அவற்றின் தத்துவங்கள் என்பவற்றை எடுத்துரைத்தல்.
- மகோற்சவங்களுக்கும் சமூகத்துக்கும் இடையிலான உறவை இனங்கண்டு அவற்றை விருத்தி செய்தல்.

5.0 சமயப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து, அவற்றை முன் மாதிரியாகக் கொண்டு ஒழுகுவர்.

5.1 நாயன்மார், சந்தான குரவர்கள், சித்தர்கள், இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் வாழ்ந்த பக்தியாளர்கள், சமயம் வளர்த்த பெரியார்கள் ஆகியோரது வரலாறுகளையும் பணிகளையும் அறிந்து அவற்றை விபரிப்பர். அவர்களுக்கு மதிப்பளித்து அவர்கள வழி ஒழுகுவர்.

- **நால்வர் பணி**

- நாயன்மார்களின் பக்தி அனுபவங்களையும் அவர்களின் தலைமைத்துவப் பண்புகளையும் இனங்காணல்.
- நாயன்மார் கடைப்பிடித்த சமய, சேவைகளைப் பின்பற்றுதல்

- **சந்தான குரவர் - அறிமுகம்**

- சந்தான குரவர் பரம்பரை பற்றியும் அவர்களது பணிகள் பற்றியும் விளக்குதல்.

- **சித்தர்கள் - அறிமுகம்**

- சித்தர்களின் வாழ்க்கையும், அனுபவங்களும்
- சமயம் வளர்த்த பெரியார்கள் பற்றி அறிதலும், அவரது பணிகளை இனங்கண்டு மதிப்பளித்தலும்.

- **அபிராமிப்பட்டர்**

- இலங்கையில் சமய சீர்திருத்தவாதிகளாகவும், தொண்டர்களாகவும் விளங்கியவர்களின் பணிகளை மதிப்பிடல்.

- **இந்துபோர்ட் இராஜரட்னம்**
- **சேர். பொன். இராமநாதன்**

6.0 சைவ சமயத்தின் தத்துவக் கோட்பாடுகளை விளங்கி, தெளிவு பெறுவர்/வெளிப்படுத்துவர்.

- **முப்பொருள் விளக்கம் - (சாத்திர நூல்களினூடாக)**

6.1 சைவ சித்தாந்தம் ஏற்றுக் கொள்ளும் முப்பொருள் உண்மைகளையும் அதன் இயல்புகளையும் நூலாதாரங்களுடன் விளக்குவர்.

- பதியின் இயல்பை அறிதல், விபரித்தல்
- பசுவின் இயல்பை எடுத்துக்கூறல்
- பசுவுக்கும், பதிக்கும் இடையிலான தொடர்பை இனங்காணல்
- பாசத்தின் இயல்பு பற்றி விளக்கல்
- பாசத்திற்கும், பசுவிற்கும் இடையிலான தொடர்பினை எடுத்துக் கூறி விளக்குதல்
- பாசத்திலிருந்து பசு விடுபடும் மார்க்கங்களைக் கூறல்

6.2 விதிக்கப்பட்ட திருவருட்பயன் அதிகாரங்களை (1-5) அடிப்படையாகக் கொண்டு, முப்பொருள் உண்மைகளை வகுத்தும், தொகுத்தும் கூறுவர்.

- திருவருட்பயன் (1 - 5 அதிகாரங்கள்)

- திருவருட்பயன் பாடல்களை மனனம் செய்தல்

- அதிகாரங்களில் உள்ள கருத்தக்களைத் தொகுத்துக் கூறுதல்
- தேவையானவிடத்து திருவருட்பயன் பாடல்களை மேற்கோள் காட்டும் திறனைப் பெறுதல்.

6.3 ஆன்மீக விடுதலைக்கான மார்க்கங்களைக் கடைப்பிடிப்பர். குரு லிங்க சங்கம வழிபாடு.

7.0 நாட்டார் சமய வழிபாடுகளையும், வழக்காறுகளையும் அறிந்து, அவற்றுக்கு மதிப்பளிப்பர்.

7.1 நாட்டார் தெய்வங்கள், அவற்றின் வகைகள் பற்றி விளக்குவர்.

- **நாட்டார் தெய்வங்கள்**

- நாட்டார் தெய்வங்களின் ஆற்றலை அறிந்து, அவற்றைப் பின்பற்றுதல்
- நாட்டார் வழிபாட்டில் அம்மன், வைரவர் வழிபாடுகள் பற்றியும் அவற்றுக்குரிய வழிபாட்டு முறைகள் பற்றியும் அவதானித்து, அவை பற்றி விளக்குதல்.

7.2 நாட்டார் தெய்வங்களுக்கான சடங்கு முறைகளை அவதானித்து, அவை பற்றி விபரிப்பர்.

- **நாட்டார் சடங்குகள்**

- நாட்டார் தெய்வ வழிபாட்டில் பின்பற்றப்படும் பல்வேறு சடங்கு முறைகள் பற்றிக் குறிப்பிடல்
- சடங்குகளை அவதானித்து, அவை பற்றி விபரித்தல்
- சடங்குகளுடன் தொடர்புடைய தகவல்களைச் சேகரித்து, அவை பற்றி எடுத்துக் கூறுதல்.
- வெவ்வேறு தெய்வங்களுக்கான சடங்கு முறைகளை இனங்காணல்
- சடங்கு முறைகளில் பின்பற்றப்படும் பிராந்திய வேறுபாடுகளைக் கண்டறிதல், ஒப்பிடுதல்

சடங்கு முறைகள்: (உ-ம்)

- நோற்புக் கட்டல்
- சந்தனக் காப்பிடல்
- கரகம் பாலித்தல்
- மடை பரவல்
- தெய்வமாடல்
- பூப்பந்தல் ஆடல்
- காவியம்/தாலாட்டுப்பாடல்
- வழக்குரை
- குளிர்த்தி பாடல்
- பொங்கல்
- தீமிதிப்பு

7.3 நாட்டார் தெய்வ வழிபாட்டில் இடம்பெறும் சடங்கு நிலைப்பட்ட அரங்கில் நிகழ்த்து கலைகளை இனங்காண்பர்.

- சடங்கு நிகழ்த்து கலைகள்

- பல்வகைப்பட்ட சடங்கு நிலைப்பட்ட அரங்கில் நாட்டார் நிகழ்த்து கலைகளைப் பற்றி விபரித்தல்.
  (கொம்பு விளையாட்டு, வசந்தன் கூத்து, கரகாட்டம், காவடி, உடுக்கை, பறை, தப்பு, கும்மி)
- சடங்கு நிலைப்பட்ட அரங்கில் நாட்டார் நிகழ்த்து கலைகளை ரசிக்கும், மதிக்கும் மனப்பாங்கினை வளர்த்தல்

8.0 ஈழத்துச் சைவமரபினை பேணிக்காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வார்.

8.1 ஈழத்துச்சைவ மரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை ஆதாரத்துடன் முன்வைப்பர்.

- ஈழத்துச் சைவமரபு

- புராண, இதிகாசங்களை ஆதாரமாகக் கொண்டு ஈழத்துச் சைவ மரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை விளக்குதல்.
- தொல்பொருட்களைச் சான்று காட்டுதல்
- பிறநாட்டார் செய்திகளினூடாக சைவமரபின் வரலாற்றை இனங்காணல்
- இலக்கியங்கள் வாயிலாக வரலாற்றுச் செய்திகளை முன் வைத்தல்.

8.2 ஈழத்துச் சைவ ஆலயங்களையும் அவற்றின் சிறப்பம்சங்களையும் விபரிப்பர்.

- ஆலய வகைகளையும் அவற்றின் பல்வேறு அம்சங்களையும் பகுத்து ஆராய்தல், அவை பற்றி விபரித்தல்.

- **ஈழத்து சைவ ஆலயங்கள்**

**விநாயகர் ஆலயங்கள்**

- மாமாங்கப் பிள்ளையார் ஆலயம்
- பறாளை விநாயகர் ஆலயம்



இலவச விநியோகத்திற்காக

- **சிவாலயங்கள்**
- கொக்கட்டிச்சோலை தன்தோன்றீஸ்வரர் ஆலயம்
- ஓட்டுசுட்டான் தான்தோன்றீஸ்வர் ஆலயம்
- **முருகன் ஆலயங்கள்**
- மண்டூர் கந்தசுவாமி ஆலயம்
- நல்லூர் கந்தசுவாமி ஆலயம்

8.3 ஈழத்துச் சைவ இலக்கிய மரபுகளை இனங்கண்டு, விளக்கம் பெறுவர்.

- ஈழத்தில் எழுந்த சமய இலக்கியங்களுள் விரத மகிமை கூறும் புராணங்களை இனங்காணல், அவை பற்றிய விடயங்களை விபரித்தல்.

- **ஈழத்துச் சமய இலக்கியங்கள்**
  - சிவராத்திரி புராணம்
  - ஏகாதசிப் புராணம்
  - தல மகிமை கூறும் புராணங்கள் பற்றி விளக்குதல்
  - திருக்கரைசைப் புராணம்.

8.4 ஈழத்துச் சைவ நிறுவனங்களையும் அவற்றின் பணிகளையும் பகுப்பாய்வு செய்வர்.

- **ஈழத்துச் சமய நிறுவனங்கள்**
  - ஈழத்தில் சைவக் கல்விப் பாரம்பரியத்திற்கும், அதன் வளர்ச்சிக்கும் சைவ வித்யா விருத்திச் *சங்கம் ஆற்றிய* பணிகளை மதிப்பிடுதல்.
  - ஈழத்தில் இராமகிருஷ்ண மிசனின் வரலாறு, அவற்றின் பணிகளை இனங்காணல்.

9.0 சமய வாழ்க்கைக்கும் சூழலுக்கும் இடையிலான தொடர்பினை விருத்தி செய்வதற்கான முயற்சியில் ஈடுபடுவர்.

- **சமயமும் சூழலும்**
  - இளைஞர்கள், சைவ அமைப்புகளோடு ஒன்றிணைந்து ஆலயச் செயற்பாடுகளில் பங்கு கொள்ளல், சுற்றுச் சூழலைப் பாதுகாத்தல்.
  - ஆலயம், பாடசாலை, பொது இடங்களில் சிரமதானம் மேற்கொள்ளல், அவ்விடங்களைப் பாதுகாத்தல்
  - சமயச் சுற்றுலாக்களை மேற்கொண்டு, தல மகிமைகளைத் தொகுத்தல்
  - ஆலயங்கள் தமது பாரம்பரிய உரிமைச் சின்னங்கள் என்பதை உணர்ந்து, அவற்றைப் பாதுகாப்பதற்கான செயற்பாடுகளை மேற்கொள்ளல்.

10.0 பிற சமயத்தவர்களது சமய, கலாசார பண்பாடுகளுக்கு மதிப்பளிப்பர்.

வேற்றுமையில் ஒற்றுமை காணல்

- பிற சமய மக்களுடன் சுமுகமான உறவை வளர்த்தல்
- விழாக்களை அறிந்து, அவற்றிற்கு மதிப்பளித்தல்
- வழிபாட்டு இடங்களுக்கு மதிப்பளித்தல்
- தேசியத்தையும் ஐக்கியத்தையும் கட்டியெழுப்பும் செயற்பாடுகளில் ஈடுபடல்

# සිංහල වර්ණ මාලාව

අ ආ ඇ ඈ ඉ ඊ

උ ඌ ඍ ඎ ඏ ඐ

එ ඒ ඓ ඔ ඕ ඖ

(අ)ං (අ)ඃ

ක ඛ ග ඝ ඞ ඟ

ච ඡ ජ ඣ ඥ ඦ

ට ඨ ඩ ඪ ණ ඬ

ත ථ ද ධ න ඳ

ප ඵ බ භ ම ඹ

ය ර ල ව

ශ ෂ ස හ ළ ෆ

